# ஸல்வார்-கமீஸ் தரும் எழில்மிகு தோற்றம்!

இதற்கு பாம்பே டையிங் அளிக்கும் விதவிதமான துணி வகைகள்தான் எத்தனை! கொள்ளை அழகு மிளிரும் அற்புதமான ப்ரின்டுகளிலும், கலர்களிலும் பாப்ளின், 'டெரீன்'/காட்டன், லான் முதலியவை. எந்த சந்தர்ப்பத்திலும்...எந்த நேரத்திலும் பாம்பே டையிங் துணியிலான ஸல்வார்-கமீஸ் அணியுங்கள்...உங்கள் அழகுத் தோற்றத்தை எல்லோரும் பாராட்டுவார்கள்!



*Model: Courtesy, Air-India*

JWT-BD-5280

# பாம்பே டையிங்

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: மெஸ்ஸர்ஸ் கிஷின்சந்த் செல்லாராம் (இந்தியா) பிரைவேட் லிமிடெட், 3/4, கிடங்கு தெரு, மதராஸ்-1

கொழுத்த, சுவையான கோழிக் குஞ்சுகள், அடுப்பில் ஜோராக வறுத்தது. உங்கள் விருப்பப்படி உருளைக்கிழங்குடன் தரப்படுகிறது. உங்களுக்கு பிடித்தமான பச்சடி, உங்கள் குடும்பத்திற்கும் திடீர் விருந்தாளிகளுக்கும் நொடியில் சாப்பாடு தயார். இவ்வளவும் ஒரு விநாடியில் சிரமமின்றி மின்விசையால்—பஜாஜ் சமையல் சாதனங்களின் உதவியுடன் தயாராகிறது விசையைத் தட்டி விடுங்கள், பத்தாம்பசலி அடுப்புகள், குமட்டிகளை வைத்துக் கொண்டு அவதிப்பட வேண்டாம். நேரம் எவ்வளவு மிச்சம்! அனுபவிக்க எவ்வளவு ஓய்வு.

நவீன வாழ்வுக்கு பஜாஜ் சாதனங்களுடன் திரும்புக பஜாஜ் வியாபாரிகளின் ஷோ ரூமில் விரைவில் நுழையுங்கள்.
அடுப்பும் இறைச்சி வேகவைக்கும் கம்பி வலையும் கூடியது ○ மின் தட்டுகள் ○ பிரெஷர் குக்கர்கள்—டோஸ்டர் ○ காப்பி வடிகட்டி ○ டீ கெட்டில் பழக்கலவை—இன்னும் பலப்பல விரைவில் வருபவை.

**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**
45-47, வீர்நரிமன் ரோடு, பம்பாய்-1
இந்தியா முழுவதிலும் கிளைகளுண்டு.

# நவீன வாழ்வுக்கு பஜாஜ் சாதனங்களுடன் திரும்புக



சமையலறை அமைப்பு உதவி—ராஜ் மாடர்ன் கிச்சன் எக்யிப்மெண்ட்ஸ் பிரைவேட் லிட்.

# B·I



# S. S. ரஜுலா

சென்னையிலிருந்து

1966 டிசம்பர் 24 | 1967 ஜனவரி 17

சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

**C. M. குட்டி**
புரொப்ரைட்டர்: குட்டி டிராவல் சர்வீஸ்
38, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை-1

**மெஸர்ஸ் கோனா டிராவல்ஸ்**
மாஸ்காட் ஹோட்டல்
திருவனந்தபுரம்

நாகப்பட்டினத்திலிருந்து

1966 டிசம்பர் 25 | 1967 ஜனவரி 18

நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம்

**மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினாங்கு போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:

**பின்னி & கம்பெனி லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

**மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

ஏஜண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

# கல்கி



## பொருளடக்கம்

பராபவ, கார்த்திகை 26 - டிசம்பர் 11



அட்டைப்படம்: ஹாரிமில்லர்

# ராஜாஜி மலர்

**நினைவுத் திரையில்...**

சென்னை மாகாணத்தின் மாஜி கவர்னர் எர்ஸ்கின் சொல்கிறார்:

"நான் சென்னை கவர்னராக இருந்த போது இரண்டு வருஷம் ராஜாஜி பிரதம மந்திரியாக இருந்தார். அந்தக் காலத்தில் நாங்கள் அடிக்கடி சந்தித்துப் பல விஷயங்களைப் பற்றிக் கலந்து யோசிக்க வேண்டி யிருந்தது. இந்த விவாதங்களினால் ராஜாஜி ஏதேனும் பலன் அடைந்தாரா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் நான் அளவற்ற பயன் அடைந்தேன் என்பது நிச்சயம்."

நம்முடைய ராஜாஜியின் பெருமையை நாம் அறிவதற்கு இம்மாதிரி பிறருடைய அத்தாட்சி வேண்டியதில்லை. ஆயினும் நம் மனத்தில் உள்ளதையே பிறர் யாராவது சொன்னால் ஒரு தனி மகிழ்ச்சி உண்டாகத்தான் செய்கிறது.

— 'கல்கி' ஆகஸ்டு, 22, 1948



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


இலங்கையில் 35 சதம்: தபால் செலவு தனி




1967
காங்கிரஸ்
பயங்கரக் கனவு!


"பிச்சை போட
மறுக்கிறாயா?—
அப்படியானால்
பிடி சாபம்!"
இந்திய
சர்க்கார்


PK

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 ■ இதழ் 19



# கைம்மாறு செய்திடுவோம்

இந்த டிசம்பர் எட்டாந் தேதி எண்பத் தொன்பதாம் பிராயத்தில் அடிஎடுத்து வைக்கும் பீஷ்மபிதாமகர் ராஜாஜியை வணங்குகிறோம்.

எத்துணையோ குண நலன்களைப் பெற்றுள்ள ராஜாஜி அடக்கத்தின் பெட்டகமாக இருப்பது அவரது தனிப்பெருமை. எதையும் மிகைப்படுத்தும் இந்தக் காலத்துக்கே ஓர் ஔஷதமாக அவர் எப்போதும் சமநிலையைக் காத்து அடங்கி இருந்து அமரருள் உய்ந்திருக்கிறார். உணர்ச்சியைத் தூண்டும் அரசியல் உலகில் பகுத்தறிவு ஒன்றையே பின்பற்றும் அவரது தீரம் அதிசயமானது. பகுத்தறிவு வழி சென்ற போதும் அவர் நம்பிக்கையின் உருவாயிருப்பது அதனினும் அதிசயம்.

ராஜாஜி யார் என்று உள்ளபடி சொல்வது கடினம். ஆனால் அவர் யாராக இருக்க முடியாது என்று சத்தியமிட்டுச் சாற்றுவது சுலபம். காந்தியடிகள் ஹரிஜனப் பணி தொடங்கு முன்பே சேலம் நகரசபைத் தலைவராக ஹரிஜன சமத்துவத்துக்கு அடிகோலிய ராஜாஜி, ஆலயப் பிரவேச இயக்கத்தின் பிரதம தளபதியாக இருந்த ராஜாஜி, மதுவிலக்குத் திட்டத்தின் மாபெரும் காவலரான ராஜாஜி, பண்ணையாள் நலச் சட்டங்களின் சிருஷ்டிகர்த்தரான ராஜாஜி — ஒரு போதும் பணக்கார வர்க்கத்துக்கோ, அல்லது சமூக அந்தஸ்தில் உயர்ந்த ஒரு வகுப்பினருக்கோ மட்டும் கட்சி நடத்த முடியாது. புல் பூண்டு உட்படப் பிரபஞ்ச உயிரினம் அனைத்தையும் அணுக் கதிர்வீச்சிலிருந்து காப்பதற்கு அயராது உழைக்கும் ராஜாஜி ஒருகாலும் குறுகிய சாதி வர்க்க இயக்கங்களுக்குத் தலைமை தாங்க முடியாது. இந்த உண்மையை மறப்பது பாவம்; திரிப்பதோ படுபாதகம்.

ராஜாஜி செய்யும் காரியங்களுக்கும் எண்ணும் சிந்தனைகளுக்கும் மேலாகத் தனித்து நிற்கும் இன்னொரு ராஜாஜியைப் பற்றி மவுன்ட்பேட்டன் பிரபுவும், ஸைமன்ஸ் அவர்களும் இவ்விதழில் அற்புதமாக எழுதியிருக்கிறார்கள். தனித்து நிற்கும் அந்த ராஜாஜியை நாம் மானசிகமாக வணங்குகிறோம். ஆனால் இந்த வணக்கம் மட்டும் போதுமா? தனித்து நில்லாமல், உலகத்தோடு ஒட்டி, உலகுக்காகச் சிந்தித்துச் செயலாற்றி வழிகாட்டும் அந்த மற்றொரு ராஜாஜியின் அடிச்சுவட்டில் நாமும் செயலாற்ற வேண்டியதே இப்போது அவசியமும் அவசரமும் ஆகும்.

ராஜாஜி காட்டும் வழிதான் சரி என்பதை நமது பிடிவாத சர்க்காருமே உணர்ந்து நிலவரி நீக்கம், பல லைசென்ஸுகளின் நீக்கம் முதலியவை பற்றி நினைப்பதால் மட்டும் இதை நாம் சொல்லவில்லை. 1972ம் ஆண்டு தேர்தல் நடக்கும்போது ராஜாஜிக்கு வயது தொண்ணூற்று நாலாக இருக்கும். அந்த வயோதிகத்திலும் அவர் அரசியல் பிரசாரம் செய்கிற அவசியத்தை நாம் ஏற்படுத்தினோமாயின் நம்மை நாமே மன்னித்துக் கொள்ள முடியாது. எனவே வருகிற 1967 ஆம் ஆண்டுத் தேர்தலிலேயே நாம் சுதந்திர வழிக்காக வாக்கு அளிக்கப் பிரதிக்ஞை கொள்வதே அவருக்கு நாம் அளிக்கக்கூடிய தலைசிறந்த பிறந்த நாள் அஞ்சலியாகும். இதுவே அவருக்கு நாம் செய்கிற கைம்மாறு.

கைம்மாறு என்று சொல்லலாமா? சூரியன் பயிர் பச்சை தருகிறான் என்று கைம்மாறாக அவனுக்குப் பொங்கல் படைக்கிறோமே, அந்தப் பொங்கலை சூரியனா உண்கிறான்? நாம்தானே உண்கிறோம்? இருள் சூழ்ந்த அரசியலில் கதிரவனாக வழிகாட்டும் ராஜாஜிக்கு நாம் செய்கிற கைம்மாறும் நமக்கு நாமே செய்து கொள்ளும் உபகாரம் தான்! ராஜாஜிக்குச் செய்கிற கைங்கரியம் பாரத தேசத்துக்கே செய்த கைங்கரியமாகும்.

வேறெப்படி இருக்கமுடியும்? ராஜாஜி பாரத தேசத்தின் ஆன்ம சக்தியே அல்லவா? பாரத தேசத்தை அநாதி காலமாகக் காத்து வரும் தரும சக்தி, சத்திய சக்தி, ஆன்மிக சக்தி, அறிவு சக்தி, அன்பு சக்தி இவற்றின் முழுமைக்குப் பிரதிநிதியாக இன்று நடமாடிவரும் மூர்த்தி அல்லவோ அவர்?

# அறிவாளிகளுக்கு ஒரு வார்த்தை

வாக்காளர்களுடைய வாக்கின் சக்தியை உணர்த்த தில்லியில் ஒரு மகாநாடு இம்மாதம் 11, 12 தேதிகளில் நடைபெறுகிறது. இம் மகாநாட்டைக் கூட்டுபவர்கள் ஜயப்பிரகாஷ் நாராயண், ஸி. டி. தேஷ்முக், எம். ஸி. செதல்வாட் போன்ற பேரறிஞர்கள்.

சென்ற இருபது ஆண்டுகளாகக் காங்கிரஸ் நடத்திய ஆட்சியைக் கண்டு வெறுப்படைந்து, தேசத்தில் புதிய ஆட்சி முறை ஏற்பட வேண்டும் என்று இவர்கள் உறுதியாக நம்புகிறார்கள். அந்தப் புதிய ஆட்சி முறையை ஏற்படுத்தும் சக்தி வாக்காளர்களுக்கு இருப்பதால், அவர்கள் தங்கள் வாக்குச் சக்தியைப் புரிந்து கொண்டு உபயோகிக்க வேண்டும் என்று சுற்றி வளைத்து, சொல்லாமல் சொல்கிறார்கள். வாக்காளர்களுக்குத் தமது பொறுப்பை உணர்த்த இம்மகாநாடு கூட்டப்படுகிறது. இச்சமயத்தில் வாக்காளர்களுக்குப் பொறுப்பைக் கற்பிக்க விரும்பும் அறிவாளிகளின் பொறுப்பையும் எடுத்துக் காட்ட ஆசைப்படுகிறோம்.

மகாநாட்டைக் கூட்டும் இந்த அறிஞர்களில் பலர் சுதந்திரக் கட்சியின் கொள்கைகளை நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு ஒப்புக் கொள்பவர்கள். இவர்கள் அத்தனை பேரும் சுதந்திரக் கட்சியில் சேர்ந்து வேலை செய்தால் தேசத்துக்கு மகத்தான தொண்டு செய்தவர்களாவார்கள்.

ஆனால் இவர்களுக்கெல்லாம், 'கட்சி அரசியலில் மாட்டிக் கொள்வதா? அது சகதியாயிற்றே!' என்று எண்ணம். ஒதுங்கியே இருந்து விடுகிறார்கள்.

வண்டிச் சக்கரம் சகதியில் மாட்டிக்கொண்டது என்றால் சகதியில் இறங்கி வண்டியைத் தள்ளினால்தான் சேற்றிலிருந்து விடுவிக்க முடியுமே தவிர வேறு வழியில்லை.

அறிவாளிகள் எல்லாரும் ஒதுங்கியிருந்து, வாக்காளர்களை மட்டும் கடமையைச் செய்யுங்கள் என்றால் என்ன பிரயோசனம்? மக்கள் சபையிலும் ராஜ்ய சபைகளிலும் வெறும் கைதூக்கிப் பொம்மைகளாக இருப்பவர்கள் வந்து சேராமல் தமக்கெனக் கருத்துள்ளவர்கள் இடம் பெற வேண்டாமா?

தேசம் இன்று தவறான பாதையில் சென்று கொண்டிருக்கிறது என்றால் அதற்குக் காரணம் அறிவாளிகள், படித்தவர்கள் தங்கள் கடமையைச் செய்யத் தவறி விட்டதே! வாக்காளர்களை மட்டும் குறை சொல்லிப் பயனில்லை.

இன்று நம் நாட்டில் உள்ள அறிஞர்களுக்கும், பெரியோர்களுக்கும், அவர்களது கடமையை உணர்த்தவே ராஜாஜி சுதந்திரக் கட்சியைத் தோற்றுவித்தார்.

கட்சி அரசியல் முறையுள்ள ஜனநாயகமே நமது ஆட்சி முறை என்று ஏற்பட்டு விட்ட பிறகு, கட்சியின் அடிப்படையிலேயே செயல்பட வேண்டியது நமது கடமையாகி விட்டது. நாட்டிலுள்ள காங்கிரஸ், பிரஜா சோஷலிஸ்ட், சோஷலிஸ்ட், கம்யூனிஸ்ட் ஆகிய எல்லாக் கட்சிகளுமே சோஷலிஸத்தைத் தங்கள் குறிக்கோளாகக் கொண்டு விட்ட பிறகு, அதற்கு மாறுபட்ட கருத்தையும், லட்சியத்தையும் கொண்ட கட்சி நன்கு செயல்பட்டால்தான் சட்டசபைகளில் மாறுபட்ட அபிப்பிராயம் வெளிப்பட வாய்ப்பிருக்கும் என்று சுதந்திரக் கட்சி தோற்றுவிக்கப்பட்டது. என்றாலும் சுதந்திரக் கட்சியும் ஓர் அரசியல் கட்சிதானே, அதற்குள் அகப்பட்டுக் கொள்ள வேண்டாம் என்று கருத்துக் கொண்டிருந்தால் அதைப் போன்ற தவறு வேறில்லை.

ராஜாஜி, என். ஜி. ரங்கா, எம். ஆர். மஸானி, தண்டேகர், பாயிலால் பாய், சா. கணேசன், ஜி. கே. சுந்தரம் போன்ற அப்பழுக்கற்றவர்களுடன் சேர்ந்து வேலை செய்யவும் இவர்களுக்கு பலமளிக்கவும் நாட்டிலுள்ள படித்தவர் தயங்க வேண்டியதே யில்லை.

சமீப காலத்தில் தி. மு. க. தலைவர் திரு அண்ணாதுரை அவர்களும் படிப்பாளிகள், அறிவாளிகள் அரசியலில் பங்கு பற்றி ஜனநாயகத்தைக் காக்க உதவ வேண்டும் என்று பல கூட்டங்களில் கோரி வருகிறார்.

மூட நம்பிக்கைகள் பலவிதம். அதில் ஒன்று அரசியல் கட்சியில் சேர்ந்து பணியாற்றுவது தவறு என்பதாகும். பாமரர்களின் மூட நம்பிக்கையையாவது மாற்றி விடலாம்; படித்தவர்களின் மூடநம்பிக்கையை மாற்றுவது கடினம் என்ற அவப்பெயருக்குப் பாரத நாட்டு அறிவுலகம் வருகிற தேர்தலில் இடந்தராது என்று நம்புகிறோம்.

# என்ன சேதி?

- புது மேயர்
- நடைபாதை வியாபாரம்
- அழகிக்கு அநுதாபம்

துடிதுடிப்பும் இளமையும் நீண்ட கால நகரசபை அநுபவமும் கொண்ட திரு இரா. சம்பந்தம் அவர்கள் புது மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதை அறிந்து மகிழ்கிறோம். மழையாலும் புயலாலும் மாநகரம் பாதிக்கப்பட்டுள்ள சமயத்தில் மேயர் தேர்தலும் நடந்திருக்கிறது. இவருடைய பதவிக் காலத்தில் நகர அபிவிருத்திக்குச் சீரிய முயற்சி எடுக்கப்படும் என்று நம்புவோமாக!

துணைமேயராக வந்துள்ள திரு டி. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் நீண்ட கால நகரசபை அநுபவம்பெற்றவர். இவரும் பரந்த எண்ண

மும் செயலாற்றும் திறமையும் கொண்டு மேயரின் நற்பணிகளுக்கு உறுதுணையாயிருப்பார் என நம்பி வாழ்த்துகிறோம்.

மேயர் தேர்தல் விவகாரத்தில் சென்னை நகரசபை காங்கிரஸ் கட்சியினர் நடந்து கொண்ட விதம் மிகவும் வெட்கக்கேடானதாகும். எண்பதாண்டுகள் வாழ்ந்த ஓர் அகில இந்தியக் கட்சிக்குப் பெரும் இழுக்கைத் தேடித் தரும் வகையில் அவர்கள் நடந்துகொண்டார்கள். மேயர் தேர்வுக்குத் தி.மு.க அங்கத்தினர் ஒருவரைக் காங்கிரஸ் அங்கத்தினர்கள் பிரேரேபித்து, ஆதரித்து நிறுத்தினர். தங்கள் கட்சி அங்கத்தினரை நிறுத்தியிருந்தால் யாரும் எதுவும் சொல்வதற்கு இல்லை. ஆனால் தி.மு.கவின் மேலிடத்து அங்கீகாரம் பெற்ற நபருக்கு எதிராக அதே தி.மு.கவின் வேறோர் அங்கத்தினரைக் காங்கிரஸார் பிரேரேபித்து, ஆதரித்து நிறுத்தியதற்குத் தி.மு.கவில் பிளவு உண்டாக்கி, பலவீனப்படுத்த வேண்டும் என்ற கீழ்த்தரமான நோக்கத்தைவிட வேறு என்ன காரணம் இருக்க முடியும்? பொதுத் தேர்தல் நெருங்கி வர வர காங்கிரஸுக்குக் கிலியும் அதிகரித்து வருகிறது. போதும்! பஞ்ச தந்திரத்தில் ஒரு தந்திரம் மித்ரபேதம் என்பது. அதாவது நண்பர்களுக்குள் பகை மூட்டி விட்டு, தங்கள் காரியத்தைச் சாதித்துக் கொள்வது. இதை ஜனநாயக அரசியலில் புகுத்துகின்றனர்.



மேயர் திரு இரா. சம்பந்தம்

நல்லவேளை! தி.மு.க. அங்கத்தினர்கள் இந்த வலையில் விழாமல், கட்சி பொரிக செய்த அங்கத்தினர் திரு இரா. சம்பந்தம் அவர்களைத் தேர்ந்தெடுத்ததைப் பாராட்டுகிறோம். இதே போல் இனி தொகுதி தொகுதியாகப் போய் சுதந்திரக் கட்சி, தி. மு. க., முஸ்லிம் லீக் கட்சிகளுக்கிடையே மித்ர பேதம் உண்டாக்கக் காங்கிரஸார் முயல்வார்கள். ஏமாறாமல் இருக்க வேண்டும் என்று சம்பந்தப்பட்ட கட்சி அங்கத்தினர்களை எச்சரிக்கிறோம்.

சென்ற பத்தொன்பதுமாதங்களில் 80,000 நடைபாதை வியாபாரிகள் தண்டிக்கப்பட்டிருக்கின்றனர். அவர்கள் அபராதமாகப் பத்து லட்சம் ரூபாய் அரசாங்கத்துக்குச் செலுத்தியிருக்கின்றனர். இருப்பினும் சென்னை நகர நடைபாதை வியாபாரம் ஜாம்ஜாம் என்றுதான் இன்னமும் நடைபெற்று வருகிறது.

இதிலிருந்து நடைபாதை வியாபாரத்தைத் தடுக்கத் தாங்கள் எடுத்த நடவடிக்கை படுதோல்வியடைந்துள்ளது என்பதைத்தான் அரசாங்கம் ஒப்புக்கொள்ள வேண்டும்.

கடைகளில் விற்கும் விலையை விடச் சற்றுக் குறைவான விலையில் இவர்களிடம் வாங்க முடிவதால்தான் பாதசாரிகள் இவர்களிடம் வாங்குகிறார்கள். இது மக்களின் பழக்கப்பட்டுப் போன மனோபாவமாகிவிட்டது. இப்பழக்கத்தை மாற்ற வேறு வழிகளைத்தான் அரசாங்கம் நாட வேண்டும். அதை விட்டு, நடைபாதை வியாபாரிகளுக்கு அபராதம் விதித்துத் தண்டித்து வருவது சரியல்ல. மக்கள் யோக்கியமாக வியாபாரம் செய்து பிழைக்க வகையும் வாய்ப்பும் அளிக்காத அரசாங்கம், தாங்களாகவே அவர்கள் தேடிக் கொண்ட வேலையையும் கெடுக்கலாமா?



உதவிமேயர் திரு கிருஷ்ணமூர்த்தி

அழகிப் போட்டிபற்றி நமது கருத்து எதுவாயினும் இந்தியப் பெண்ணான குமாரி ரீடா பாரியா உலக அழகியானதில் பலர் பெரு மகிழ்ச்சி கொண்டிருக்கிறார்கள். அதற்குள் அப்பெண்ணிடம் அநுதாபம் கொள்ளும்படியான நிலை ஏற்பட்டுவிட்டது. குமாரி ரீடா தென் வியட்நாம் போகத் தீர்மானித்ததை இந்திய அரசாங்கம் விபரீதமாக எடுத்துக் கொண்டு ஆட்சேபம் தெரிவித்து, அந்தப் பெண்ணை வெலவெலக்க வைத்திருக்கிறது! எக்கட்சியும் சேராக் கொள்கையை நாம் கடைப்பிடிப்பது உண்மையாயின் அரசாங்கம் ஆட்சேபிக்க இடமில்லை. நமது வெளிநாட்டுக்கொள்கை கம்யூனிஸ்ட் நாடுகளின் சார்பானதே என்பது இப்போது மீண்டும் தெளிவாகிறது.

★

1947ல் நாம் சுதந்திரம் பெற்றோம். ஆனால் ஒருசில ஆண்டுகளுக்குள்ளாகவே அதைப் பெர்மிட் லைசென்ஸ் ஆட்சியிடம் இழந்துவிட்டோம். பெர்மிட் — லைசென்ஸ் ஆட்சியிடமிருந்து தேசத்தை மீட்டு, மீண்டும் இந்தியாவை இந்தியாவாக்கத் தருணம் வந்துவிட்டது.

★

''நாட்டில் உள்ள நெசவுப் பஞ்சாலைகளை மூட இந்தியப் பஞ்சாலை சம்மேளனத்துக்கு அதிகாரம் கிடையாது'' என்று வர்த்தக மந்திரி சொன்னார். நீண்ட காலம் அதிகாரத்தை அநுபவித்த ஆட்சியாளரின் ஏதேச்சாதிகாரம் இப்படித்தான் குரல் கொடுக்கும். சம்மேளனத்துக்குப் பஞ்சாலைகளை மூட 'அதிகாரமில்லை' என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அதிகாரத்தைக் காட்டி அது மூடச் சொல்லவில்லை. உற்பத்தியாளர்கள் உணருகின்ற ஒரு காரணத்துக்காகவே, சுயேச்சையான இணக்கத்துடன் ஆலைகளை மூடவேண்டும் என்பதுதான் சம்மேளனம் கோருவது. சர்க்காரின் விருப்பம் எதுவாயினும் பஞ்சு இல்லாமல் நெசவாலைகள் இயங்க முடியாது என்பது வெளிப்படை.




★

சீனத்தை ஐ. நா.வில் அநுமதிப்பதற்கு ஐ. நா. பொதுச் சபை மறுத்துவிட்டது. சபையில் மூன்றில் இரு பங்கினர் ஒப்பினால் தான் சீனத்தை அநுமதித்திருக்க முடியும். அவ்வளவு ஆதரவு இப்போது கிடைக்கவில்லை. முன் எப்போதையும் விட இம்முறை சீன அநுமதிக்கு எதிராக அதிக வோட்டுகள் அளிக்கப்பட்டிருக்கின்றன.

எல்லா வகை அணு ஆயுதங்களையும் தடை செய்யும் யோசனையைப் படைபலக் குறைப்பு மகாநாடு பரிசீலிக்க வேண்டுமென ஐ. நா. பொதுச் சபை சிபாரிசு செய்திருக்கிறது. விஷப் புகை கக்கி யுத்தம் செய்வது சர்வதேசப் போர் நெறிக்கு விரோதமாகக் கருதப்படுகிறது. அணு ஆயுதங்களை வெடிப்பதையும் இதே ரீதியில் அணுக வேண்டும் என்பது யோசனை.

★

இந்தியாவில் அமெரிக்கத் தூதராக உள்ள செஸ்டர் பௌல்ஸ் அவர்கள் 'அமெரிக்கன் ரிப்போர்டர்' (நவம்பர் 23) இதழில் பின் வருமாறு எழுதியிருப்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன்.

நமது (அமெரிக்காவின்) வெளி நாட்டுக் கொள்கைக்கு இந்தியாவின் ஆதரவைப் பெற வேண்டும் என்பதற்காகவே இந்தியாவுக்கு அமெரிக்கா உதவி அளிக்கிறது என்று சில சமயங்களில் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது.

இது பொறுப்புணர்ச்சி இல்லாமல் செய்யப்படும் குற்றச்சாட்டு. இதற்கு உண்மையில் ஓர் ஆதாரமும் இல்லை.

இந்திய சர்க்கார் மிகவும் தீவிரமாகவும்—என் அபிப்பிராயத்தில் நியாயமில்லாமலும்—அமெரிக்காவின் வியட்நாம் கொள்கையைக் கண்டித்து வருகிறது. நாம் (அமெரிக்கா) ஐக்கிய நாடுகளில் சீனம் இடம் பெறுவதை ஆட்சேபிக்கும்போது இந்தியா அதை ஆதரித்திருக்கிறது. இன்னும் வேறு பல சர்வதேசப் பிரச்னைகளிலும் இந்திய சர்க்கார் நமது கருத்துக்கு மாறான கருத்துக் கொண்டிருக்கிறது. எனவே, அமெரிக்கக் கொள்கைக்கு இந்திய ஆதரவை 'விலை கொடுத்து வாங்க' அமெரிக்கா முயற்சி செய்தது என்று வைத்துக்கொண்டால், அம்முயற்சி படுதோல்வி அடைந்தது என்பது தெளிவு.

வேறு சில சந்தேகக்காரர்கள், இந்தியாவின் நன்றியைப் பெறவே ஒரு சிக்கலான, கீழ்த்தரமான முறையில் அமெரிக்கா உதவித் திட்டம் போடுகிறது என்று குற்றம் கூறுகிறார்கள்.

மேலே சொன்னது போல் இதற்கும் ஆதாரம் கிடையாது. உண்மையில் இந்தியாவே உணவு உதவி எங்கிருந்து கிடைக்கிறது என்பதை மங்கச் செய்ய முயல்கிறதோ என்று சில சமயங்களில் தோன்றுகிறது. உதாரணமாக, இந்த ஆண்டில் மட்டும் இந்தியத் துறைமுகங்களில் அமெரிக்க தானியத்தை இறக்கச் சென்ற 700 கப்பல்கள் 'அமெரிக்கக் கோதுமை'யை எடுத்து வருவதாகச் சொல்லப்படுவதில்லை. அவற்றின் சரக்கு வெறுமனே 'இறக்குமதிக் கோதுமை' என்றே சொல்லப்படுகிறது.

இப்படியிருக்க இந்தியா வெளிநாடுகளிலிருந்து பெறும் உதவியில் ஐந்தில் மூன்று பங்கை அமெரிக்க மக்கள் அளிப்பது ஏன்? கடந்த பதினைந்து ஆண்டுகளாக இந்தியாவுக்கு அமெரிக்க உதவி அளிப்பதற்கு ஒரே ஒரு நேரான, தெளிவான நோக்கம்தான் உண்டு. இந்தியா பொருளாதாரத்தில் தன்னிறைவு பெறவும், அரசியலில் உயிர்ப்புடன் வாழவும் உதவி செய்ய வேண்டும் என்பதே அந்த நோக்கம். இப்படிப்பட்ட இந்தியா உலக சமாதானத்துக்கு மகத்தான பணி புரிய முடியும். கம்யூனிஸ—பாஸிஸ சர்வாதிகாரத்தால் சாதிக்க முடியாத சுபிட்சமும் சுதந்திரமும் வாய்ந்த சமூகத்தை ஜனநாயகத்தின் மூலம் சாதிக்கலாம் என்பதை இந்தியா, பொருளாதார அரசியல் வளர்ச்சி பெற்றால் ஆசிய—ஆப்பிரிக்க — லத்தீன் அமெரிக்க மக்களுக்கெல்லாம் நிரூபித்துக் காட்ட முடியும்.

அமெரிக்க உதவியின் நோக்கம் இவ்வளவு எளியது; நேர்மையானது.

★

ஈசுவரன் கண்ணுக்குத் தெரியவில்லை. எனினும் காண்கிற பக்குவம் பெற்றோமாயின் அவன் ஸ்தூலமாகவே நம் முன் இருக்கிறான். கண்ணுக்குத் தெரியும் பிரபஞ்சம் அவனே என்று காண்போம். 'காண முடியாதவன்; காணப்படும் உருவமும் அவனே — அத்ருச்ய: வ்யக்த ரூபச்ச' என்று இதையே மகாபாரதம் சொல்கிறது. பௌதிகமான, மானசிகமான, ஆன்மிகமான பல அம்சம் கொண்ட விஸ்தாரமான விசுவம் — ஜடப் பொருள், சக்தி, சிந்தனை, உணர்ச்சி இவை யாவும் — காண இயலாத மகத்தான ஏதோ ஒன்றிலிருந்தே வந்தவை. அந்த ஏதோ ஒன்றுதான் நாம் கண்ணாலும் மற்ற கருவிகளாலும் கண்டுள்ள, காண்கிற, காணப் போகிற எல்லாமாகவும் தன்னைப் பகுத்துக் கொண்டிருக்கிறது. தன்னை இவ்வாறு பகுத்துக் கொண்ட பின்பும் அந்த ஏதோ ஒன்று முழுமை குன்றாமலே இருக்கிறது.

ஓம் பூர்ணம் அத: பூர்ணம் இதம்
பூர்ணாத் பூர்ணம் உதச்யதே |
பூர்ணஸ்ய பூர்ணம் ஆதாய பூர்ணம் ஏவ
அவசிஷ்யதே ||

உலகின் காரண வஸ்து பூரணம்; உலகமும் பூரணம். அந்தப் பூரணத்திலிருந்து இந்தப் பூரணம் உண்டாயிற்று. அதன்பின்பும் அந்தக் காரண வஸ்து பூரணமாகவே இருக்கிறது. அதனிடமிருந்து பிறந்த உலகை ஆளும் சக்தியாகவும் அது இருக்கிறது. அதற்கே மனித குலத்தின் பல இனங்களும் பல பெயர்களைச் சூட்டியுள்ளன. 'கடவுள்' என்பது இவற்றில் மிகப் பரவலான பெயர்.

ஒன்றேயான கடவுள் பலவாகப் பிரிந்தார். பிரிவுபடுத்திய சக்தியே பிரிந்த பகுதிகளை இயற்கையாக ஒன்றோடொன்று மீண்டும் சேர்க்க ஓர் ஆகர்ஷணத்தை உண்டாக்கிற்று. அனைத்தையும் ஒன்று சேர்க்கும் அச்சக்தி மகத்தானது. இந்தச் சக்திதான் அன்பு. அன்பிலிருந்து பிறப்பது இன்பம். இதோடு நின்றிருந்தால் உலகம் முழுவதும் மீண்டும் ஒன்றுபட்டு லீலை விரைவிலேயே முடிந்திருக்கும். அப்படி முடியக் கூடாதென்றே எதிரிடைச் சக்திகள் சிருஷ்டிக்கப்பட்டன. இவையே கோபம், பகை, தீமை முதலியன. இவற்றின் காரணமாக மூலத்திலிருந்து பிரிந்த பகுதிகள் ஒன்றிலிருந்து ஒன்று விலகிக் கொள்ளலாயின. அப்படி விலகுவதாலேயே, அவை மீண்டும் ஒரு காலத்தில் நெருங்கி ஒன்று சேர்வதிலுள்ள ஆனந்தம் எல்லையில்லாமல் பெருகும். இந்த ஆனந்தத்துக்காகவே எதிரிடைச் சக்திகள் உற்பத்தியாயின. அதாவது எதிரிடைச் சக்திகளும் ஒன்று சேரும் இன்பத்துக்கு உதவுபவையே. இதனால்தான் வெறுப்பு என்பதைப் பல சந்தர்ப்பங்களில் அன்பிலிருந்து பிரித்துச் சொல்ல முடியவில்லை. நன்மையைத் தீமையிலிருந்து பிரித்துச் சொல்ல முடியவில்லை. இவை அனைத்துள்ளும் மறைவாக ஒரு தர்ம விதி உள்ளது. இதன் ஒருசில துண்டுகளையே நாம் ஒரு குறிப்பிட்ட சமயத்தில் பார்க்க முடிகிறது. இதனால்தான் தீமை, பகை, பொறுமை இவையும் ஒன்றுக்கும் ஆனந்தத்தை விரிவாக்கி வளர்ப்பதற்காக ஏற்பட்ட தெய்விகமான உபாயங்கள் என்று காணத் தவறுகிறோம். இவற்றைக் கண்டு வருந்துகிறோம். ஆண்டவனின் திட்டம் இன்னமும் பகிரங்கமாகவில்லை. இன்னமும் நாம் ஆரம்ப தசையில்தான் இருக்கிறோம்; நிறைவை எய்தவில்லை. 'வாழ்வின் முடிவுக்காகத்தான் அதன் தொடக்கம் செய்யப்பட்டிருக்கிறது. அந்த முடிவின் சிறப்பை இனி மேல்தான் பார்க்க வேண்டும்' என்று மாத்யூ ஆர்னல்ட் இதைத்தான் பாடினார்.

அன்பு, அநுதாபம், சகோதர உணர்ச்சி இவற்றுக்கு மாறாகச் செல்லும் துவேஷம், தீமை, கோபம் முதலியவற்றைப் பார்க்கும் போது நாம் மனமுடையாமல் இருப்போம். தீமை என்பது நன்மையை வளர்ப்பதற்கே ஓர் ஆரம்பம். அது ஒரு லீலையின் — அல்லது திட்டத்தின் — முதல் அங்கம். அந்த லீலையை உரிய காலம் வரும் வரையில் நாம் புரிந்து கொள்ள முடியாது.

★

சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற தொழிலதிபர்களின் கருத்தரங்கை வரவேற்று 'ஹிந்து'ப் பத்திரிகை கூறிற்று:

> சர்க்கார் செலவு, சர்க்கார் முதலீடு இவை காரணமாக ஏற்பட்டுள்ள பண வீக்கம், ரூபாயின் மதிப்பைக் கடந்த பத்தாண்டுகளில் தீவிரமாக அரித்து எடுத்து விட்டது. இதனால் சேமிக்க வேண்டும் என்கிற ஊக்கமும் துண்டிக்கப்பட்டுவிட்டது. நேரடி வரி, மறைமுக வரி, தனியார் வரி, கம்பெனி வரி யாவுமே மிக உயர்த்தப்பட்டதால் புதுத் தொழில்களுக்குக் கிடைக்கக் கூடிய மூலதனம் வறண்டுவிட்டது. இவை எல்லாவற்றின் கூட்டு மொத்தமான விளைவாலும், ரூபாய் மதிப்பைக் குறைத்ததன் எதிர்பாராத விளைவுகளாலும்தான் இந்தியப் பொருளாதாரம் இன்றுள்ள மோசமான நிலைக்கு வந்திருக்கிறது.

காங்கிரஸை விட்டால் வழியில்லை என்று எண்ண வேண்டா. காங்கிரஸ் கூட்டத்திலிருந்து கொண்டு ஆட்சிக் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டிருப்பவர்களைவிட ஆட்சித் திறனில் சிறந்த நூறு வியக்திகள் இன்று நாட்டில் நிச்சயமாக இருக்கிறார்கள். இவர்களில் சிலர் பிரபலமாயிருக்கலாம்; மற்றவர்களைப் பற்றிப் பலருக்குத் தெரியாதிருக்கலாம். ஆயினும் காங்கிரஸ் இல்லாவிடினும் ஆட்சி நிர்வாகத்தைப் பற்றிக் கவலையில்லை என்பது உறுதி. தற்போதைய தேவை, மக்கள் விஷயமறிந்து வோட் செய்வதுதான். இதற்குப் பெருதவியாக, இது வரை பத்திரிகை உலகம் செய்யாத ஒன்றை இனி அது செய்ய வேண்டும். அதாவது மக்களின் மனத்தில் ஆண்டவனிடம் பயத்தை ஏற்படுத்தி அவர்கள் சரியான காரியம் செய்யுமாறு ஊக்க வேண்டும். காங்கிரஸுக்கு மக்கள் இன்று செய்யக்கூடிய சரியான கடமை அதனைப் பதவியிலிருந்து இறக்குவதுதான்.

# பிரியா விடை

ஸ்ரீமதி எம். எஸ். அவர்களுடன் லட்சோப லட்சம் 'கல்கி' வாசகர்களையும் அமெரிக்கச் சுற்றுப் பயணத்தில் இட்டுச் சென்று மகிழ்ச்சியூட்டிய ஜேம்ஸ் ஏ. ரூபின் அவர்கள் நவம்பர் 19ந்தேதியன்று இத்தொடர்க் கடிதங்களில் தமது முடிவான கடிதத்தை எழுதி அனுப்பியுள்ளார்:

சில மணிகள்தாம் ஆகின்றன — நியூயார்க்கிலுள்ள ஜே. எஃப். கென்னடி சர்வதேச விமான நிலையத்தின் 33வது வாயிலில் ஸ்ரீ கண்ணன் முன் செல்ல, ஸ்ரீ சதாசிவம், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி, விஜயா, ராதா, டி. கே. மூர்த்தி, வி.வி. சுப்பிரமணியம், விநாயகராம் ஆகியோர் லண்டன் விமானத்தில் ஏறி. ஏழு வாரங்களுக்குமுன்பு இந்தப் பெயர்களைச் சரியாக உச்சரிப்பது கூட எனக்குச் சிரமமாயிருந்தது. ஆனால் இன்று என் குடும்ப அங்கத்தினர்களின் பெயர்களைப் போலவே இவை பழகிவிட்டன. என் குடும்ப அங்கத்தினர்களின் பெயர்களைப் போலவே அன்புக்குரியனவாயும் ஆகிவிட்டன.

பழகிய உருவங்கள் ஒவ்வொன்றாக விமானத்துக்குள் மறையும்போது எனக்கு ஏற்பட்ட துயரத்தை என்னென்பேன்? கடைசி விநாடி வரை ஒருவரையொருவர் பார்த்துக் கையாட்டிச் சிரித்துக் கொண்டிருந்தோம். ஆனாலும் சிரிப்புடன் தோன்றுவதற்கு நான் எவ்வளவு சிரமப்பட்டேன்? சீக்கிரமே சென்னையில் நாங்கள் சந்திக்கப் போகிறோம் என்பதுதான் என்னுடைய கண்களின் 'நீர் வழங்கு நிலையத்தை'க் கட்டுப்படுத்தி வைத்தது.

இன்று பிற்பகல் முழுதும் ஏராளமான நண்பர்கள் எம். எஸ். குழுவினருக்கு நன்றி தெரிவிக்கவும் நல்வாழ்த்துக் கூறவும் வந்தபடி இருந்தனர். சிலர் நியூயார்க் நகரத்திலிருந்து ஒரு மணிப் பயண தூரத்திலுள்ள விமான நிலயத்துக்கு எங்களுடனேயே வந்தனர். ஸ்ரீ வி. வி. நரசிம்மன் தம்பதியர், புகழ் பெற்ற எழுத்தாளர் ஸ்ரீ ஆர். கே. நாராயண், வெஸ்லியன் சர்வகலாசாலையைச் சேர்ந்த பேராசிரியர் ராபர்ட் ப்ரௌன், கே. எஸ். நாராயணஸ்வாமி, பாலக்காடு ரகு ஆகியோர், நியூயார்க்கில் எங்களுக்கு இருக்கை தந்த டி. ஆர். துரைஸ்வாமி தம்பதியர்— இவர்கள் விமான நிலயத்துக்கு உடன் வந்தனர். விமான நிலயத்தில் இந்தியாவின் ஐ. நா. பிரதிநிதி ஜி. பார்த்தசாரதியும் மற்றும் பலரும் சந்தித்து விடை கொடுத்தனர். நியூயார்க்கில் நாங்கள் இருந்த கடைசி வாரத்தைப் பூர்த்தி செய்யும் அவ்விமான நிலயக் காட்சி இதயத்தைத் தொட்டது.

அந்தக் கடைசி வாரத்தில் இன்பமும் மகிழ்ச்சியும் நிரம்பியிருந்தன. நாங்கள் திட்டமிட்டபடி காட்சிகளைச் சுற்றிப் பார்க்க முடியாததொன்றுதான் குறை. டெலிவிஷன்—சினிமா—ரேடியோ—பத்திரிகைப் பேட்டிகளிலேயே எங்களுடைய காலமெல்லாம் செலவாகி விட்டது. ஒரு நாள் போஜனத்துக்குப் பதில் ஒரு கப் காப்பி சாப்பிடத்தான் பொழுது இருந்தது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! சுப்புலக்ஷ்மியின் உண்மையான ரசிகர்களுக்கு ஏமாற்றமே அளிக்கக் கூடாது என்பதில் ஸ்ரீ சதாசிவம் தீவிரமாக இருந்தார். பயணத்தின் மற்றப் பகுதிகளைவிட இந்தச் சமயத்திலேயே இசைக் குழுவினரை ஏராளமான உற்சாகிகள்— மனப்பூர்வமான ரசிகர்கள் — சூழ்ந்து கொண்டார்கள். கடிதங்களும் ஏராளமாக வந்தபடி இருந்தன.

நவம்பர் 15ந் தேதி நியூயார்க் பில்ஹார்மனிக் ஹாலில் மாலை ஐந்து மணிக்குக் கச்சேரி. இதற்கு முன்னதாக இரண்டரை மணிக்குக் கொலம்பியா ஒலிபரப்பு அமைப்பின் ஆதரவில் எம். எஸ். டெலிவிஷனில் தோன்றினர். இது முடிந்தவுடனேயே நாலு மணிக்கு ஐ. நா.வைச் சேர்ந்த சினிமாக் குழுவினர் திரைப்படம் எடுத்தனர். இது முடிந்தவுடன் நாங்கள் வாஸ்தவமாகவே ஓட்டமும் நடையுமாகச் சென்று இரண்டு வாய் காப்பி விழுங்கிவிட்டுக் கச்சேரிக்கு விரையவேண்டியதாயிற்று. காப்பி எங்களுடைய படபடப்பை ஓரளவுதான் தணித்தது. சுப்புலக்ஷ்மியின் அதிசயமான சங்கீதம் எங்களை முற்றிலும் சமனப்படுத்தி விட்டது. கொலம்பியா சர்வ



## ரேடியோவில் ஐ. நா. சபைக் கச்சேரி



ஐ. நா. சபையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் நிகழ்த்திய இன்னிசைக் கச்சேரியைச் சென்னை-1, திருச்சி வானொலி நிலையங்கள் டிசம்பர் 15-ந் தேதி இரவு 9-30 மணியிலிருந்து 11-30 மணி வரை ஒலிபரப்புகின்றன.

கலாசாலைப் பேராசிரியர் வில்லார்டு ரோட்ஸ் அவர்கள்தான் செஞ்சுரி கிளப் கச்சேரிக்கு ஏற்பாடு செய்தவர். எங்களது நண்பராகிய இவர் தமது மதிப்புக்குரிய கிளப் சகாக்கள் அனைவரும் எம். எஸ்ஸின் இசையைக் கேட்க வேண்டுமெனக் கருதி, நியூயார்க்கின் மிகப் பழைய, பெரும் கௌரவம் வாய்ந்த சங்கங்களில் ஒன்றான செஞ்சுரி கிளப்பில் நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தார். ஒன்பது மணிக்கு ஒரு ரேடியோப் பேட்டி இருந்தபடியால் எம். எஸ். நீண்ட நேரம் இங்கு பாட இயலவில்லை. எனினும் நிகழ்ச்சியில் கனமான ஓர் அம்சம் இருந்தது. பக்கல நிலபடி (கரகரப்பிரியா)யும், அதன்பின் தனி ஆவர்த்தனமும் கச்சேரிக்கு முழுமை தந்தன. அவையோர் ராகத்தின் பூரண விஸ்தரிப்பு இன்னதென்று புரிந்து கொள்ள வாய்ப்புக் கிடைத்தது.

கச்சேரியானபின் கிளப் அங்கத்தினர் ஒரு வரவேற்பு நடத்தித் தங்களது பாராட்டை மனம் விட்டு இசைக் கலைஞர்களுக்கு அளித்தனர். இந்தக் கச்சேரிக்கு வந்திருந்த சான்றோர்களின் சிறப்பைப் பார்க்குமிடத்து, கச்சேரி சிறியதாயினும், இது சுப்புலக்ஷ்மிக்கும், கர்நாடக சங்கீதத்துக்கும் அமெரிக்காவில் ஒரு குறிப்பிடத்தக்க வெற்றி என்றே கருதுகிறேன்.

ஆயினும் இவையெல்லாம்கூட, 17ந் தேதி டவுன் ஹாலில் நடைபெற்ற வெற்றிக் கச்சேரியின் முன்பு மங்கிவிடுகின்றன. இந்தப் பயணத்துக்கு இவ்வளவு அற்புதமான ஒரு முடிவை நீங்கள் கனவில்கூடக் கற்பனை செய்து பார்க்க முடியாது. ஆகா! அது எத்தகைய புகழ் கொண்ட மாலை வேளை! அன்று நான் மகிழ்ச்சியில் வாய்விட்டுக் கத்தாமல் இருக்கப் பெரும் பாடுபட்டேன். அன்று இசைக் குழுவினர் அனைவருமே மிக உன்னதமான நிலைக்கு எழும்பி, ஒவ்வொருவரும் பெருத்த கரகோஷம் பெற்றனர்.

கச்சேரி தொடங்குமுன் வி. வி. நரஸிம்மன் கலைஞர்களை அறிமுகப்படுத்தினார். இடைவேளைக்குப் பின்பு நிகழ்ச்சியின் மறுபாதியை விளக்கிய அவர், 'நான் முதலில் சுப்புலக்ஷ்மியின் தேர்ந்த ஞானத்தையும், இசைப் பெருமையையும் பற்றிக் கூறியதை இப்போது நீங்களும் நம்புவீர்கள் என்று நினைக்கிறேன்' என்று கூறியபோது சபையோர் இடிமுழக்கமெனக் கரகம்பம் செய்தனர். எங்களுக்கு எவ்வளவு இன்பமும் திருப்தியும் ஏற்பட்டன தெரியுமா?

கலைஞர்களுக்குப் பலர் புஷ்பங்கள் அளித்தனர். பலர் மாலை சூட்டினர். நியூயார்க் சட்டப்படி இத்தனை மணிக்கு மன்றத்தை மூடிவிட வேண்டும் என்ற நிபந்தனை மட்டும் இல்லாதிருப்பின், எம். எஸ். அன்று முடிவேயில்லாத 'ஒன்ஸ்மோர்' கோரிக்கையிலிருந்து தப்பியிருக்க முடியாது. சுப்புலக்ஷ்மியை நினைந்து நாங்கள் ஆனந்தப் பட்டோம். அவரோ எங்கள் ஆனந்தத்தையும், பக்கவாத்தியக்காரர்களுக்குக் கிடைத்த பாராட்டையும் நினைந்து மிக அதிகமாக ஆனந்தப்பட்டார். அதுதான் அவரது இயற்கை!

இப்போது உங்கள் 'சங்கீத ராணி' தாயகம் நோக்கித் திரும்பிக் கொண்டிருக்கிறார். இச்சமயத்தில் அமெரிக்கர் அனைவரின் சார்பிலும் ஒருசில வார்த்தைகள். ஏழு வாரங்கள் நாங்கள் எம். எஸ்ஸின் இசையை அநுபவிக்க அனுமதித்த இந்திய மக்கள் அனைவருக்கும் எங்கள் நன்றி. 'நியூயார்க் டைம்ஸி'ல் ஷெல்டன் எழுதியதுபோல், நாங்கள் அனைவருமே இவ்விசைக் குழு மீண்டும் இங்கு வரும் நாளைக் காண ஆர்வத்துடன் இருக்கிறோம். அந்நாள் வெகு தொலைவில் இருந்து விடாது என்றும் நம்புகிறோம். என்னைப் பொறுத்தமட்டில் அதிக நாட்கள் காத்திருக்க முடியாது. டிஸம்பர் சீஸனில் சென்னை மியூஸிக் அகாடமியில் எம். எஸ்ஸின் இசையைக் கேட்க வந்து விடுவேன்.

## கண்டறியாதன கண்டோம்!

நவம்பர் 17ந் தேதியன்று நியூயார்க்கில் நடைபெற்ற ஸ்ரீமதி எம். எஸ்ஸின் கச்சேரி குறித்து, அமெரிக்காவின் புகழ் வாய்ந்த பத்திரிகையான 'நியூயார்க் டைம்ஸி'ல் பிரபல விமர்சகர் ராபர்ட் ஷெல்டன் எழுதுகிறார்:

இந்தியாவின் தலைசிறந்த வாய்ப் பாடகராகக் கூறப்படும் விதுஷி நேற்று மாலை டவுன் ஹாலில் தமக்கு ஒரு வெற்றியை சூட்டிக் கொண்டார்; தமது தேசத்தின்




''என்ன சார்! என்னை வாயைத் திறக்கச் சொல்லி விட்டு, 'மைக்' டெஸ்ட்னு கை சொடுக்குறீர்?''

''நீங்க 'லவுட் ஸ்பீக்கர்' மாதிரி! உங்களிடம் ஒரு விஷயம் சொன்னால் ஊரெல்லாம் பரவிவிடுமே!''

சங்கீதத்துக்கும் ஒரு வெற்றியைப் பெற்றுக் கொடுத்து விட்டார்.

....... சுப்புலக்ஷ்மி என்றழைக்கப்படும் இவரும், முன்பே இங்கு இந்திய சங்கீத தூதர்களாக வந்த ரவிசங்கர், அலி அக்பர்கான் முதலியவர்களோடு அகில உலக முன்னணி வித்துவான்களிடையே சுலபமாக இடம் பெறுகிறார்.

தமது இருபெண்களில் ஒருவர் உடன்பாட, மற்றவர் சுருதிகூட்ட விதுஷி இசை வழங்கினார். நிபுணரான ஒரு வயலின் வித்துவானும், மகத்தான தேர்ச்சி பெற்ற இரு தாளவாத்தியக்காரர்களும் இசைக் குழுவை நிறைவு செய்தனர்.

சாஸ்திரீய சம்பிரதாய கர்நாடக (தென் இந்திய) இசையை வழங்கும் சுப்புலக்ஷ்மி ஜனரஞ்சகமான பாடல்களையும், நாட்டுப் பாடல்களையும் பாடுகிறார். இந்த இசை அனைத்துமே, நாம் அஞ்சக்கூடிய அளவுக்கு மனோ தர்மத்தின் ஆவேசமான கற்பனைக்கு அடிப்படையாக உள்ளன. இதனை முன்பு ரவிசங்கரும் மேற்கத்திய ரசிகர்களுக்கு நிரூபித்திருக்கிறார்.

சுப்புலக்ஷ்மி தமிழ், தெலுங்கு, ஸம்ஸ்கிருதம், ஹிந்தி, கன்னடம், வங்காளி முதலிய எல்லா மொழிகளிலும் பாடுகிறார். எந்த மொழியில் அமைந்த பாடலாயினும் அவர் அதற்குத் தனிப்பட்டதொரு சாரீரப்பண்பை ஊட்டி விடுகிறார். அவர் வாயிசையால் வெளியிடும் உட்செய்திகளை விவரிக்க வார்த்தையில்லை. அது வாக்கு கடந்த ஒன்று. 'மானுடக் குரலை ஓர் இசைக் கருவியாகப் பயன்படுத்துவது' பற்றிப் பல முறை கேட்டிருக்கிறோம். எனினும் அது சுப்புலக்ஷ்மிக்குப் பொருந்துவது போல் வேறு எப்போதும் பொருந்தியதில்லை.

அவரது குரல் என்கிற கருவி சில சமயங்களில் பளிச்சென்று நேராகக் கொம்பு வாத்தியம் போல் தொனிக்கிறது; சில சமயங்களில் இருளில் செல்வதுபோல், உள்முகமாக ஒலிக்கிறது. ஒரு சமயம் அதனால் படபடத்துக் கொண்டு பறக்க முடிகிறது; இன்னொரு சமயம் உயிருள்ள ஒரு சங்கீத உரையாடலையே பக்க வாத்தியக்காரர்களுடன் நிகழ்த்தவும் அதனால் முடிகிறது.

சுப்புலக்ஷ்மி குழுவினரின் இசை, மேற்கத்தியச் செவிகளுக்குக் காணாததைக் காணும் அற்புத தரிசனமாக இருந்தது. அவர்கள் மீண்டும் இங்கு வரும் நாளை எதிர்நோக்கி ஆர்வத்துடன் காத்திருக்கிறோம்.

## ஆன்ம ஒளியில் ஒன்றிய கலை

கலைகளிலும், தத்துவ சாஸ்திரங்களிலும் பெரும் புலமை வாய்ந்த டாக்டர் அமியா சக்ரவர்த்தி அவர்கள் தற்போது நார்தாம்ப்டனில் பேராசிரியராக இருக்கிறார். எம். எஸ்ஸின் அமெரிக்கக் கச்சேரிகளில் பலவற்றைக் கேட்டு மகிழ்ந்த அவர் எழுதுவதாவது:

ஸ்வாமி விவேகாநந்தர் இந்தியாவின் ஆன்மிகச் செய்தியை அமெரிக்கக் கரைகளுக்குக் கொணர்ந்தார்; ரவீந்திரநாத டாகூர் மகத்தான கவிதையையும் மனிதாபிமானத்தையும் கொணர்ந்தார்; இப்போது இந்தியாவின் இசையை, பக்திக்குரிய அழகுடனும், சமயச் சார்புள்ள கலை உணர்வுடனும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி இங்கு கொண்டு வந்திருக்கிறார். கிழக்கத்திய உலகுக்கும் மேற்கத்திய உலகுக்கும் எம். எஸ். ஒரு புதிய இசை விழிப்பை — தெய்வீக இசையின் ஒரு புதிய பெரும் சக்தியை— அளித்திருக்கிறார். இவ்விரு உலகங்களையும் தமது ஆக்கரீதியான பிரதிபா சக்தியால் அவர் நெருக்கமுறச் செய்திருக்கிறார்.

ஈடுபாடு மிகுந்த ஏராளமான ரசிகர்களில் ஒருவனாக நான்கு கச்சேரிகளில் — கடைசியாக நியூயார்க் டவுன் ஹாலில் — எம். எஸ்ஸின் இசையைக் கேட்டேன். அவர் இந்நாட்டுக்கு அளித்த தூய கர்நாடக சங்கீதத்தையும், இந்தியாவின் மற்றப் பிரதேசப் பாடல்களையும் கேட்கும் மகத்தான அநுபவத்தில் பங்கு கொண்டேன். கேம்பிரிட்ஜிலும், மாஞ்செஸ்டரிலும், கனெக்டிகட்டிலும், ஐக்கிய நாடுகளிலும் இந்தியாவின் உன்னதமான இசை எப்பேர்ப்பட்ட அற்புத மாறுதலை உண்டாக்குகிறது என்பதை உணர்ந்தேன். இதை எம். எஸ். சாதித்திருப்பது போல் இந்நாட்டில், நமது காலத்தில் வேறு யாரும் செய்யவில்லை எனலாம். நியூயார்க் டவுன் ஹாலில் நடைபெற்ற கச்சேரி மிக உயர் தரமாக அமைந்தது. அதற்கு நியூ யார்க் அளித்த வரவேற்பு, ஆன்ம ஒளியுடன் ஒன்றிவிட்ட கலையென்பது உலக முழுவதற்கும் பொதுவானது என்பதை நிரூபித்து விட்டது. ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியின் சிறந்த பண்பு அவரது சங்கீதத்தின் வழியே பிரகாசித்தது. அவரது புனிதமான, உன்னதமான நிவேதனத்தில் பங்குபெற்ற உயர்ந்த மனோதருமமுடைய பக்கவாத்தியக் கலைஞர்களையும் எம். எஸ்ஸின் மேன்மை ஐக்கியப்படுத்தியது. ராதா விசுவநாதன், விஜயா ராஜேந்திரன், வி. வி. சுப்பிரமணியம், டி. கே. மூர்த்தி, டி. எச். விநாயகராம் அனைவரும் எம். எஸ்ஸுடன் சேர்ந்து இக்கச்சேரிகளைச் சங்கீத சரித்திரத்தில் தனிச் சிறப்பு பெற்றவைகளாகச் செய்து விட்டனர்.

# ரதாங்க பாணி

பக்தர்களுக்குப் பகவான் அடிமை. பக்தர்களின் காரியங்களில் அவனும் சேர்ந்து உழைப்பான். தடங்கல்கள் எல்லாம் விலகிப் போகும். 'எந்த நன் முயற்சியிலும் என்னையும் சேர்த்துக் கொண்டு காரியம் நடத்து' என்கிறான் கண்ணன்.

मच्चित्तः सततं भव ॥

मच्चित्तः सर्वदुर्गाणि मत्प्रसादात्तरिष्यसि ।

என்கிறான் கீதையில்.

'தருமத்துக்கு விருத்தமில்லாத எந்தக் காரியத்தில் ஈடுபட்டிருப்பினும் சரி 'மத் சித்தன் ஸததம் பவ'—என்னை நினைவில் வைத்து எல்லா முயற்சிகளையும் எடு; எல்லாக் காரியத்தையும் செய்; என்னிடம் உன் மனத்தைச் செலுத்தி என்னை நம்பு. உன் முயற்சிகள் தடைபெற்றால், என் அருளால் எல்லாத் தடங்கல்களையும் தாண்டி விடுவாய். சக்கரம் மண்ணில் புதைந்து வண்டி நின்று போனால் நான் என் கையால் சக்கரத்தைத் தூக்கிக் கொடுத்து வண்டியை வழியில் நாட்டி, ஓடச் செய்வேன்' என்கிறான். வண்டிச் சக்கரம் பிடித்த கையான் என்பது பகவானின் ஆயிரம் பெயர்களில் ஒரு பெயர். रथांगपाणिः (ரதாங்கபாணி)



அப்படியின்றி 'நான்' என்ற ஆணவ உணர்ச்சி மேலிட்டுப் பகவானின் பிரஸாதத்தைக் கேட்டுப் பெறாமல் செய்யப்பட்ட முயற்சிகள் எல்லாம் வீணாகும். ''நான் சொல்லுவதைக் கேளாமல் போனால் கெட்டுப் போவாய்'' என்று பகவான் கண்டிப்பாய்ச் சொல்லி வியாசர்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்



எழுதி நமக்குத் தந்திருக்கிற சாஸ்திரம் கீதா சாஸ்திரம்.

இதுவே இஸ்லாமிய சாஸ்திரமும், கிறிஸ்துவ, யஹூதி, பாரஸி சாஸ்திரங்களும். பகவானை நினைவில் வைத்து, சித்தத்தைப் பகவான்கண் நிறுத்தி, அவன் அருளைக் கேட்டுச் செய்ய வேண்டும். எந்தச் சிறிய அல்லது பெரிய முயற்சிகளும் அரசியல் முயற்சிகளும் இந்த உபதேசத்துக்கு விலக்கல்ல. அந்த முயற்சிகளும் தருமத்துக்கு விருத்தமாகாத முயற்சிகளாயின் பகவான் அருளை நாடி அவனை நம்பியே பாடுபட வேண்டும். எல்லாத் தடை தடங்கல்களையும் ரதாங்கபாணியான அவன் தாண்டச் செய்வான். சேற்றில் அழுந்திய சக்கரத்தைத் தூக்கித் தருவான்.

ரதாங்கம் என்றால் சக்ராயுதம் என்பது வியாக்யானம். வண்டியின் முக்கிய அம்சம் சக்கரம். இந்த மொழி மகாவிஷ்ணுவின் சக்கராயுதத்துக்கு வழங்கும். ஆனபடியால் ரதாங்கபாணி என்பதும் சக்ரபாணி என்பதும் ஒன்றே என்பது வியாக்யானம். நான் எழுதி யிருப்பது என்னுடைய குற்றம் குறை நிறைந்த பக்தியில் பிறந்த ஒரு புதுக் கருத்து. பெரியோர்கள் பொறுத்துக் கொள்வார்கள்; ஆக்ஷேபிக்க மாட்டார்கள் என்று நம்புகிறேன். சகஸ்ரநாம சுலோகத்தில், शंखभृन्नंदकी चक्री 'சங்கப்ருன் நந்தகீ சக்ரீ' என்று சக்ரதரனைச் சொன்னபின் அடுத்தாற்போல் 'ரதாங்கபாணி' என்று அதே சுலோகத்தில் வந்திருப்பதால், ரதாங்கபாணிக்கு வேறு ஒரு பொருள் கூறுவதில் அதிக பிசகு இருக்காது என்று எண்ணி இதைச் சமர்ப்பிக்கிறேன். உபநிஷத்திலும் மற்ற சாஸ்திரங்களிலும் மனிதன் நடத்தும் வாழ்க்கையை ரதம் ஓட்டுவதாக உபமானம் அமைக்கப்பட்டிருக்கிறது. ரதத்தின் சக்கரத்தை எடுத்து சக்ராயுதமாக மகாவிஷ்ணு உபயோகித்ததாகப் புராணங்களில் எங்கும் காணப்படவில்லை.

# வாழ்க்கையே எதிர்நீச்சல்தான்!

பிரபலமான ஜவுளிக் கடை ஒன்றில் வேலை பார்த்து வந்தார் ஓர் இளைஞர். அவர் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர். கடை முதலாளியோ தீவிரக் காங்கிரஸ்காரர். மாலையில் வேலை முடிந்த பிறகு கட்சிப் பொதுக் கூட்டங்களில் பங்கெடுத்துக் கொண்டு காங்கிரஸைத் தாக்கிப் பேசுவார் அந்த இளைஞர். சில சமயங்களில் முதலாளியையே தாக்கிப் பேச நேரிடுவதும் உண்டு. அதற்கு அடுத்தபடியாக நடக்கும் காங்கிரஸ் கூட்டத்தில் அந்த முதலாளி இந்தத் தொழிலாளியைத் தாக்குவார். இப்படி மேடையில் தான் மோதிக் கொள்வார்களே தவிரக் கடை, வேலை என்று வந்து விட்டால் அவர்களுக்கிடையே சிறு உரசல்கூட இருக்காது. மேடையுடன் அரசியலை மறந்துவிட்டுப் பழகுவார்கள். 'இதுவல்லவா கண்ணியம்! இதுவல்லவா பெருந்தன்மை!' என்று வியந்து பாராட்டுமளவுக்குப் பண்புடன் நடந்து கொண்ட அந்தத் தொழிலாளிதான் மெள்ள மெள்ள வளர்ந்து இன்று சென்னை நகரின் முதற் குடிமகனாக, மேயராக உயர்ந்திருக்கிறார்.

திரு இரா. சம்பந்தம் அவர்களை அரசியலுக்கு இழுத்த பெருமை திரு ஈ. வே. ரா. அவர்களைத்தான் சேரும். பொழுது போக்குக்காக அவரது பொதுக்கூட்டம் ஒன்றைக் கேட்கப் போனவரைப் பெரியாரின் கொள்கைகள் கவர்ந்தன. திராவிடக் கழகத்தில் சேர்ந்தவர், தி.மு.க. பிறந்தபோது, அண்ணாவைப் பின்பற்றிக் கழகத்துக்கு வந்து சேர்ந்தார்.

அண்ணாவிடம் இவர் கொண்டிருக்கும் பாசமும், மதிப்பும் எத்தகையது? ஒரு சமயம் திரு அண்ணாதுரை அவர்கள் மீது ஏதோ வழக்குத் தொடரப்பட்டு, அவருக்கு அபராதம் விதிக்கப்பட்டது. தம் கொள்கைப் பிடிப்பினால், தாம் மேற்கொண்ட பணியின் தூய்மைச் சிறப்பினால் உந்தப்பட்ட அண்ணா, அபராதம் கட்ட மறுத்து விட்டார். அவரது உடைமைகளை ஏலம் போட்டு அபராதத்தை வசூலிக்கும்படி உத்தரவிடப்பட்டது.

அண்ணா கலங்கவில்லை; தம்பி சம்பந்தம் கொதித்தெழுந்தார். அறிந்தவர்கள், அனுதாபிகள், எல்லோரிடமும் தலைக்கு ஒரு ரூபாய் விதம் வசூல் செய்து ஏலத்தில் அண்ணாவின் சோபாவை எடுத்து, பிறகு அதை அண்ணாவிடமே சேர்ப்பிக்கவும் செய்தார். அன்று அண்ணாவை இவர் சோபாவில் உட்கார வைத்தார்; அவரோ இன்று மேயர் ஆசனத்திலேயே இவரை உட்கார்த்தி விட்டார்!

குடிசைவாழ் மக்களுக்குத் தொண்டு செய்வது சிலருக்குப் பொழுதுபோக்காக இருக்கலாம்; சிலருக்குக் கௌரவப் பணியாக இருக்கலாம்; வேறு சிலருக்கு விளம்பரம் தேடிக் கொடுக்கும் சாதனமாக இருக்கலாம். ஆனால் திரு சம்பந்தம் அவர்களுக்கு இது உயிர்மூச்சு.

ஒரு சமயம் நுங்கம்பாக்கம் பகுதியைச் சேர்ந்த நூற்றியொரு குடிசை வாழ் மக்களை இடத்தைக் காலி செய்யும்படி விரட்டியது அரசாங்கம். 'எங்கே போவது' என்று புரியாமல் அவர்கள் கலங்கி நிற்கும்போதே, பலவந்தமாக அவர்களை வெளியேற்றுவதற்கான உத்தரவு வந்து விட்டது. விஷயமறிந்த சம்பந்தம் இரவோடு இரவாக டாக்சி ஒன்றை வைத்துக் கொண்டு நாகப்பட்டினத்துக்குச் சென்றார். அங்கே திரு காமராஜ் (அப்போதைய முதலமைச்சர்) அவர்களைக் கண்டு பேசி, ஏழைகளின் அவல நிலையை எடுத்துக் கூறினார். ''அவர்கள் அங்கிருந்து வெளியேறித்தான் ஆகவேண்டும்... ஆனால் அவர்களைக் குடியேற்ற வேறெங்காயினும் இடம் இருந்தால் சொல்லுங்கள் பார்க்கலாம்!'' என்றார் காமராஜ். ''கோடம்பாக்கம் புதூர் இருக்கிறதே? அங்கே வெறும் பொட்டலாகத் தானே இருக்கிறது? அங்கே வேண்டுமானால் இவர்களைக் குடியேற்றலாமே!'' என்று யோசனை தெரிவித்து, முதலமைச்சரின் சம்மதமும் பெற்று வந்தார் சம்பந்தம். அவரது யோசனை செயல்படுத்தப்பட்டது. ஏழை மக்களுக்கு இடம் கிடைத்தது. நகர்ப்புறக் 'காலனி' ஒன்றும் உருவாகியது.

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதை ஏட்டளவில் மட்டுமின்றிச் செயலிலும் கடைப்பிடிக்கும் இவரை, இவரது குடும்பத்தார்கள் ஒதுக்கி வைத்ததும் உண்டு. அதற்குக் காரணம்: இவர் கலப்பு மணம் செய்து கொண்டதுதான். இப்போது? ஒன்றாகச் சேர்ந்து விட்டார்களாம்.

நுங்கம்பாக்கம் பக்கம் போகிறவர்கள் விரிந்து பரந்து கிடக்கும் நகராட்சி மன்ற விளையாட்டு மைதானத்தைப் பார்த்தால் அயர்ந்து போவார்கள். கிரிக்கெட், கால் பந்து, ஹாக்கி, கூடைப் பந்து, பூப்பந்தாட்டம் ஆகிய எல்லா விளையாட்டுக்களையும் ஒரே சமயத்தில் விளையாடுவதற்கான வசதி அங்கே இருக்கிறது. இந்த வசதி கிடைக்கக் காரணமானவர்: சம்பந்தம். விளையாட்டுப் பந்தயங்களில் — அதிலும் குறிப்பாக ஹாக்கியில் — அவருக்கு இருக்கும் ஈடுபாடே இதற்குக் காரணம். இன்றைக்கும் ஞாயிற்றுக் கிழமை காலை நேரத்தில் திரு சம்பந்தம் அவர்களை யாருமே வீட்டில் பார்க்க முடியாது. விளையாட்டு மைதானத்தில் 'ஹாக்கி ஸ்டிக்'கும் கையுமாகத்தான் காணலாம்.

''என் வாழ்க்கையே ஓர் எதிர் நீச்சல்தான்!'' என்று கூறும் முப்பத்து நான்கு வயதுக்காரரான இந்த மேயருக்குப் போராட்டங்களில் கலந்து கொண்டு சிறைவாசம் அனுபவித்ததோடு, தேவிகுளம் — பீர்மேடு போராட்டத்தில் ஈடுபட்டுத் தழும்பேறிய பெருமையும் உண்டு.

மூன்று குழந்தைகளுக்குத் தந்தையான திரு சம்பந்தத்துக்கு மொத்தம் நான்கு விரோதிகள்: காப்பி, தேநீர், வெற்றிலை பாக்கு, சிகரெட்.

—முகுந்தன்





## தலைவர் ராஜாஜி

உலகம் புகழ் தலைவர்களுடன் சரளமாக உறவாடும் ராஜாஜி, உலகமறியாச் சிறுவர் சிறுமிய ருடனும் விளையாடி மகிழ்கிறார்.



















இடது பக்கத்தில்: லால் பகதூர் சாஸ்திரி, மௌலானா அபுல்கலாம் ஆஸாத், சர்தார் வல்லபபாய் படேல் ஆகியோருடன் ராஜாஜி. ○ இந்திய போர்க் கப்பலில் கடற்படை அதிகாரிகள் அறிமுகமாகின்றனர். ○ மவுண்ட் பாட்டன் தம்பதியுடன். ○ அருமை நண்பரும் சுயராஜ்யா பத்திரிகை ஆசிரியராக விளங்கியவருமான காசா சுப்பாராவுடன். ○ ''எங்கள் குடும்பம் பெரிது'' என்று சொல்லாமல் சொல்வது போலல்லவா இருக்கிறது!

0 0 0

இந்தப் பக்கத்தில்: பாபு ராஜேந்திர பிரசாத்துடனும் ஜெனரல் கரியப்பாவுடனும் அளவளாவுகிறார் ராஜாஜி. ○ திருவிதாங்கூர் ராஜா, விமான நிலையத்தில் ராஜாஜியை வரவேற்று அழைத்துப் போகிறார். ○ பர்மியப் பிரதமர் தக்கின் நூவுடன் தேநீர் அருந்தும் ராஜாஜியை இதர படங்களில் மைசூர் மகாராஜா, ஸ்ரீ ஸ்ரீபிரகாசா, விஜயலக்ஷ்மி பண்டிட் ஆகியோருடன் காண்கிறீர்கள்.

# அசாதாரண மனிதர்

## மவுண்ட் பேட்டன் பிரபு

ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாருடன் எனக்கு ஏற்பட்ட முதல் சந்திப்பை நான் ஒருபோதும் மறக்க மாட்டேன். 1947ம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் தில்லியில் உள்ள வைசிராய் மாளிகையில் அச்சந்திப்பு நிகழ்ந்தது. பார்த்த மாத்திரத்திலேயே அவரது தனிப் பண்பு என் உள்ளத்தில் பதிந்து விட்டது. அதனால்தான் அச்சந்திப்பு மறக்கவொண்ணாததாக உள்ளது.

ராஜாஜி — சிறிது காலத்திலேயே நானும் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரை இப்படி அழைக்கத் தொடங்கி விட்டேன் — ஒரு விவேக மிக்க அரசியல் தலைவர் என்பது தெளிவு. அவரது நீண்ட கால அரசியல் போராட்டச் சரிதத்தைப் பற்றி நான் அறிந்திருந்தேன். இப்படிப்பட்ட ஒருவர் நெருக்கமான உணர்ச்சிக் கதகதப்புடனும், நட்புடனும் என்னை வாழ்த்தியது வரவேற்கத் தக்கதோர் ஆச்சரியமாயிருந்தது. முதல் கணத்திலிருந்தே அவர் என்னிடம் உள்ளார்ந்த விசுவாசமும் நம்பிக்கையும் காட்டினார். இந்தியாவின் எதிர்காலத்துக்கு நான் ஒரு நல்ல தீர்வு காணுவேன் என்ற தமது உறுதிப்பாட்டையும் வெளியிட்டார்.

அவரது நெருக்கமான நட்புணர்ச்சியைப் பிரதிபலிக்காமல் இருப்பது அசாத்தியம். ஓட்டப் பந்தயத்தில் கால அளவைக் கொண்டு 'ரிகார்ட்' ஏற்படுத்துவதைக் கணிப்பதைப்போல் நட்பு உருவாவதையும் கணிப்பதானால் நாங்கள் இருவரும் துரிதமாக நண்பர்களாவதில் ஒரு புதிய 'ரிகார்ட்' ஏற்படுத்தினோம் என்று கூறலாம். இந்த நட்பில் என் மனைவியும், புதல்விகளும் விரைவிலேயே பங்கு கொண்டனர். ராஜாஜியின் ஆகர்ஷணத்தில் அவர்களும் எடுத்த எடுப்பிலேயே விரும்பி ஈடுபட்டு விட்டனர்.

இந்திய சுதந்திரப் பிரச்னையைத் தீர்க்க வேண்டிப் பேச்சு வார்த்தைகள் நடந்தபோது நானும் அவரும் இதயத்தோடு இதயம் திறந்து உரையாடியிருக்கிறோம். இதனால் எனக்குப் பேருதவி கிடைத்தது. இங்கிலாந்திடமும் ஆங்கிலேயரிடமும் அவருக்கு எத்தகைய உண்மையான வாஞ்சை இருந்தது என்று காண மனத்துக்கு மிகத் திருப்தியாக இருந்தது. ஆங்கிலேயர்கள் இந்தியாவில் பின்பற்றிய கொள்கைகளுக்கு அவர் சம்மதிக்கவில்லை என்பது வாஸ்தவம். எனினும் அவர்களிடம் தமக்கு இருந்த மதிப்பையும் விருப்பத்தையும் அவர் மறைக்கவில்லை.

நான் விரும்புமளவும் கவர்னர் ஜெனரல் பதவியில் நான் நீடிக்க வேண்டும் என்று அன்றையப் பிரதமர் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு, ஆரம்பத்தில் விரும்பினார். ஆயின் கூடிய சீக்கிரமே நாங்கள் வேறு முடிவுக்கு வந்தோம். இந்தியா சுதந்திரம் பெற்ற பின் ஓராண்டுக்குமேல் நான் முதல் கவர்னர் ஜெனரலாக இருப்பது சரியல்ல என்பதே அம்முடிவு. இதையடுத்து, எனக்குப் பின் யார் கவர்னர் ஜெனரலாவது என்ற கேள்வி எழுந்தது.

தனிப்பட்ட முறையில் நான் ராஜாஜியே இப் பதவியை ஏற்கவேண்டும் என்பதில் மிகவும் தீவிரமாக இருந்தேன். ஏனெனில் அவரே அதற்குரிய எல்லாக் குணங்களும் பொருந்தியவராக எனக்குத் தெரிந்தது. பண்டிட்ஜியும் பெரும்பாலும் என் மனத்திலிருந்தவாறே எண்ணினார் என்று அறிந்தேன். உண்மையில் பண்டிட்ஜிதான் என்னிடம் முதலில், எனக்குப் பின் ராஜாஜி இப்பதவியை ஏற்கலாம் என்று யோசனை கூறியவர்.

நானும் ராஜாஜியும் பதவி மாற்றம் குறித்துப் பலமுறை பேசியிருக்கிறோம். அவர் எவ்வழியில் செல்லப் போகிறார் என்பது பற்றி உரையாடியிருக்கிறோம். மனத்தைக் கவரும் முறையில், இனிய கண்ணியத்துடன் அவர் என்னிடம் ஒரு முறை கூறியதை இன்றும் குறிப்பாக நினைவு வைத்திருக்கிறேன். ''நண்பரே, நீங்கள் எந்த வழியில் சென்றீர்களோ முற்றிலும் அதே முறையில் செல்லத் தான் முயல்வேன்'' என்றார் அவர்!

பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் 'அரசாங்க மாளிகை' என்று கவர்னர் ஜெனரல் இருக்கையைச் சொல்வது வழக்கம். அங்கு புதிய ஆட்சி ஏற்படப் போகிறது என்றவுடன், 'அரசாங்க மாளிகை'யின் வேலைக்காரர்களுக்கெல்லாம் ஒரு கவலை ஏற்பட்டது நியாயமே. 'உங்களுக்கு ஒருவித அச்ச



மவுண்ட்பேட்டன் பிரபுவும் ராஜாஜியும்

மும் ஏற்பட வேண்டிய அவசியமில்லை; ராஜாஜியும் கவர்னர் ஜெனரல் காரியாலயத்தைச் சேர்ந்த அவரது இந்திய உத்தியோகஸ்தர்களும் உங்களை மிகமிக நன்முக நடத்துவார்கள்' என்று அவர்களுக்கு உறுதி சொன்னேன். நான் சொன்னபடியே நடைமுறையில் நிருபணமாயிற்று. ராஜாஜியின் பதவிக் காலத்தில் கவர்னர் ஜெனரல் மாளிகை எத்தகைய இன்பக் குடும்பமாக விளங்கியது என்பது பற்றிப் பலதரப்புக்களிலிருந்தும் கேள்விப்பட்டேன்.

நான் ராஜாஜியைக் கடைசியாகப் பார்த்தது நான்கு ஆண்டுகளுக்கு முன்பு. அவரது வாழ்வில் முதல் முறையாக வெகுநீண்ட விமானப் பயணம் செய்து லண்டன் வந்திருந்தார் — அமெரிக்கா போகும் வழியில்.* லண்டனில் விமானம் நின்ற சிறிது நாழிகைக்குள் அவர் என் புதல்விகளையும் என்னையும் காண வந்திருந்தார். இந்தியாவில் நாங்கள் ஒன்று சேர்ந்திருந்தபோது நிகழ்ந்த மகிழ்ச்சியூட்டும் சம்பவங்களை — பழைய இல்லத்தின் இனிய நினைவுகளை — பரிமாறிக் கொண்டோம்.

ராஜாஜியைக் குறித்த ஓர் அதி முக்கியமான விஷயம் அவரது வாக்கு வன்மை. முன் அறிவிப்பாக அவருக்கு அவகாசம் கொடுக்கப்படாவிட்டாலும் கூட, தயாரிப்பின்றியே உரையாற்றும் திறன் படைத்தவர். மிகவும் அழகிய ஆங்கிலத்தில் அவர் பேசுவார். ஆங்கிலேயர்களே இவ்வளவு விரைவில் இவ்வளவு அழகாகப் பேச முடியாது என்று கூட நான் சொல்லுமளவுக்கு அவர்களை விடத் திறமையுடன் பேசுவார்.

---

* காந்தி சமாதான நிறுவனத்தின் சார்பில் அணு ஆயுதக் குறைப்பு சம்பந்தமாக அமெரிக்க ஜனாதிபதி கென்னடியைச் சந்தித்துப் பேச.

இந்தியப் பொது வாழ்வு, அதன் நீண்ட வரலாற்றின் ஒரு திருப்பத்தில் இருக்கும்போது, அதற்கு நேர்மைப் பண்பு, விவேகமாக முடிவெடுக்கும் ஆற்றல் இவற்றின் மிக உன்னதமான சிறப்புக்களை ஊட்டியவர் ராஜாஜி. பல்லாண்டின் பரிணாமத்தில், தாம் ஒரு ராஜநீதி வல்லுநரான தேசத் தலைவர் என்பதை அவர் அவ்வார்த்தைகளின் முழுப் பொருளும் பொருந்தும்படி நிருபித்திருக்கிறார்.

ஆனால் தேசத் தலைவர், ராஜநீதி வல்லுநர் என்றெல்லாம் தனித் தனியே பிரித்துப் பார்க்காமல் ராஜாஜி என்பவராக அவரைப் பார்த்தே அவரது பிறந்த தினத்தின்போது விசேஷ வாழ்த்தை அளிக்க விரும்புகிறேன். ஏனெனில் அவரது நட்பை அநுபவிக்கும் கௌரவத்தைப் பெற்றவன் என்கிற முறையில் அவரது உண்மையான மகிமை அவரேதான் என்று நான் அறிவேன். எளிமையின் மூலமே வலிமை பெற்ற அவர், ஓர் அபூர்வமான, அசாதாரணமான ஆன்மா. பிறருக்குப் புத்துயிரூட்டும் ஆன்மா.

அவரது அறிவு மிகுந்த விழிப்புடனுள்ளது; அவர் உலகத்தைப் பார்க்கும் கோணத்தில் மிகுந்த உற்சாகமும், மகிழ்ச்சியுமே காண்கின்றன. இப்படிப் பட்டவருக்கு எண்பத்தெட்டாண்டுகள் பூர்த்தியாகின்றன என்று நம்புவது கடினமாக இருக்கிறது.

இந்தப் பிறந்த நாளில் அவருக்குப் பல வாழ்த்துக்கள் வரும். அவற்றோடு என்னுடையதையும் சேர்ப்பதில் மகிழ்கிறேன். இதேபோல் எதிர்காலத்தில் அவர் பலப்பல ஆண்டு விழாக்களைக் காண்பாராக!

# வெண்ணிலவுப் பெண்ணரசி

சோமு

## அத்தியாயம் 11

## செவ்வந்தி அடிகள்

தமிழ் நாட்டு அறிஞர்களால் வரலாற்று நூல்களிலே "துருத்தி" என்று அழைக்கப்படுகிற பவளத் தீவுகள், மேற்குக் கடற்கரைக்கும் வெள்ளைத் தீவுக்கும் இடையே குத்துக் குத்தாக நூற்றுக்கணக்கில் பரவியிருந்தன. இவற்றில் 'பெருந் துருத்தி' என்று அழைக்கப்பட்ட ஒரு தீவு பெயருக்கு ஏற்பப் பெரிதாகவும், பயிர் பச்சைகளின் செழிப்பு நிரம்பியதாகவும் இருந்தது. அந்தத் தீவை நோக்கியே நீந்தினான் வேலவன் கோதை.

இரவிலே கடல் அலைகளில் குதிப்பது என்றால் வேலவன் கோதைக்கு இத்தனை கொண்டாட்டமா! அரிய செயல்களைச் செய்கிற மனிதர்கள் எல்லாரும் இப்படித்தான் இருப்பார்கள் போலும்!

அலைகள் கொந்தளித்துக் கொண்டிருந்தன. ஆனால் அவற்றைச் சற்றும் பொருட்படுத்தவில்லை வேலவன். இரண்டு கைகளும், இரண்டு கால்களும் படைத்ததின் நோக்கமே இந்தக் கடலில் நீந்திச் செல்வதற்குத்தான் போலும்! விசை கொடுத்த வட்டுக்கள் போல் கையும் காலும் இயங்கின. இடையிடையே உடம்பை மரக்கட்டையாக மல்லாந்து வீழ்த்தி, அந்த அலைகளிலே தெப்பத்தைப் போல மிதந்தான் அவன். வானத்திலிருந்து ஒளியைப் பொழிவதும் முகிற்கூட்டங்களிலே மறைவதும் பிறகு குதித்து வந்து தோன்றுவதும் மறுபடி மறைவதுமாக, வானக் கடலிலே முக்குளித்து நீந்திக் கொண்டிருந்தது வெண்ணிலவு! அந்த ஒளியிலே ஆற்றலோடு நீந்திச் சென்றான் வேலவன், விரைவோடும், மன உறுதியோடும்!

ஒரு காத தூரம் இப்படி நீந்திப் படர்ந்தான் வேலவன்கோதை!

பெருந்துருத்தித் தீவை அவன் சென்றடையும்போது நன்றாக விடிந்து விட்டது. காலைப் பரிதியின் வெயில் உடம்பையே ஊடுருவுவது போலச் 'சுள்' என்று பாய்ந்து வந்தது. கரையிலே ஏறி வேலவன் அந்தத் தீவுக்குள் புகுந்த போது, வட்டமான பெரிய கடற் பாறை ஒன்றிலே துறவி ஒருவர் வழிபாடு முடித்து எழுந்து வந்து கொண்டிருந்தார். இவன் கரையிலே ஏறியதைப் பார்த்ததும் இவனை நோக்கி நடந்து வந்தார் அந்த முனிவர்.

"ஏறக்குறைய ஒரு காதம் நீந்தி நீந்தி வந்திருக்கிறீர் போல் தெரிகிறதே, இளைய வீரரே!" என்று கேட்டுக் கொண்டே அவனைப் பாறையின் பக்கமாக அழைத்தார் துறவி.

தான் நீந்தியது ஒரு காத தூரம் என்பது இவருக்கு எப்படித் தெரிந்தது என்று வியப்பு மேலிட்டவனுகப் பாறையின் மீது நடந்தான் வேலவன்!

ஏதோ ஒரு பாறையின் படர்ப்பைப் போல் தோன்றிய போதிலும், அந்த வட்டாரம் வெறும் பாறையாக இல்லை. அந்தப் பாறைக்கு அப்பால் ஒரு தென்னஞ் சோலை. அதைத் தாண்டி வயல்கள். அவற்றுக்கு அப்பால் ஒரு பெரிய ஏரி. பாறைக்கும் கடலுக்கும் இடையிலே இருந்த தென்னஞ்சோலைக் குள்ளே ஓர் அகலமான கிணறு. அதில் ஏற்றமும், கமலையும்! அருகிலே குளிப்பதற்காகக் கிணற்றைச் சுற்றித்திட்டுகள். தொட்டிகள். சற்றுத் தொலைவிலே விளிம்புச் சுவர். அதையொட்டி ஓர் அழகிய படித்துறை, கடலில் இறங்கிக் குளிப்பதற்காக வேண்டி!

"உப்புத் தண்ணீர் உடம்பெல்லாம் 'பிசு பிசு' என்று ஒட்டும். இந்தக் கிணற்றுத் தண்ணீரில் ஒரு முழுக்கு முழுகிவிட்டு வாருங்கள், வீரரே! நல்ல சூடான 'திரிகடுகக் குடிநீர்' தருகிறேன். உடம்புக்கு நல்லது. நீந்திய களைப்பும் நீங்கும்!" என்ருர், ஒரு விந்தைச் சித்தராகத் தோன்றிய அந்தத் துறவி!

முனிவருடைய முகத்தை உற்றுப் பார்த்தான் வேலவன். அதில் துலங்கிய குழந்தைப் பண்பும், அவர் பேசும் போது குரலிலே இழைந்த இனிமையும், அந்த இனிமையிலே தவழ்ந்த கடவுட் தன்மையோடு கூடிய பரிவும் வேலவனை அடிமை கொண்டன! அவருடைய கண்களைப் பார்த்தான். அந்த ஒளியிலே மின்னிய ஒரு கனல்! அது என்ன? தானுகப் பயின்று வருகிற பண்புகளுக்கும், கடுமையான தவத்திஞல் ஏற்படுகிற பண்புகளுக்கும் உள்ள வேறுபாடு என்ன என்பது இப்போது முனிவரின் விழிகளிலே தெரிந்தது வேலவனுக்கு!

ஃ ஃ ஃ



அந்தத் துறவியோடு பேசிக் கொண்டிருந்ததில் பல செய்திகள் தெரிந்து கொண்டான் வேலவன். சில ஆண்டுகளுக்கு முன்பு மீகாமனுடைய மரக்கலத்திலே வெள்ளைத் தீவிலிருந்த துறவிகளை யெல்லாம் நாடு கடத்தினனே கடம்பன், அந்தத் துறவிகளிலே இந்தப் பெரியவரும் ஒருவர் என்பதும், குகையில் இருந்த சோதிட ஏடுகளுக்கு ஆசிரியர்களாக விளங்கிய முனிவர் குழுவிலே, முக்காலமும் உணர்ந்து கண்ட அந்த ஞானியர் சங்கத்திலே, சேர்ந்த ஒருவரே இவர் என்பதும் வேலவனுக்கு நன்ருகப் புரிந்தது. அவர் எவ்வளவு எளிமையோடு நெருங்கிப் பழகிய போதிலும், அவரை முற்றிலும் நெருங்கி விடாதபடி ஏதோ ஒன்று அவருடைய அந்த விழிகளிலே மினுங்கியது! சில வேளைகளில் மழை மேகத்தைப் போன்று தண்மையைப் பொழிந்தது அது. சில வேளைகளில் வேனிற் காலத்துச் சூரியனைப் போல வெயிலை வீசியது அது! தவத்தின் ஒளி!

"கடம்பனுடைய முடிவு காலம் அண்மையில் நெருங்குகிறது. அதில் ஐயமில்லை. ஆனல் அவனுடைய புண்ணியம் இன்னும் சற்று மீதம் இருப்பதால் அழிவு நெருங்குவதற்குக் காலதாமதம் ஆகிறது!" என்ருர் துறவி.

கடம்பன் நல்வினை வேறு செய்திருக்கிருனு என்று எண்ணித் தயக்கத்தோடு முனிவரைப் பார்த்தான் வேலவன். துறவி சொன்னுர் :

"தீவினையின் பயன் அவனைத் தாக்குவதற்கு முன், நல்வினையின் பயன்கள் அவனிடமிருந்து விடைபெற வேண்டுமல்லவா? ஒவ்வொன்ருக மெதுவாய் விடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. அதனுல் காலம் பிடிக்கிறது!" என்று சொல்லி விட்டுப் பேச்சை வேறு பக்கமாகத் திருப்பினுர் துறவி.

"இந்தத் துருத்தித் தீவிலிருந்து ஒரு மிதவை மட்டும் போதும் உங்களுக்கு! தெரிகிறதா? உதவியாக உங்களோடு சில மனிதர்களை அனுப்பவும் கூடும் என்ருல்; ஆனல் உங்களுடைய பணி மிகவும் ஆயமாக இருக்க வேண்டியது அல்லவா! அதனுல் துணைக்கு வேறு யாரும் உங்களோடு வரக் கூடாது!" என்ருர் துறவி.

தன்னுடைய பணியின் முதன்மையும் இயல்பும் இவருக்கு எப்படி இவ்வளவு நுட்பமாகத் தெரிந்தன என்று ஒரு விஞடி குழம்பினுன் வேலவன்.

"ஐயா, வீரரே! பொதுவான ஓர் உண்மையை உமக்கு நான் இப்போதே சொல்ல வேண்டும். அதாவது துறவியின் செயல்களை ஆராய்கிற முயற்சியை என்றைக்குமே மேற்கொள்ளாதீர்

நீர்! மிதவையிலே புறப்படுவதற்கு ஆயத்தமாக இருமையா. அதைச் செய்யும் முதலில்!''

''அடிகளே! உங்களைக் கேள்விகள் கேட்டுத் தொல்லைப்படுத்துகிற முயற்சியை இனி நான் மேற்கொள்ள மாட்டேன் என்பது உறுதி. ஆனால்—''

''அதெல்லாம் சரி. கேள்விகள் கேட்டுத்தான் பாருமே நீர்! அதனால் என்ன? கேட்பது உம்முடைய வேலை. அதைச் செய்யும். மறுமொழி சொல்வது என்னுடைய வேலை அல்லவா! அதைச் செய்ய வேண்டியது, அல்லது செய்யாமல் இருக்க வேண்டியது என்னுடைய தீர்மானம்! அதையும் நீரே ஏன் முடிவு செய்கிறீர்! உமக்கு ஏற்பட்டுள்ள வேலையே உமக்கு இந்தப் பிறவிக்குப் போதும் ஐயா! எவ்வளவு கருத்தோடும், பொருத்தத்தோடும்— உம்மைத் தேர்ந்தெடுத்து அனுப்பியிருக்கிறார் உங்கள் சேரலாத மன்னர்!''

''அதைத்தான் கேட்க வேண்டும் என்று நினைத்தேன் அடிகளே! சேர அரசவையிலே எத்தனையோ வீரர்களும் தலைவர்களும் இருந்தும்கூட, என்னை இந்தப் பணிக்கு அனுப்பினரே எங்கள் மன்னர். அது எனக்குப் பெரிய புதிராக இருக்கிறது. அதோடு இன்னொரு பொருளும் என்னைக் குழப்பி வருகிறது!''

''அது என்ன அப்படி! பொருள் புரியாத பொருள்?''

''அடிகளே! எத்தனையோ தீவினைகள் செய்து வருகிற வானமண்டலக் கடம்பன், மணிமாலையிடமும் நீலவல்லியிடமும் மட்டும் மதிப்பும் அன்பும் செலுத்தியே நடந்து கொள்கிறான். இது எனக்கு வியப்பாக இருக்கிறது. அவர்களுக்குமே வியப்புத் தருகிறது இது. யவன மரக்கலங்களிலிருந்து பொன்னும் பொருளும் கொள்ளையடிக்கிற குறும்பக் கடம்பன், எதற்காக இந்த இரண்டு பெண்மணிகளையும் வெள்ளைத் தீவுக்குக் கொண்டு செல்ல வேண்டும்? எதற்காக நீலவல்லியை ஓர் இளவரசியைப் போல் பெருமையும் சிறப்பும் கொடுத்து வளர்க்க வேண்டும்? இந்த நுட்பமும் எனக்குப் பிடிபடவில்லை!''

''வேலவரே! கேள்விகள் கேட்கப் போகிறீர் என்றதும் என்னவோ ஏதோ என்று நினைத்தேன். சரியான கேள்விகளாகத்தான் பார்த்துக் கேட்டிருக்கிறீர்! நீர் கேட்ட இரண்டு கேள்விகளும் முதன்மையான கேள்விகள்! இவற்றுக்கு விடை சொல்லிவிட்டால் உமது எதிர்காலத்தையே விண்டு விளக்கியதாகும்! என்ன செய்வது! எதிர்காலம் என்பது ஒரு பெரிய புதிராக இருப்பதால்தான் மனித வாழ்க்கை வாழும்படியாக இருக்கிறது. இல்லையென்றால் வாழ்வில் சுவை ஏது? இராது அல்லவா? ஊழ்வினை மனிதனுக்கு இரண்டு மாபெரும் வரங்களைக் கொடுத்திருக்கிறது. ஒன்று, வாழ்வின் முற்பிறப்பு நிகழ்ச்சிகள் இந்தப் பிறப்பில் நமக்கு நினைவு இருப்பதில்லை. இது ஒரு பெரிய வரம்! மற்றொரு பெரிய வரம் எது தெரியுமோ? இனி வரும் நிகழ்ச்சிகள் நமக்குத் தெரிவதில்லை. இது ஒரு மாபெரும் பேறு! இயற்கை நமக்கு வழங்கியுள்ள இந்த இரண்டு வரங்களையும் நாம் இழந்து விடலாகாது! ஆகையால் இப்போது வேறு எதைப் பற்றியும் கவலைப்படாதீர். உம்முடைய பிறப்பிலுள்ள புதிரும், வெள்ளைத் தீவின் எதிர்காலமும் ஒன்றோடொன்று பிணைந்து பின்னியிருக்கின்றன! இல்லையென்றால் உம்மை எதற்காகச் சேரலாத மன்னர் தேர்ந்தெடுத்து இந்தப் பணியில் ஈடுபடுத்தியிருக்க வேண்டும்? அது மட்டுமா? நீலவல்லி என்ற பொற்சரடு உம்மையும் வெள்ளைத் தீவையும் சேர்த்து முடி போட்டுச் சுற்றியிருக்கிறது! அதையெல்லாம், அந்த முடிகளையெல்லாம் அவிழ்க்க முனையாதீர்! மறைந்து



''உங்க 'ஓல்டு மாடல்' காரைத் தள்ளி விடணும்னு சொன்னீங்களே? ஒரு கிராக்கி வந்திருக்கு!''

''என்ன விலைக்கு வேணுமாம்?''

''கிலோ ஐந்து ரூபாய்க்கு...!''

# சக்திக்கும், வலிமைக்கும்!







ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப் போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும், சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச்சுலபமாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா? போர்ன்விடா அருந்துங்கள்.

## காட்பரீஸ் போர்ன்-விடா

# வாழ்க்கையை இனிமையாக்குவது காட்பரிஸ்!

இனிப்பிலே இன்பம். பகிர்ந்துகொண்டு நீங்கள் மகிழ விரும்பும் நல்லின்பம். அதுதான் காட்பரிஸ் மில்க் சாக்கலேட்டு தரும் பேரின்பம். ஆம். காட்பரிஸ் சுவையென்றால் குணச் சிறப்பின் சுவை; தர மேன்மையின் சுவை, பரிசுத்தமே உருவான பாலின் தூய்மைச் சுவை. இக் கணமே மென்று பாருங்கள் ஒரு சாக்கலேட்டு— இனிமை, இனிமை, எல்லாம் இனிமை!

ஒவ்வொரு சாக்கலேட்டும் பாலின் குணங்கள் அடங்கியுள்ளது!





சென்ற உங்கள் தந்தையைப் பற்றியே இன்னும் புதிர்களைச் சரியாக அவிழ்க்கவில்லையே! மற்றவர்களைப் பற்றியெல்லாம் தெரிந்து கொள்ள ஏன் ஆசைப்பட வேண்டும்! மௌனமாக இரும். உம்முடைய பணி உம்மை எங்கெல்லாம் அழைத்துச் செல்கிறதோ அங்கெல்லாம் அதன் போக்கில் ஊழ்வினைப் படகிலே மிதந்து செல்லும்! எப்படியாவது கரை சேர்ந்து விடுவீர்! சேரலாத மன்னரை எப்போதோ சந்திக்கும் போது, துருத்தித் தீவில் செவ்வந்தி அடிகளைச் சந்தித்ததாகச் சொல்லும். அப்படிச் சொன்னால் மறைந்து விண்ணுலகு சென்ற உங்கள் தந்தையின் இறுதி நாட்களைப் பற்றி அவரே உமக்கு எடுத்துச் சொல்லுவார்!''

வேலவன்கோதை மறுசொல் இன்றி மௌனமாகத் துறவியின் மொழிகளைக் கேட்டுக் கொண்டு நின்றான். சேரலாத மன்னரை ''எப்போதோ'' சந்திக்கும்போது என்று சொல்லி, ஒரு புதிய புதிர் போடுகிறாரே இந்தத் துறவி என்று மனத்துக்குள் ஒரு கேள்வி எழுந்தது. எப்போது சந்திக்கப் போகிறோம், எப்போதோ என்று சொல்லும்படி என்ன வந்தது இப்போது, என்று ஒரு பெரிய ஐயம் எழுந்தது மனத்துக்குள்ளே! ஆனாலும் கேள்வியே போடக் கூடாது போலல்லவா ஒரு தடை உத்தரவு போட்டிருக்கிறார் இந்தத் துறவி! அதையும் மீறிக் கேள்வி கேட்கலாம் என்றாலோ அந்த விழிகள், துறவியின் அந்தக் கண்கள் தன்னை நோக்கி என்னவோ செய்கின்றனவே!

வேலவன் கோதை அதிகமாக எதுவும் பேசவில்லை. ஐந்தாறு நாட்கள் நுட்பமாக ஏதோ வானிலைக் கணக்கை ஆராய்ந்தார் செவ்வந்தி அடிகள். பிறகு ஒரு நாள் சூரிய உதயத்தில் ஒரு மிதவையிலே பெருந்துருத்தியிலிருந்து பரதூருக்குப் புறப்பட ஆயத்தமானான் வேலவன்! அப்போது துறவி சொன்னார்:—

''எந்தத் தருணத்திலும் உங்களுக்குப் புகல் தரக் கூடியதும், உங்களுக்கு எந்த வேளையிலும் பாதுகாப்பு நல்கக் கூடியதும் இந்தப் பெருந்துருத்தித் தீவு ஒன்றே! இதை ஒரு போதும் மறவாதீர்கள்! புன்னாடு சென்று மலர்வேணியரைப் பார்க்க வேண்டும் என்று செய்தி சொல்லியனுப்பும் போது, பெருந்துருத்தியிலிருந்து வருவதாகவும் செவ்வந்தி அடிகள் அனுப்பியதாகவும் மட்டும் சொல்லியனுப்புங்கள். வேறு உங்களைப் பற்றியோ வெள்ளைத் தீவுபற்றியோ எதுவும் யாரிடமும் தூதாகச் சொல்லி அனுப்பாதீர்கள். இப்போதுள்ள அரசியல் கொந்தளிப்புகளுக்கு நடுவே புன்னாட்டு அரண்மனையிலே முகமன் கிடைப்பது மிகவும் அரிது!''

இவ்வாறு சொன்னார் துறவி. அவருக்கு இரண்டு கைகளையும் கூப்பி வணக்கம் செலுத்தினான் வேலவன் கோதை.

''சென்று வாருங்கள். என்னுடைய வாழ்த்தையும் சேர்த்து உங்கள் மிதவையிலே ஏற்றிக் கொள்ளுங்கள்!'' என்று சொல்லி ஒரு சித்தனைப் போல் பூஞ்சிரிப்புச் சிரித்தார் செவ்வந்தி அடிகள்.

ஃ ஃ ஃ



பரதூருக்கு வந்து சேர்ந்த வேலவன் கோதைக்கு அங்கிருந்து புன்னாட்டின் தலைநகரமான கட்டூருக்குச் செல்வது மிகவும் எளிதாக இருந்தது. நீலக்கல் சுரங்கத்துக்கு இருப்பிடமாக இருந்த காரணத்தால் வெளி நாட்டுச் செல்வந்தர்கள் பலர் பரதூருக்கும் கட்டூருக்கும் அடிக்கடி போய் வந்து கொண்டிருந்தார்கள். குதிரைகளும், வண்ண வண்ண ஊர்திகளும், அகன்ற தெருக்களிலே மொய்த்தவண்ணமாக இருந்தன! அந்தக் காட்சிகளையெல்லாம் பார்த்துக் கொண்டே வணிகர்களிலே வணிகனாகவும், அரசப் பணியாளர்களிலே ஒரு பணியாளனாகவும் கூட்டத்தோடு கூட்டமாகப் பயண ஊர்தி ஒன்றிலே கட்டூர் போய்ச் சேர்ந்து வணிகர்களின் பெரிய விடுதி ஒன்றிலே தங்கிக் கொண்டான் வேலவன்கோதை.

அன்றிரவுப் பொழுதை வேலவன் கோதை கட்டூரின் விடுதியிலே கழித்து விட்டுப் பொழுது விடிந்ததும் மலர்வேணியனைச் சந்திப்பதற்கான முறையில் அரச வீதியிலே நடக்க ஆரம்பித்தான். அவனுடைய உள்ளத்தில் அப்போது ஒரு விந்தையான எண்ணம் எழுந்தது. இது வரை தோன்றாத புதிய எண்ணம் அது!

கடம்பவேந்தனைக் கட்டோடு அழிக்க வேண்டும் என்று கருதுகிற மலர்வேணியன், மீகாமனை எப்படியோ கைக்குள் போட்டுக் கொண்டிருப்பதாக அல்லவா யவனப் பகடி சொன்னான்! அந்த நிலையில் புன்னாட்டு மன்னனின் எதிர்காலச் சூழ்ச்சிகளிலே தனக்கு என்ன பங்கு கொடுக்கப் போகிறார் இந்த மலர்வேணிய மன்னர் என்று, ஒரு

வினாடி எண்ணிப் பார்த்தான் வேலவன் கோதை.

நீலவல்லிக்கும் தனக்கும் உள்ள தொடர்பைப் பற்றி மலர்வேணிய மன்னனிடம் என்ன சொல்லுவது, எப்படிச் சொல்லுவது என்று சிந்தனை செய்து பார்த்தான். சேரலாத மன்னர் வெள்ளைத் தீவுக்குச் சென்று வேவு பார்த்து வரும்படி தன்னை அனுப்பிய இடத்தில், தான் எதிர்பாராத முறையில் நீலவல்லியைச் சந்திக்க நேரிட்டதையும், பிறகு தங்களுக்குள் நேசம் வளர்ந்த முறையையும், பின்னர் இருவரும் சேர்ந்து உறுதி எடுத்துக் கொண்டதையும் மலர்வேணியனிடம் எப்படிச் சொல்லுவது! கடம்பனை முறியடிக்கும் ஒரே நோக்கம் மட்டும் தனக்கு இருந்து, அந்த ஒரு நோக்கத்துக்காக மட்டுமே சேரலாத மன்னரின் தூதுவனாக மலர்வேணியரைச் சந்திக்கச் சென்றால், அப்போது தன் நிலைமை வேறு விதமாக இருக்கும். ஆனால் இப்போதோ சேரலாத மன்னனுடைய தூதுவன் மட்டுமில்லையே வேலவன் கோதை! நீலவல்லியின் அன்புக்கும், அவளுடைய வாழ்வின் எதிர்காலக் கனவுகளுக்கும், இதயத்தின் தாபங்களுக்கும், துயரங்களுக்கும் சேர்த்துச் சரிசமமாகப் பங்கு கொள்ள வேண்டிய ஒரு வீரக் காதலனாகவும் அல்லவா புன்னாட்டுக்குச் செல்கிறான் வேலவன்! இந்தப் புதிய திருப்பம் அவனுடைய வாழ்க்கையில் ஏற்பட்டது, சேரலாத மன்னருக்கே இன்னும் தெரியாதே! இந்நிலையில் மலர்வேணியரைப் பார்த்து அவரிடம் எதை எப்படிச் சொல்வது, எந்த உண்மையை எந்த அளவுக்கு வெளியிட்டுக் கூறுவது, எதை மறைப்பது என்று ஆழ்ந்து எண்ணமிட்டான் அரச வீதியிலே சென்று கொண்டே!

நீலவல்லியிடம் பழகியதிலிருந்தும், துருத்தித் தீவிலே செவ்வந்தி அடிகள் கூறிய மொழிகளிலிருந்தும், மலர்வேணிய மன்னரோடு ஒரு நட்புறவு தன்னுடைய இதயத்துக்குள் ஏற்பட்டிருக்கிறது என்னவோ உண்மைதான்! ஆனால் அவருக்குத் தன்னைப் பற்றி ஒன்றும் தெரியாதே! எந்தக் கண்ணோடு தன்னைப் பார்த்து, எந்த மனப்பான்மையிலே அவர் தன்னோடு பேசுவாரோ! செவ்வந்தி அடிகளிடமிருந்து வந்திருப்பதாக அல்லவோ சொல்லியனுப்பும்படி துறவி தனக்குப் பணித்திருக்கிறார்! அப்படிச் சொல்லி யனுப்பினால் எத்தகைய வரவேற்புத் தனக்குக் கிடைக்குமோ!

இப்படியெல்லாம் குழம்பிக் கொண்டே அரண்மனையை அடைந்து



"டேய் பையா! உங்கப்பா வீட்டுக்குள்ளே இருக்கிறாரா?"

"வேலைக்காரனைக் கூப்பிட்டுக் கேளுங்க! பொய் சொல்வதற்காக அவனுக்குத்தான் சம்பளம் கொடுக்கறாங்க; எனக்குக் கொடுக்கறதில்லே!"

---

முகப்பிலே உள்ள வாணிபத் தொடர்பு மனையிலே நுழைந்தான் வேலவன் கோதை. அங்கேயிருந்த அரசியல் தொடர்பாளரை அணுகிப் பெருந்துருத்தியிலிருந்து வந்திருப்பதாக மெதுவாகச் சொல்லத் தொடங்கினானோ இல்லையோ, அவனை மறு வினாடி மிக்க பணிவுடன் உள் அறைக்கு அழைத்துச் சென்றார் அந்தத் தொடர்பாளர்!

"செவ்வந்தி அடிகளிடமிருந்து வந்திருக்கிறேன் என்று மன்னரிடம் தெரிவிக்க வேண்டும்!" என்று சொல்லி அங்கு இருந்த சாய்மானத்திலே அமர்ந்தான் வேலவன் கோதை. உள்ளே சென்றவர் திரும்பி வருகிற வரை அந்த இடத்தை ஆராயலாமே என்று அவன் சில வினாடிகள் அந்த அறையில் இருந்த சுவர் ஓவியங்களை ஒரு நோட்டம் பார்ப்பதற்குள், என்ன வியப்பு, தொடர்பாளர் விரைவோடு திரும்பி வந்து விட்டார்.

"செவ்வந்தி அடிகளிடமிருந்து வந்திருப்பதால் தாமதமின்றி உடனே உங்களை உள்ளே அழைத்து வரும்படி அரசருடைய கட்டளை!" என்று அவர் அறிவித்தார்.

(தொடரும்)




திருமாலின் பெயர்கொண்டோன் திருவடிக்குத் தண்டனிட்டுக்
கிருட்டின சாமித்தாசன் கிழமையோ டெழுதும் வாழ்த்து :
அருமந்த தமிழன்னை அருந்தவத்தால் அவதரித்த அறவோனே!
பெருமையுறு பேறுபெற்ற இன்றுநின்றுள்! பல்லாண்டு வாழ்க வாழ்க!

தூரத்தே நின்றிடுவர் தூயநின்னறி வொன்றிலையே நன்றறிவர் ;
ஓரத்தே ஒன்றிடுவர் ஓங்கள்பின் உண்மையினைத் தின்றறிவர் ;
ஆரத்தின் மலரன்ன அனைவர்க்கும் மணமீந்து, வேதாந்த
சாரத்தின் அமுதளித்தாய்! சாகரத்தின் அறிவன்றும்!

பிறந்தவர் பெறுதற்கான புகழ்க் குன்றின் உச்சி போந்த
அறந்தரு தவத்திறும்! அழகொழுகு தமிழ்மொழியில்
சிறந்தநூல் பலசெய்தாய்! சிறுகதைகள் பலகண்டாய்!
கறந்தபால் சுவைகண்டோம், கற்பகத்தரு போன்றும்!

இன்றுலகின் இன்ன லெல்லாம் இற்றொழிய இனியவழி
நின்றுல்லவும் அன்பொன்றே நிலையான நியதியென
ஒன்றுபட்டு நாட்டுமக்கள் ஒருமுகமா இடையறாது
நின்றொழுக வேண்டு மென்றும்! நித்தியமா வாழ்ந்திடுக!

நாட்டுமக்கள் நலமாக வாழுதற்கு நல்லபல வழிவகுத்தாய்!
'கோட்டா - பெர்மிட் - லைசென்ஸ' ஒழிவதே அவ்வழியில் ஒன்றென்றும்!
நாட்டாட்சி நடுநிலையில் நன்முறையில் நடக்கா விட்டால்,
'ஓட்'டுடையோர் அதையோட்டும் வகைசெய்தல் வேண்டுமென்றும்!

சுதந்திரம் பிறநாட்டார் சுருக்கிலின்று விடுபடல் மட்டுமன்று :
சுதந்திரமாத் தனிமனிதன் சுகமாக உழைத்துயரும் முறையேயாம்.
விதம்தரு கட்டுப்பாடு வினைவளர்ச்சிக் கிடையூறு விளைப்பதாகும்
சுதந்திரமாய்ச் சுகமாக வாழ்வதற்கே 'சுதந்திரா'க் கட்சி கண்டாய்!

அறத்திற்கும் அறத்தை யூட்டினும்! ஆறறிவிற்கும் அறிவு காட்டினும்!
திறத்திற்கும் திறத்தைப் பூட்டினும்! தெளிவுக்கும் தெளிவு நாட்டினும்!
மறத்திற்கும் மறத்தைக் கூட்டினும்! வியாச மறையோனின்
சிறந்த நூலுக்கு 'விருந்து' செய்தாய்! சீரியோய்! வாழ்க! வாழ்க!!

— எல். கிருஷ்ணசாமி பாரதி

# உண்மையுடன் உறவுகொண்ட உத்தமர்

✱ ✱

—— ம. பொ. சிவஞானம்

தலைவர் ராஜாஜி அவர்கள் எண்பத்தி எட்டாம் ஆண்டைக் கடந்து எண்பத்தொன்பதாம் ஆண்டை அடைகிறார். இயற்கையாகவே நுண்ணறிவும் ஞானமும் படைத்த அவர், தம்முடைய முதுமை காரணமாகவும், பாரதத்தின் இருபதாம் நூற்றாண்டின் பீஷ்மராகக் காட்சி யளிக்கிறார்.

அரை நூற்றாண்டுக்கு மேற்பட்ட காலம் இந்திய அரசியல் வானில் சுடர் விடும் நட்சத்திரமாக விளங்கி வந்திருக்கிறார் ராஜாஜி. 'என் மனச்சாட்சியின் காவலர்' என்பதாக நம்முடைய வணக்கத்துக்குரிய காந்தியடிகள் முன்னொரு சமயம் ராஜாஜியைக் குறிப்பிட்டார். தம் வாழ்நாளில் இறுதிவரையில் ராஜாஜியிடம் காந்தியடிகளுக்கு இருந்த பெரு மதிப்புச் சிறிதும் குன்றாமல் இருக்கக் கண்டோம். இத்தகைய பெருந் தலைவர் நம் தமிழகத்தில் பிறந்து, தமிழினத்தின் அறிவு பாரம்பரியத்துக்குச் சான்றாக விளங்கி வருவது தமிழ் மக்களாகிய நாம் பெருமைப்படத் தக்கதாகும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நடைபெற்ற வீரப் போரில் காந்தி அடிகளின் வலது கரமாகத் திகழ்ந்து பெருமை பெற்றார் ராஜாஜி. பெரும் வருவாய்க்குரிய வழக்கறிஞர் துறையைத் துறந்து சிறைச் சாலையில் அடைபட்டார். சுப்பிரமணிய பாரதியார் இறைவனைப் பார்த்து,

'மேலோர்கள் வெஞ்சிறையில் வீழ்ந்து கிடப்பதுவும்
நூலோர்கள் செக்கடியில் நோவதுவும்காண்கிலையோ'

என்று பாடியுள்ளார். அவர் 'மேலோர்கள்' 'நூலோர்கள்' என்று குறிப்பிடுவதன் பொருள் ராஜாஜியைப் போன்ற பேரறிஞர்கள் சிறையில் அடைபடும் நிலையில் விடுதலைப் போர் அமைந்திருந்ததுதான்.

சிலருக்கு அழிக்கத்தான் தெரியும்; ஆக்கத் தெரியாது. அழிக்கவும் ஆக்கவும் வல்லவர்கள்ஒன்றிரண்டாகத்தான் இருக்கின்றனர். ராஜாஜி அழிக்கத் தெரிந்தவர் மட்டுமல்ல; ஒன்றை அழித்த இடத்தில் இன்னொன்றை ஆக்கவும் தெரிந்தவர். பிரிட்டிஷ் பேரரசை அழிக்கும் முயற்சியிலே பெரும் பங்கு கொண்ட அவர் சுதந்திரத் தனி அரசை அமைப்பதிலேயும் தமக்குள்ள பேராற்றலை வெளிப்படுத்தியுள்ளார்.

1937ம் ஆண்டிலே சிறைக் கைதிகளெல்லாம் செக்ரடேரியட்டில் மந்திரிகளாகும் நிலைமை ஏற்பட்டது. அந்த நாளில் — அப்போதிருந்த - பெரிய சென்னை ராஜ்யத்தின் பிரதமர் பொறுப்பு ஏற்றார் ராஜாஜி. ''இவர்களுக்கு ஆட்சியை எதிர்க்கத் தெரியும்; ஆட்சியை நடத்தத் தெரியுமா?'' என்று ஆங்கிலேயர் கேள்வி எழுப்பிய காலம் அது. அந்தக் காலத்தில் அந்நிய ஆட்சியை எதிர்க்கத் தெரிந்த இந்திய தேசபக்தர்களுக்கு சுய ஆட்சியை நடத்தவும் தெரியும் என்பதனை உலகறியச் செய்வதிலே ராஜாஜி முன்னணியில் நின்றார்.

ஆட்சி பீடத்தில் மாறுதல் கண்ட அந்த நாளிலே சமுதாயத்திலும் புரட்சிகரமான மாறுதல்கள் காணப் பொறுப்பேற்றார். மது விலக்கும் தீண்டாமை ஒழிப்பும் அந்த நாளில் எளிதான காரியங்களல்ல. கடுமையான எதிர்ப்புக்களிடையே இந்திய மாநிலங்களிலேயே, முதன் முதலாகச் சென்னை மாநிலத்தில் ஆலயப் பிரவேசச் சட்டத்தை அமுல் நடத்தினார். தம்முடைய வாரிசுகள் சரியானபடி செயல்படுத்துவார்கள் என்ற நம்பிக்கையோடு, மதுவிலக்குச் சட்டத்தையும் நடைமுறைக்குக் கொண்டு வந்தார்.

இன்னும் தொழிலாளர் — உழவர் நலன் கருதிப் பலப்பல சட்டங்களையும் ஆணைகளையும் அமுல் நடத்தினார். இவையனைத்தும் பழைய செய்திகளே. அவற்றை நான் இங்கு நினைவூட்டக் காரணம் மக்கள் மறந்திருப்பார்கள் என்பதன்று. தமிழ் மக்கள் நன்றி உணர்வுடையவர்கள் ஆதலால் மறந்திருக்க மாட்டார்கள். ஆயினும் அவ்வளவு கஷ்டமான ஒரு காலத்தில் எத்தகைய அற்புதமான கடமைகளை நிறைவேற்றும் பொறுப்பினை ராஜாஜி ஏற்றார் என்பதனை விளக்கிக் காட்டவே பழைய நிகழ்ச்சிகளை நினைவூட்டினேன்.

நாட்டு மக்கள் போற்றக் கூடிய காரியங்களைச் செய்யும் ஆற்றல் படைத்த ராஜாஜி சில சமயங்களில் தமது நண்பர்களும், நாட்டு மக்களும் விரும்பாதவற்றையும் செய்யும் இயல்புடையவர். தீர்க்கதரிசிகளுக்கு இது இயற்கை. பிற்காலத்தின் நிலைமையை முன் கூட்டி அறிந்து அந்தப் பிற்கால விளைவுகள் தீயவையாயின் அவற்றைத் தவிர்க்கவும், நல்லவையாயின் அவற்றை அனுபவிக்க மக்களைத் தயாரிக்கவும் பொறுப்பு ஏற்பவர்களே நாட்டின் தலைவர்களாவர். போதிய கல்வி அறிவு பெறும் வாய்ப்பில்லாத ஒரு நாட்டில் மக்கள் தூற்றுவார்கள் என்று அஞ்சி

நல்லவற்றைச் செய்யத் தவறிவிடுவது தலைமைக்கு ஏற்ற தகுதியாகாது. இந்த உண்மையை நன்கு உணர்ந்தவர் ராஜாஜி. அவர் வருங்காலத்தைப் பற்றிக் கவனித்துக் கூறும் விஷயங்களிலே காலப் போக்கில் சில விஷயங்கள் எதிர்பார்த்ததற்கு மாறாக இருக்கலாம்; ஆனால் தம்முடைய அறிவுக்குச் சரி யென்று பட்ட ஒன்றை மறைத்துக் கொண்டு மக்கள் மத்தியில் நடமாடுவது அரசியல் துறையில் உருவாகும் களவு மனப்பான்மை தான். இத் தவற்றை ராஜாஜி செய்ததில்லை.

பதவிப் பொறுப்பு ஏற்க வேண்டிய அளவுக்குச் சந்தர்ப்ப நிர்ப்பந்தம் ஏற்பட்டபோது தயங்காமல் முன்வந்து ஏற்றிருக்கிறார். இனி பதவியிலிருப்பது தவறு என்ற உணர்வு தமக்கு ஏற்பட்டபோது ஒரு கணமும் தாமதியாமல் பெரும் பதவிகளைக் கூடத் துறந்திருக்கிறார். இத்தகைய மன உறுதி அரசியல் வாதிகளிடம் எளிதில் காண முடியாததாகும்.

பிறருடன் போட்டியிட்டுப் பதவி பெறும் முயற்சியைத் தலைவர் ராஜாஜி எந்த நாளிலும் மேற்கொண்டதில்லை. 1937ல் அப்போதைய சென்னை ராஜ்யத்தின் முதல் அமைச்சராகப் பொறுப்பேற்றபோது சட்டசபைக் காங்கிரஸ் கட்சியின் ஒரு மனப்பட்ட அழைப்பின் பேரிலேயே அதைச் செய்தார். 1952ல் மீண்டும் சென்னை ராஜ்யத்தின் முதலமைச்சரானதும் சட்டசபை காங்கிரஸ் கட்சியின் ஒருமித்த அழைப்பின் பேரிலாகும்.

மிக நீண்ட காலம் காங்கிரஸ் மகாசபையில் மிகுந்த செல்வாக்குடன் விளங்கிய ராஜாஜி அந்த மகா சபையின் தலைவர் பதவியை ஒரு சமயம் கூட அடைந்ததில்லை. அடைவதற்கான வாய்ப்பு ஏற்பட்ட இரு சந்தர்ப்பங்களிலும் எதனாலோ தாம் ஒதுங்கிக் கொண்டு விட்டார். 'முதலமைச்சர் — ஜனாதிபதி' ஆகிய இடங்களைப் பதவிகளாகக் கருதுகின்றனர் சிலர். பொறுப்புக்களாகக் கருதுபவர் ராஜாஜி. பதவிகளாகக் கருதினால் மனத்தில் சபலம் ஏற்படுகிறது. சேவைக்காகப் பதவி என்பது போக, பதவிக்காகச் சேவை என்ற அறியாமைக்கு மனிதன் அடிமையாகி விடுகிறான். பதவியாகக் கருதாமல் பெரும் பொறுப்பாகக் கருதினால் மனத்துக்கும் பதவிக்கும் உறவில்லாமல் இருக்கும். இத்தகைய உயர்ந்த மனப்பான்மை — பதவியிலிருக்கும் போதும் அதனை மனம் பற்றாமல் வாழும் நாகரிகம் — ராஜாஜியிடம் உண்டு. அவருக்கும் பதவி ஆசையைக் கற்பிப்பவர்கள் இருக்கிறார்கள் என்பதை நான் மறந்துவிடவில்லை. இத்தகைய இழிகுணம் உடையவர்கள் எந்தக் காலத்திலும் எல்லா நாட்டிலும் இருக்கத்தான் செய்வார்கள்.

ராஜாஜியை முப்பதாண்டுகளுக்கு மேலாக நான் நன்கு அறிவேன். இருபதாண்டு காலமாக அவருடைய அன்புக்குப் பாத்திரமாகும் பெருமையைப் பெற்றிருக்கிறேன். சில நேரங்களில் அவருடைய கருத்துக்களுக்கும் செயல்களுக்கும் நான் மாறுபட்ட போதும் என்பால் அவருக்கிருந்த அன்பும் மதிப்பும் சிறிதளவும் குறைந்ததில்லை.

எண்பத்தெட்டு வயதைக் கடந்து கொண்டிருக்கும் அந்த முதுபெரும் அறிஞர் இன்னமும் இளைஞருக்குரிய மனோபாவத்தில் செயல்படக் காண்கின்றேன். நினைவாற்றல் சிறிதும் குறையவில்லை. அறிவிலே தெளிவு, மனத்திலே திடம், செயலிலே நேர்மை, நினைப்பிலே தூய்மை, பேச்சிலே வாய்மை, நட்பிலே நாணயம் ஆகிய உயர் குணங்களை இன்றும் அவரிடம் நான் காண்கின்றேன்.

தலைவர் ராஜாஜி ஆளுவோருக்கு எதிராகப் போர்க் கோலம் பூண்டுள்ள நேரம் இது. ஆளுவோர் அவ்வளவு பேரும் அவருடைய நண்பர்கள். அவர்களிலே பலர், ராஜாஜியால் பயிற்றுவிக்கப்பட்டவர்களுமாவர். இவ்வளவிருந்தும் கடமையைச் செய்வதிலே நண்பர்களிடம்கூட தாட்சிண்யமற்றவராகச் செயல்படுகிறார்.

''கட்சிக்காகத் தேசம்'' என்று கருதுகின்றனர் அரசியல்வாதிகள் சிலர். ராஜாஜி, ''தேசத்துக்காகத்தான் கட்சி'' என்று கருதுகின்றார். இந்த அடிப்படை வேற்றுமைதான் காங்கிரஸிடமிருந்தும் தம்முடைய நண்பர்களிடமிருந்தும் ராஜாஜியைப் பிரித்து வைத்திருக்கிறது.

உண்மையான வீரரும் தெளிந்த மதியுடைய அறிஞரும் இந்த உலகத்தில் தனித்து நிற்க நேர்ந்தாலும் அதற்காக அவர்கள் வருத்தப்படுவதில்லை. காரணம், உண்மையோடும் தெய்வத்தோடும் உறவு கொண்டு இருக்க முடிகிறது என்பதுதான். சத்தியத்திலிருந்து விலகிச் சமுதாயத்தின் தலைமையை ஏற்பதைவிட சமுதாயத்திலிருந்து விலகி சத்தியத்தோடு உறவு கொள்வதையே விரும்புவர் சான்றோர்.

ராஜாஜி இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து பாரத மக்களுக்கு வழி காட்ட வேண்டுமென்பது நம் எல்லோருடைய பிரார்த்தனை. அரசியலில் உயர்ந்த கொள்கைகளை, புரட்சிகரமான திட்டங்களை, கவர்ச்சிகரமான கோஷங்களை ஒருவர் உருவாக்கி விடலாம். ஆனால் செயலிலே நேர்மையும், மக்கள் நலன் கருதும் ஒழுக்கமும் அவரிடம் இல்லாவிடில் உயர்ந்த கொள்கைகளும், வேலைத் திட்டங்களும் கோஷங்களும் கானல் நீராகிவிடும். இந்த உண்மையை ராஜாஜி போன்ற பெரியவர்கள் வாழ்ந்து காட்டி வருகின்றனர். இத்தகைய ஒழுக்கத்தை அவரிடமிருந்து நாம் பயில வேண்டும்.



முதல் பரிசு நாவல்

# முள்ளும் மலரும்

உமாசந்திரன்

அருவிக்கரைப் பாதை வழியே மீண்டும் வந்து மூலைக் கடைத் திருப்பத்தைத் தாண்டிக் குமரன் சிறிது தூரம் சென்றான். சற்று முன்னால் வள்ளி தனியே நடந்து சென்று கொண்டிருப்பதைப் பார்த்து அவனுக்கு வியப்பு ஏற்பட்டது. வள்ளியும் அதற்குள் அவனுடைய மோட்டார் சைக்கிளின் ஒலி கேட்டுச் சற்றுத் தயங்கியபடியே ஒதுங்கி நின்றாள்.

தனது வாகனத்தின் வேகத்தைக் குறைத்து அவளருகே வந்து நிறுத்தினான் குமரன். ''ஏன் வள்ளி, நீ வீட்டுக்குச் செல்வதற்குள் நன்றாய் இருட்டி விடுமே. இன்னும் கொஞ்சம் முன்னதாகவே புறப்பட்டிருக்கக் கூடாதா ?''' என்று கேட்டான்.

''அங்கே அவங்களுக்குச் சோறாக்கி முடிச்சு வரதுக்குள்ளே நேரமாயிடுச்சு. ஆனா இது பழக்கப்பட்ட வழிதானே, இருட்டினாக் கூடப் பரவாயில்லே !'' என்றாள் வள்ளி.

பாதையோரமாகச் சிலுசிலுவென்று ஓடிக் கொண்டிருந்த ஓர் ஓடையை அடுத்தாற்போல் இருவரும் நின்று கொண்டிருந்தனர். தென்றலின் போதையில் கிறங்குவது போல் அந்தி மெதுவாக மயங்கிக் கொண்டிருந்தது. இனம் புரியாத மலர்களின் இனிய சுகந்த மணம் எங்கும் நிரம்பியிருந்தது. மரங்களிலும் புதர்களிலும் இரவுக்கான ஆதரவைத் தேடி அடையத் துடித்துக் கொண்டிருந்த பறவையினங்கள் பலவித மழலை மொழிகளைத் திசையெங்கும் வாரிச் சிதறிக் கொண்டிருந்தன. இனத்திலிருந்து பிரிந்து வழி தவறிய ஒற்றைக் குயிலொன்று, 'குஹூ குஹூ' என்று தனது தேன் குரலில் தீனமாகக் கூவியவாறு இங்குமங்கும் பறந்து கொண்டிருந்தது.

''வள்ளி! நான் ஒன்று கேட்பேன், பதில் சொல்லுவாயா?'' என்று கேட்டான் குமரன்.

''என்ன?''

''மேம்பாறைக் கசத்தின் கரையில் நான் நின்றிருந்த போது நீ ஏன் அப்படிக் கூச்சல் போட்டாய்?''

''நீஞ்சத் தெரியாதவங்க கசத்திலே எறங்கினா ஆபத்தில்லையா?''

''எனக்கு நீந்தத் தெரியாது என்று உனக்கு எப்படித் தெரியும்?''

''பட்டணத்திலேயே வளர்ந்தவங்களுக்கு நீச்சல் எப்படித் தெரியும்?''

''நான் பட்டணத்திலேயே வளர்ந்தவன் என்று உனக்கு எப்படித் தெரியும்?''

''நீங்க அன்னிக்கு உங்க கதையெல்லாம் போலாத் தாத்தாகிட்டே சொல்லிக்கிட்டிருந்தீங்களே, அதை நானும் கேட்டுக்கிட்டுத்தான் அங்கே நின்றிருந்தேன்.''

''அப்படியா? என்னைப் பத்தின எல்லாச் சமாசாரமும் உனக்குத் தெரிந்து போயிற்றா ?''

''மன்னிச்சுக்குங்க. நான் அதெல்லாம் கேட்டுக்கிட்டு அங்கே நின்னிருக்கக் கூடாதுதான்'' என்று கூறிய வள்ளி சற்று நேரம் மௌனமாயிருந்தாள்.

பின்பு கூறினாள்:

''சொந்தம்னு சொல்லிக்கிட உங்களுக்கு உலகத்திலே யாருமே கிடையாதுன்னு மொத மொதல்லே உடும்புக் கொட்டகைக்கு வந்திருந்த போது சொன்னீங்களே, அது கேலிக்குன்னு நெனச்சேன். ஆனா அது உண்மைன்னு தெரிஞ்சதிலேருந்து......''

''தெரிந்ததிலிருந்து.....?''

''ஒண்ணுமில்லே!'' என்று கூறித் தலையைக் குனிந்துகொண்டாள் வள்ளி.

'' நீ நினைத்துக் கொண்டிருப்பது உண்மையில்லை, வள்ளி !''

''அப்படியானா அன்னிக்கு நீங்க சொன்னது கேலிக்குத்தானே?'' என்று கேட்டாள் வள்ளி.

''கேலிக்கு இல்லே. உண்மைதான்.''

''ஒரே விஷயம் உண்மையாயும், உண்மையில்லாமலும் எப்படி இருக்க முடியும்?''

'' அன்று உண்மையா யிருந்தது. இன்று உண்மையாயில்லே, அவ்வளவு தான்!'' என்றான் குமரன் சிரித்துக் கொண்டே.

''நீங்க படிச்சவங்க. புதிர் போடற மாதிரிப் பேசினா எனக்கு எப்படிப் புரியும் ?''

''இந்தப் புதிரைப் புரிந்து கொண்டால் என் மனத்தைப் புரிந்து கொண்ட மாதிரி'' என்று புன்னகையுடன் கூறிய குமரன், ''சொந்தம் கொண்டாட எனக்கு இப்போது யாருமே இல்லையா, நீயே சொல் '' என்று கேட்டான்.

''உண்மைதான். கனகா அம்மா, அவங்கண்ணன், அவங்க புருசன்—எல்லாரும் உங்க சொந்தம்தானே!''

''அவர்கள் எல்லாரையும்விடச் சொந்தம் கொண்டாடக் கூடிய ஒரு பெண் இப்போது என் வாழ்வில் தோன்றியிருக்கிறாள்'' என்றான் குமரன், அவள் விழிகளில் தனது விழிகளைப் பதித்த வாறு. ஆனால் வள்ளியின் விழிகள் பதற்றத்தால் பட படக்க வில்லை. மாறாக அவற்றில் உவகை நிறைந்த மலர்ச்சி தோன்றியது.

''அப்படியா, ரொம்ப சந்தோசங்க'' என்றாள் வள்ளி.

அவளது வெள்ளை உள்ளத்தைக் கண்டு குமரனுக்குச் சிரிப்பு வந்தது.

''அந்தப் பெண் யாரென்று உனக்குத் தெரியாதா வள்ளி?''

''நீங்க சொன்னாத்தானே தெரியும்?''

'' சொல்லித்தான் உனக்குத் தெரிய வேண்டுமா ?''

''பின்னே எப்படி சார்!'' என்றாள் வள்ளி.

''இன்னும் விளக்கமாகச் சொல்ல வேண்டுமா ? இப்போது நான் பேசிக் கொண்டிருப்பதே அவளோடுதானே!'' என்று குமரன் புன்னகையுடன் அவளையே பார்த்தவாறு கூறியதும் வள்ளி அதிர்ந்து போய் நின்றாள்.

''என்னங்க.... நீங்க சொல்றது?''

''உண்மைதான் வள்ளி. உயிருக்கு உயிராக என் உள்ளத்தில் இடம் பெற்று விட்டவள் நீயேதான். அன்று கருணியாற்றில் வெள்ளம் பொங்கி வந்த போது என் உயிருக்காக உன் உயிரையே கொடுக்கத் துணிந்து வந்தாயே, அன்றே உன்னைவிடச் சொந்தம் எனக்கு இந்த உலகத்தில் யாருமே கிடையாது என்று நான் தீர்மானித்து விட்டேன்.''

''இல்லீங்க, இல்லீங்க.... நீங்க எவ்வளவோ பெரியவங்க. நான் உங்க கால் தூசுக்குக்கூடச் சமமாக மாட்டேன். என்னைப் பத்தி அப்படி யெல்லாம் சொல்லாதீங்க'' என்றாள் வள்ளி பதற்றத்துடன்.

''வள்ளி, சூரிய வெளிச்சத்தைத் திரை போட்டு மறைக்க முடியுமா? அதே மாதிரித்தான் உண்மையும். சம்பிரதாயத் திரையால் அதை மறைத்து வைக்க முடியாது. நீ அதை எப்படி ஏற்றுக் கொள்வாயோ என்ற அச்சத்தினால்தான் இத்தனை நாட்களும் அந்த உண்மையை என் உள்ளத்திலேயே பூட்டி வைத்திருந்தேன். இன்று என்னையும் மீறி அது வெளி வந்துவிட்டது வள்ளி!'' என்று குமரன் உணர்ச்சி வேகத்தில் பேசிக் கொண்டு போன போது வள்ளி திகைப்புடன் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

சட்டென்று, ''இல்லீங்க... இது கூடாது. இது சரியில்லே.... கொஞ்சம் கூடச் சரியில்லே'' என்று கூறிக் கொண்டே வேகமாக அங்கிருந்து நடக்க ஆரம்பித்தாள். அவள் செல்வதையே பார்த்தவாறு நின்றான் குமரன்.

ஃ ஃ ஃ

**மா**யாண்டிக்கு மறுபடியும் உடும்புக் கொட்டகையில் 'டூட்டி' செய்ய வேண்டிய நாள் அன்று. காலையில் எட்டு மணிக்கு ஆரம்பித்த வேலை ஓய்ச்சல் ஒழிவில்லாமல் பத்து மணி வரையில் இருந்து கொண்டேயிருந்தது. பத்து மணிக்குப் பிறகுதான் மாயாண்டி டிராலியை நிலையில் கொண்டு வந்து நிறுத்தி விட்டுச் சற்று ஓய்வெடுத்துக் கொள்வதற்காக அத்திமர மேட்டில் வந்து உட்கார்ந்து கொண்டான்.

காளியண்ணனைப் போல் பீடி குடிக்கும் வழக்கம் அவனுக்குக் கிடையாது. காளியின் வழக்கத்தைப் பின் பற்றித்தான் அவன் ஓய்வு கிடைக்கும் நேரத்தில் அத்திமர மேட்டில் உட்கார்ந்து கொள்ளும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தான். அதுவே அவனுக்குப் பிடித்துப் போய்விட்டது. மலைச் சரிவில் அங்கங்கேயுள்ள பாறை முகடுகளில் மேகக் கூட்டங்கள் மோதித் திரிவதைப் பார்த்துக் கொண்டிருப்பதிலேயே அவனுக்கு அன்றையப் பொழுது போய்விடும்.

அவன் பார்க்க ஆரம்பித்த சில நிமிஷங்களுக்குள்ளேயே அந்த மேகக் கூட்டங்களெல்லாம் சிங்கம், புலி, சிறுத்தை, ஓநாய், நரி என்றெல்லாம்



இந்தப் பெட்டியைத் திறவுங்கள்...



பவுடர் ஒத்தியை எடுங்கள்...

கவர்ச்சி அழகி யாஸ்மின் தாஜி - 1966ம் ஆண்டு மிஸ் இந்தியாவாகவும், மிஸ் யூனிவர்ஸ் இறுதிப் போட்டியில் இரண்டாவதாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்

## வசீகரத் தோற்றத்தைப் பெறுங்கள்!

இதோ ஒரு லக்மே மாயா ஜாலம்... மென்மையான லக்மே மேகத் திரள் உங்களைக் கவிந்து கொள்கிறது. உங்கள் சரும நிறத்தோடு இணையும் லக்மே பவுடர் உங்கள் மேனி எழிலுடன் கலந்து குலவுகிறது... குறைகள் நிறைவில் மக்கி மறைகின்றன! சோர்வு நீங்கி விடுகிறது. திடீரென முகத்தில் எழிலொளி பரவுகிறது... ஒரு அதிசயம்! மாயம் விளைவித்த மாறுதல் நிலைத்து நிற்கிறது... நாள் முழுதும் உங்கள் சருமம் மிருதுவாகவும், மழமழப்பாகவும், தெளிவாகவும் மிளிருகிறது. ஒரு நாள் மட்டுமா? ஒவ்வொரு நாளும்தான்... எல்லாம் உங்கள் கையிலிருக்கிறது...

**அழகுக் குறிப்பு**

உடனடியான எழில் பெற லக்மே காம்பேக்ட்- எழில் மங்கையரின் கைப்பையில் இருக்கும் மிருதுவான பவுடர் திரட்டு.



# லக்மே
## முகப்பவுடர்

# உலகப் புகழ்பெற்ற நாட்டிங்ஹாம் லேஸ்
# உங்கள் இல்லத்திற்கு
# என்றுமில்லாப் புத்தெழிலைத் தருகிறது!



## லீலா லேஸ்

உங்கள் இல்லம் பரபரப்பூட்டும் புதுமைத் தோற்றம் பெற லீலா லேஸ் (பூத்தையல் இழை) உபயோகியுங்கள். அசல் நாட்டிங்ஹாம் லேஸ் தற்போது பாரதத்திலேயே தயாரிக்கப்படுகிறது. பலவித டிஸைன்களிலும், வர்ணங்களிலும் வரும் லீலா லேஸ் அழகிய திரைச் சீலைகளுக்கும், மெத்தையாசன உறைகளுக்கும் ஏற்றது. தவிர, மேஜைவிரிப்புகள் மற்றும் தலையணை உறைகள் ஆகியவற்றுக்கும் லீலா லேஸ் உபயோகித்து, மிகக் குறைந்த செலவில் உங்கள் வீட்டுக்கு லேஸ் சுகத்தை அளியுங்கள். சிறந்த கடைகளில் விரைவில் லீலா லேஸைக் காணுங்கள். உங்கள் வீடும் இத்தனை எழிலுடன் மிளிர வசதியிருப்பதை உணரலாம்.






உள் அலங்காரம் : லீலா பாக்.

● சலவை முறைக் குறிப்புகளின் துண்டுப் பிரசுரத்தைக் கேட்டுப் பெறவும்.

ஏற்றுமதி பற்றிய எல்லா விவரங்களையும் அறிய, எழுதவும் : ஸ்ரீ. வி.பி. கிருஷ்ணன் நாயர், மானேஜிங் டைரக்டர்.

## லீலா லேஸ் பிரமிப்பூட்டும் பொலிவு

லீலா ஸ்காட்டிஷ் லேஸ் ப்ரைவேட் லிமிடெட்,
அந்தேரி - குர்லா ரோட், பம்பாய்-59- AS

ஏஜெண்டுகள் : மாயா டெக்ஸ்டைல் ஹால், 69, ரட்டன் பஜார், சென்னை-3.
தி க்ரீன் ஷாப், கமர்ஷியல் ஸ்ட்ரீட், பெங்களூர்.

G.26 TM

எண்ண முடியாத வன விலங்குகளாக மாறித் தோற்றமளிக்கும் அவன் கண்களுக்கு. சாதாரண வன விலங்குகள் அல்ல, கணத்துக்குக் கணம் உரு மாறும் வனவிலங்குகள். நரியும், சிங்கமும் மோதிக் கொண்ட மறுகணத்தில் நரி குதிரையாகவும், சிங்கம் காட்டெருமையாகவும் மாறிவிடும். காட்டெருமை பாறையில் மோதிக் கட்டெறும்புக் கூட்டமாகச் சிதறி ஓட ஆரம்பிக்கும். குதிரையும் சிறுத்தையும் மோதிக் கொண்டு இணைபிரியாத இரண்டு கருங்குரங்குகளாக மாறித் துள்ளியோடும். இவ்விதம் அந்த மேக விலங்குகள் காட்டும் விந்தைகளுக்குக் கணக்கே இருக்காது.

இன்று மாயாண்டி அத்திமர மேட்டில் உட்கார்ந்திருந்த போது ஓர் ஒற்றை மேகம்தான் அந்த மலைச் சரிவில் எங்கோ தொலைவில் இரு குன்றுகளுக்கு நடுவே வழி தவறிய ராட்சஸ வௌவால் போல் தலைகீழாகத் தொங்கிக் கொண்டிருந்தது. வௌவாலின் கால்கள் இரு குன்றுகளையும் கெட்டியாகப் பற்றிக் கொண்டிருந்தன. தலைகீழாகத் தொங்கும் வௌவாலுக்கு இறக்கைகள் குவிந்திருக்குமே, ஆனால் இந்த வௌவால் இறக்கைகளைப் பரப்பியவாறே தொங்கிக் கொண்டிருந்தது. மாயாண்டியின் கவனம் அதில் பதிந்தது. இதென்ன? வௌவாலின் முகம் இப்படியா இருக்கும்? புலியின் முகம் போல் இருக்கிறதே ? மாயாண்டி கூர்ந்து கவனிப்பதற்குள் அந்தப் புலி மூஞ்சி வௌவால் குன்றுகளின் பிடிப்பிலிருந்து கால்களை விடுவித்துக்கொண்டு இறக்கைகளை அடிக்காமலே பறக்க ஆரம்பித்து விட்டது. இப்போது அது வௌவாலாக இல்லை. பெரிய பருந்தாக மாறியிருந்தது. புலித்தலை ஒரு வெள்ளை முயலாக மாறி ஓட, பருந்து முயலைத் துரத்திக் கொண்டு ஓடியது. பருந்து முயலைப் பிடித்து விட்டது. அதே கணத்தில் இரண்டும் சேர்ந்து ஒட்டைச் சிவிங்கியின் வடிவத்தை எடுத்துக் கொண்டு மாயாண்டியை நோக்கியே துள்ளி வருவதுபோல் வந்தன. மாயாண்டிக்குச் சிரிப்பு பொங்கியது. ஆனால் மறுகணமே அந்தச் சிரிப்பு அலறலாக மாறும் அளவுக்கு உருமாறி நின்றது ஒட்டைச் சிவிங்கி. அசல் அவன் மனைவி அங்காயியே தான். வெறும் கையுடன் அல்ல, ஓங்கிப் பிடித்த உலக்கையுடன்.

பயந்து போய்க் கண நேரம் கண்களை மூடிக் கொண்ட மாயாண்டி மறு




படியும் கண்களைத் திறந்து பார்த்த போது அங்காயி மறைந்து விட்டிருந்தாள். கிருதா மீசை முனியாண்டி கூனல் நடையுடன் தூரத்திலே ஒரு குன்றைப் பிடிக்கச் சென்று கொண்டிருந்தான். அவன் இருமுவதுகூட மாயாண்டியின் காதில் ஒலிப்பது போல் இருந்தது.

''மாயாண்டி !''

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான் மாயாண்டி. காளியண்ணன் நின்று கொண்டிருந்தான். மேகம்தான் அந்த உருவில் வந்து நின்றதோ என்று ஒரு கணம் அதிர்ந்த மாயாண்டி கண்களை நன்றாகத் துடைத்து விட்டுக் கொண்டான்.

''என்ன காளி? இன்னிக்கு மதகுக் கரைக்கு மீன் பிடிக்கப் போகலே?'' என்றான் வியப்புடன்.

''இல்லே.... இன்னிக்குப் பவர் ஹவுஸ் பக்கம் போகவேண்டிய வேலே இருக்கு. இப்பச் சும்மாத்தானே உக்காந்திருக்கே. என்னைக் கீழே எறக்கி விட்டுடு'' என்றான் காளி.

மாயாண்டி காளியை வியப்புடன் பார்த்தான். ஆனால் காளியின் பேச்சுக்கு மறு பேச்சுப் பேச அவனுக்குத் துணிவு ஏது?

''சரி, வா காளி. அஞ்சே நிமிஷத்திலே உன்னைக் கீழே எறக்கி விட்டுடறேன்'' என்று எழுந்தான்.

''அஞ்சே நிமிஷத்திலேயா? நீ நினைச்சாலும் முடியாது, அப்பா! டிராலி பவர்ஹவுஸுக்குப் போய்ச் சேரக் கணக்கா இருபது நிமிஷங்கள்

பிடிக்கும், தெரியுமில்லே?'' என்றான் காளியண்ணன்.

டிராலியில் ஏறிக் கொள்வதற்காக உடும்புக் கொட்டகையை அடுத்த சரிவில் இறங்குவதற்குமுன் காளி கேட்டான்: ''ஏன் மாயாண்டி, இன்னிக்கு அந்த மங்காக் குரங்கு வேலைக்குப் போயிருக்கில்லே?''

''போயிருக்கு காளி. காலையிலே எட்டு மணிக்கே கருக்கா விட்டிலேயிருந்து வந்திடுச்சு. அது வாய்க்குப் பயந்து மொத ட்ரிப்லேயே அதுக்கு எடத்தைக் குடுத்து அனுப்பிச்சிட்டேன்'' என்றான் மாயாண்டி.

''உம்'' என்று உறுமிய காளி, ''வேலைக்குப் போகுதாம் வேலைக்கு. அது என்ன வேலை செய்யுதுன்னு நானும் பார்த்திடறேன்'' என்று முணுமுணுத்தவாறு டிராலியில் போய் உட்கார்ந்து கொண்டு மாயாண்டிக்குச் சைகை செய்தான்.

டிராலி பவர்ஹவுஸ் நிலையில் போய் நிற்கும் வரை கூட அவனுக்குப் பொறுமையில்லை. டிராலி ஓடிக் கொண்டிருக்கும் போதே குதித்துவிடத் துடித்தான். நல்ல வேளையாக அந்தச் சமயத்தில் டிராலி நிலைக்கு. வந்துவிட்ட தகவலை மாயாண்டிக்குத் தெரிவிக்க வேண்டும் என்ற உணர்வு ஏற்பட்டதால்தான் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு உட்கார்ந்திருந்தான். டிராலி நிலைக்கு வந்ததும் கம்பியைக் கழியால் தொட்டு மாயாண்டிக்குத் தகவல் மணி அடிக்கச்செய்துவிட்டு, பவர்ஹவுஸ் வேலைகள் நடந்து கொண்டிருந்த இடத்துக்கு அவன் விரைந்தான்.

பவர் ஹவுஸில் ஏற்கனவே மூன்று பெரிய மின் யந்திரங்கள் வேலை செய்து கொண்டிருந்தன. மேலும் மூன்று மின் யந்திரங்களை அமைப்பதற்குத் தேவையான கட்டட வேலைகளும் மற்ற வேலைகளும் முறைப்படி அங்கே நடந்து கொண்டிருந்தன. ஏறக்குறைய ஐந்நூறுக்கு மேற்பட்ட தொழிலாளிகள் அந்த வேலைகளில் ஈடுபட்டிருந்தார்கள். எங்கு பார்த்தாலும் தேனீக்கள் போல் உழைத்துக் கொண்டிருந்த அத்தனை பேருக்கிடையே மங்காவை எப்படித் தேடுவது?

பெண் சிற்றாட்களில் மங்காவும் ஒருத்தி என்பதைத் தவிர வேறு எந்தத் தகவலும் காளியண்ணனுக்குத் தெரியாது. வெள்ளாத்தாள் வேலை செய்து கொண்டிருந்த அதே வேலையில்தான் மகளும் சேர்ந்திருக்கிறாள் என்ற விஷயம் மட்டும் அவனுக்குத் தெரிந்திருந்தது. ஆனால் என்ன பயன்? வெள்ளாத்தாள் எந்தப் பகுதியில் வேலை, செய்து வந்தாள் என்ற தகவல் அவனுக்குத் தெரிந்திருந்தால்தானே? பெண் சிற்றாட்கள் எல்லாரும் தலையில் சும்மாடு கட்டிக் கொண்டு வேலை செய்தார்களாதலால் யாரைப் பார்த்தாலும் ஒரேமாதிரியாகத்தான் தோற்றமளித்தார்கள்.

மங்காவை எதற்காக அவன் தேடினான்? அவள் என்ன வேலை செய்தால் அவனுக்கு என்ன? அவள் வேலை செய்வதோ, வேலை செய்யாமல் இருப்பதோ அவள் இஷ்டம். அது விஷயத்தில் தலையிட அவன் யார்? அவன் பேச்சை மங்கா கேட்டுவிடப் போகிறாளா, என்ன? ஆனால் இந்தக் கேள்விகளெல்லாம் அவன் மனத்தில் எழவில்லை. உள்ளூற அவனைத் தின்று கொண்டிருந்த வேதனை தாங்காமல்தான் அவன் அவ்வளவு ஆத்திரத்துடன் புறப்பட்டு வந்திருந்தான்.

உச்சிக்கடவுப் பகுதியிலிருந்து டிராலியில் வழக்கமாக வரும் தொழிலாளிகள் ஓரிருவர் காளியண்ணனைப் பார்த்ததும் வியப்புடன், ''என்ன அண்ணே, இந்தப் பக்கம்?'' என்று நிற்காமலே கேட்டுக் கொண்டு சென்றனர். காளியண்ணனுடைய பதிலை எதிர்பார்த்து நிற்பதற்கு அவர்களுக்குப் பொழுது ஏது? காளியண்ணனும் அவர்களிடம் மங்காவைப் பற்றிக் கேட்க விரும்பவில்லை. மங்காவைத் தேடித்தான் அவ்வளவு தூரம் வந்ததாகக் காட்டிக் கொள்வதையே அகௌரவமாக அவன் நினைத்தான். மங்கா எங்காவது தென்படுகிறாளா என்று பார்த்துக் கொண்டு அந்தத் தொழிலாளர் கும்பலிடையே அவன் இங்கும் மங்கும் நடந்து கொண்டிருந்தான்.

''யோவ்.... ஏன்ய்யா வழியிலே நின்னு வம்பு குடுக்கறே?'' என்று ஒரு குரல் அவனை அதட்டியதும்தான் அவன் நிதி கிடைத்தவன் போல் திரும்பிப் பார்த்தான். கூடை நிறைய ஜல்லிக் கற்களைத் தலையில் ஏந்திய ஒரு சிற்றாள் அவன் எதிரே நின்று கொண்டிருந்தாள். முகமெல்லாம் தூசி படிந்த நிலையிலும் அவள் மங்காதான் என்பதைப் புரிந்து கொள்ளக் காளியண்ணனுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. அவனது சிவந்த கண்களில் கலக்கம் தோன்றியது.

''மங்கா! கல் சுமக்கற வேலையா நீ இங்கே செய்துக்கிட்டிருக்கே?'' என்று கேட்டான்.

''கல் சுமக்காம? பூவைச் சுமக்கவா சித்தாளுக்குச் சம்பளம் குடுப்பாங்க?




# திருப்தியளிக்கும் புது உலகம்

உற்சாகம் நிரம்பிய புது உலகத்திற்கு அழைத்துச் செல்லும் ப்ரூக் பாண்ட் A-1 தேயிலைத் தூள். ஒரு பாக்கெட்டிற்கு அதிக கப்புகள் சுவையுள்ள தேநீரைக் கொடுக்கும். மகிழ்ச்சியூட்டும் ப்ரூக் பாண்ட் A-1 தேயிலைத் தூளை வாங்குங்கள் - இன்சுவையும் நறுமணமும் நிரம்பிய புது உலகத்திற்கு அழைத்துச் செல்லும்.

BB3441



தூரத்திலிருந்து காணில்
அழகு...



அருகே நெருங்கினாலோ
கொஞ்சும் எழில்

ஆம், **லாக்டோ-காலமைன்** உபயோகித்தால்

இனி எழிலுடன் விளங்குங்கள்—லாக்டோ-காலமைன் ஒரு சிறந்த அழகுசாதனம்சருமக்கோளாறுகளை மிருதுவாயும், மென்மையாகவும் நீக்குகிறது.

இனி என்றுமே எழிலுடன் மிளிருங்கள்—லாக்டோ-காலமைனில் சருமத்திற்கு நலன் தரும் காலமைன், விட்ச்ஹேஸல் இரண்டும் உள்ளன...சருமத்தைத் தூய்மையுடன் ஒளிவிடச் செய்கிறது.

**லாக்டோ-காலமைன் மூலம் எழிலுடன் துலங்குங்கள்!**

அட்டைப்பெட்டியுடன், திருட்டுச் செய்யமுடியாத சீசாவில் தற்போது கிடைக்கிறது.




சருமக் கோளாறுகளைக்
களையும் ஒரே
அழகு சாதனப்
பொருள்

**லாக்டோ காலமைன் ரகங்களில் இப்பொழுது கிரீம், டால்க் இரண்டும் கிடைக்கின்றன.**

Benson/I-CIL-9-TAM

சரி, சரி எட்டி நில்லு. நான் உன்கூடப் பேசிக்கிட்டு நிற்கிறதைப் பார்த்தா அந்த மேஸ்திரி கூச்சல் போடப் போகுது!'' என்றாள் மங்கா.

''யாரவன் மேஸ்திரி?'' என்றான் காளி சட்டென்று பொங்கிய கோபக் கொதிப்புடன்.

மங்கா சிரித்தாள். ''மேஸ்திரியோட மல்லுக்கு நிக்கப் போறயா இப்போ? போய்யா, போய்யா. உன் சூரத்தனத்தையெல்லாம் உன்னோட உடம்புக் கொட்டகையோடேயே வச்சுக்க'' என்று கூறியவாறு மங்கா தன் வழியே நடந்தாள்.

ஓரிரு அடிகள் அவளைத் தொடர்ந்து நடக்க ஆரம்பித்த காளி சட்டென்று மனத்தை மாற்றிக் கொண்டு ஒரு பக்கமாக ஒதுங்கிச் சென்று ஜல்லிக் குவியலுக்கருகே வாகை மர நிழலில் உட்கார்ந்து கொண்டான். ஓர் ஆண் சிற்றாள் ஜல்லிக் கற்களை அள்ளி அள்ளிக் கூடைகளில் போட்டுக்கொண்டிருக்க, ஒருவர்பின் ஒருவராக வந்த பெண் சிற்றாட்கள் தாங்கள் கொண்டு வந்த காலிக் கூடையைக் கீழே போட்டு விட்டு ஜல்லிக் கூடையைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டு சென்றனர். மங்கா மறுபடியும் அங்கு வந்துதானே தீர வேண்டும்?

அவன் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் காலிக் கூடையை வீசிக் கொண்டு வந்த மங்கா மண்வெட்டி ஆளின் காலடியில் அதை அலட்சியமாக எறிந்து விட்டு ஜல்லிக் கூடையைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டு திரும்பினாள். அப்போது அவள் பார்வை காளியண்ணன் மீது விழுந்தது. ஆனால் அவள் நிற்கவில்லை. ஒரு வெட்டு வெட்டுவது போல் முகத்தைத் திருப்பிக் கொண்டு சென்று விட்டாள்.

''மறுபடியும் வரட்டும், பேசிக்கிடறேன்'' என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டான் காளியண்ணன்.

ஆனால் அதற்குச் சந்தர்ப்பமே கொடுக்காமல் சில நிமிஷங்களுக்குள்ளேயே சாப்பாட்டுச் சங்கு ஒலித்தது. அவரவர் போட்டது போட்டபடி விட்டு விட்டு வயிற்றுப்பாட்டைக் கவனிக்க விரைந்தனர்.

வாகை மரத்தடியிலே தனித்து விடப்பட்ட காளியண்ணன் ஓர் ஆத்திரப் பெருமூச்சுடன் எழுந்தான். அதே சமயம் அவன் மனத்தில் ஒருவிதப் பரபரப்பும் ஏற்பட்டது. மங்காவிடம் மனம் விட்டுப் பேச வேண்டுமென்றால் அதற்கு இதுதான் சரியான சமயம். ஆனால் அவள் எங்கே உட்கார்ந்து கொண்டு சாப்பிடுவாள் என்று அவனுக்குத் தெரியாதே!

மறுபடியும் அவளைத் தேடும் படலத்தைத் தொடங்கியாக வேண்டுமே என்ற எரிச்சலுடன் அங்கிருந்து இரண்டடி நடக்க ஆரம்பித்த காளி மறுகணம் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டான். மங்காவே கையில் சாப்பாட்டுப் பாத்திரத்துடன் அவனை நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

''வள்ளியண்ணே... வாகைமர நிழல் உன் உடம்புக்கு ஒத்துக் கலையா? ஏன் எழுந்திட்டே?'' என்று கேட்டுக் கொண்டே அவனருகே வந்து நின்றாள் அவள்.

''இங்கேயே உட்கார்ந்திருந்தால் எப்படி? நீ சாப்பாடு சாப்பிட எங்கேயாவது போய்த் தொலைஞ்சால் அப்புறம் உன்னைத் தேடறது கஷ்டமாச்சே'' என்றான் காளியண்ணன்.

''ஏன்ய்யா, உன்னை இங்கே காயக் காய உக்காத்திட்டு நான் வேறே எங்கேயாவது சாப்பிடப் போவேனா?''

''நான் ஒண்ணும் காயக் காய வரல்லே. நாயர் கடையிலே நிமிரச் சாப்பிட்டுட்டுத்தான் வந்திருக்கேன்.''

''ஆமாம், நாயர் கடையிலே என்ன கிடைக்கும்னு எனக்குத் தெரியாது, பாரு!'' என்று கூறிய மங்கா தூக்குப் பாத்திரத்திலிருந்த புளியஞ்சோற்றில் பாதியைப் பாத்திரத்து மூடியில் எடுத்துப் போட்டுக் காளியண்ணனிடம் நீட்டினாள். பின்பு ஏதோ நினைத்துக் கொண்டவள்போல் ''வா, மரத்தடியிலே உட்கார்ந்து சாப்பிடலாம்!'' என்று அழைத்தாள். **(தொடரும்)**




வழக்கறிஞரிடம் ஒரு திருடன் சென்றான். தனக்காக வழக்காடும்படி வேண்டினான். ''ஐயா! தங்களுடைய பணிக்குப் பணம் கொடுக்க என்னிடம் பணமில்லே. ஆனால் தங்களுக்கு விருப்பமானால், ஒரு ரேடியோ, ஒரு தங்கச் சங்கிலி, ஓர் அழகான கைக் கடிகாரம் முதலியவைகளைத் தருகிறேன், போதுமா?'' என்று கேட்டான் திருடன்.

வழக்கறிஞர், ''இவ்வளவு போதும். ஆனால் உன் மீது தொடரப்பட்டுள்ள வழக்கு என்ன?'' என்று கேட்டார்.

அதற்குத் திருடன், ''ஒரு ரேடியோ, ஒரு தங்கச் சங்கிலி, ஒரு கைக் கடிகாரம் ஆகியவைகளைத் திருடியதாகக் குற்றம் சாட்டப்பட்டுள்ளேன்!'' என்றான்.

— இரா. சுந்தரவரதன்



1. விமான நிலையத்தில் ராஜாஜி தம் எடையை நிறுக்கும் இயந்திரத்தில் காணும் போது அருகில் நின்று உன்னிப்பாக அக்கறையுடன் நோக்குபவர் தமிழ்நாடு சுதந்திரக் கட்சித் தலைவர் சா. கணேசன்.



2. முஸ்லிம் லீக் தலைவர் இஸ்மாயில் சாகேபுடன் அளவளாவுகிறார்.

3. கட்சி வேறு, நட்பு வேறு என்பதைக் காமராஜருடன் ராஜாஜி அன்போடு அளவளாவும் இக்காட்சி எடுத்துக் காட்டுகிறது. அருகிலே ம. பொ. சி.







1. சாந்தி சமாதான நிறுவனத்தின் சார்பில் அணு ஆயுதக் குறைப்பு பற்றிப் பேச அமெரிக்காவுக்குச் சென்ற ராஜாஜியும், குழுவின் பிற அங்கத்தினர்களான ஸ்ரீ சிவராவும், ஸ்ரீ திவாகரும்.

2. சுதந்திரக் கட்சித் தலைவர்களான ஸ்ரீ எம். ஆர். மசானியும், ஸ்ரீ என். ஜி. ரங்காவும் ராஜாஜியுடன் அளவளாவுகின்றனர்.

3. சுதந்திரக் கட்சிக் கூட்டத்தில் டாக்டர் சந்தோஷம், ஸ்ரீ சித்ரா நாராயணசாமி, ஸ்ரீ ஆர். எம். சேஷாத்ரி ஆகியோருடன் ராஜாஜி.

அடுத்த பக்கத்தில்....

1. ஹைதராபாத் ராஜ்யத்துக்கு விஜயம் செய்த கவர்னர் ஜெனரல் ராஜாஜி, அஜந்தா குகைச் சிற்பங்களைப் பார்வையிட்டார்.

2. ஜய்பூர் மகாராணி காயத்ரிதேவி தலைவருடன் கலந்தாலோசிக்கிறார்.

3. கோவை சுதந்திரக் கட்சித் தலைவரும் எம். பி.யுமான திரு ஜி. கே. சுந்தரம் தலைவரோடு ஆலோசனையில் மூழ்கியுள்ளார்.

4. பம்பாயில் கே. எம். முன்ஷியோடு அளவளாவுகிறார் ராஜாஜி.

5. சண்டிகரில் பஞ்சாப் தலைவர் தாராசிங்கும் ராஜாஜியும் சந்தித்துப் பேசி உணவருந்தியபோது எடுத்த படம்.

6. அறிஞர் அண்ணாதுரையுடன் ராஜாஜி உரையாடுகிறார்.



[இக்கட்டுரை ஆசிரியர் முன்பு சென்னையில் அமெரிக்கப் பிரதிநிதியாக இருந்தவர். ராஜாஜியிடம் நெருங்கிய தொடர்பு கொண்டவர். தற்போது அவர் ஃபிலடெல்பியாவிலுள்ள அமெரிக்கரின் இந்திய ஆராய்ச்சிக் கழகத்தில் (American Institute of Indian Studies) டைரக்டராக இருக்கிறார்.
—ஆசிரியர்]

# தீரம் நிறைந்த தேச பக்தர்

## டாக்டர் தாமஸ் டபிள்யூ. ஸைமன்ஸ்

எண்பத்தேழாண்டுகளுக்கு முன், *1879ம் ஆண்டில், இந்தியாவில் அதன் தீவிரமான தேச பக்தர்களில் ஒருவர் தோன்றினார். அவர் தான் ஸி. ராஜகோபாலாச்சாரியார். 'மகா சாம்ராஜ்யத்தின் முடிவுக் காலம்' என்று ஜான் ஸ்ட்ராகி அழைக்கும் காலகட்டத்தில் அவரது ஜனனம் நிகழ்ந்தது. ரிப்பன் பிரபு நல்லெண்ணத்துடன் இந்தியாவில் ராஜப் பிரதிநிதியாக ஆட்சி நடத்திய காலத்தில் இளம் ராஜகோபாலன் வளர்ந்தார். இந்திய தேசியக் காங்கிரஸின் மிதவாதத் தலைவர்களுடைய லட்சியத்தில் இந்தியா ஒரு புதிய தேசிய உணர்ச்சியைப் பெற்ற காலமே அவர் கல்வி பயின்ற காலம். தொடக்கத்திலிருந்தே அவருக்குத் தேச பக்தி என்பது சுபாவத்தின் ஓர் அங்கமாகி விட்டது. அவரது ஆங்கிலேயப் பள்ளி ஆசிரியர் ஒருவர் அவரை மேற்படிப்புக்காக இங்கிலாந்துக்குப் போக ஊக்கிய போது, "வேண்டாம், ஐயா, இந்தியாவே எனக்குப் போதிய அளவு நன்மை பயப்பது" என்றார் அவர். அன்றிலிருந்து என்றும் அவர் அப்படியே இருந்து வந்திருக்கிறார்.

அவர் பிறந்து எண்பத்தேழாண்டுகளுக்குப் பின், 1966ம் ஆண்டில் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் எப்படியெல்லாம் இந்திய சேவைக்கு வாழ்வை அர்ப்பணித்து வந்திருக்கிறார் என்று பார்க்கிறோம். தேசிய அரசியலின் புழுதி படிந்த வாழ்வில் காந்திஜியைப் பின்பற்றுவதற்காக வெற்றிகரமான வழக்கறிஞர் வாழ்வின் அமைதியை அவர் ஆதியிலேயே தியாகம் செய்தார். இரு முறை காந்திஜி சிறைப்பட்ட போது அவரது இடத்தில் இவர் தாம் பணியாற்றியுள்ளார். 1920-ஐ ஒட்டி 'யங் இந்தியா'வின் ஆசிரியப் பொறுப்பை ஏற்றது ஒரு முறை; 1930ஐ ஒட்டி ஒத்துழையாமை இயக்கத்தின் போது இன்னொரு முறை.

இரு முறை அவர் சென்னையின் முதன் மந்திரியாகத் தேர்வு பெற்றார். சுதந்திரத்துக்கு முன்பொரு முறையும், பின்பொரு முறையுமாக. 1947க்குப் பின் அவர் மத்திய காபினெட் மந்திரியாகவும், மேற்கு வங்க கவர்னராகவும் பணிபுரிந்துவிட்டு, இந்தியாவின் கடைசி கவர்னர் ஜெனரலாகவும் பதவி ஏற்றார். இரு முறை அவர் காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகியிருக்கிறார். பிரிட்டிஷ் இந்தியாவைப் பிரிவினை செய்யும் கருத்தைக் காங்கிரஸ் ஏற்க வேண்டும் என்று அவர் கூறி முதன் முறையாகப் பிரிந்தார். அது தாற்காலிகப்

* ராஜாஜி 1878ல் பிறந்தார் எனக் கொள்வதற்கு அதிக ஆதாரமுண்டு.

டாக்டர் ஸைமன்ஸும் ராஜாஜியும்.



பிரிவாகவே இருந்தது. இரண்டாவது முறிவு 1959ல் பிப்ரவரி மாதத்தில் நிகழ்ந்தது. எதிர்க்கட்சியொன்றை அமைக்க வேண்டும் என்று அவர் அப்போது அறைகூவினார். இது நிரந்தரப் பிரிவாக அமைந்துவிட்டது.

ராஜாஜி இந்திய வரலாற்றில் அவ்வப்போது நிரப்பியுள்ள பாகங்களைப் பார்த்து 'இவர் முன்னுக்குப்பின் முரணாகச் செயலாற்றுபவர்' என்று சிலர் சொல்கிறார்கள். இது எவ்வளவு ஆழமற்ற கருத்து! அவரது நீண்ட வாழ்வுக் காலத்தில் ஏற்பட்ட மாறுபாடான சூழ்நிலைகளையே அவரது மாறுபட்ட பணிகள் விளக்குகின்றன. காலம் மாறும் போது அவரும் அந்த மாறுதலின் அங்கமாகி வந்தார். இந்தியாவின் கால மாறுபாடுகளுக்கெல்லாம் ஏற்ப அவர் வாழ்ந்திருக்கிறார் என்பதிலேயே அவரது சீர்மையை, முரண்பாடின்மையைக் காண்கிறோம். தங்களுடைய ஆதரிசக் கனவையே நடைமுறை வாழ்க்கையாக்கிக் கொள்ளும் அபூர்வமான தீர புருஷர்களில் ஒருவர் அவர் — வாழ்க்கையைக் கனவாக்கிக் கொள்பவரல்ல. இந்தியாவிடம் அவர் கொண்டுள்ள பிரேமை முரணின்றி ஒரே சீராகச் சென்றுள்ளது. மாறுபாடற்ற இந்தத் தேசப் பிரேமை காரணமாகவே அவரை ராஜாஜி (மன்னர்) என்று இந்தியர்கள் அன்போடழைக்கிறார்களோ என்று நான் எண்ணுவதுண்டு.

இந்திய தேசத்தவராகவே வாழ்ந்து வருகையில் ராஜாஜி வெறும் அரசியலுக்கு மேம்பட்ட நிலையை அடைந்து விட்டார். இந்திய மரபுகளையும் இலட்சியங்களையும் அஸ்திவாரமாகக் கொண்டது அவருடைய தேசபக்தி. மகாபாரதம், இராமாயணம், பகவத்கீதை முதலிய இந்திய சமய நூல்களை அவர் மொழி பெயர்த்திருப்பதும், தருமம் கருமம் இவை பற்றி அவர் அடிக்கடி குறிப்பிடுவதும் அவரது உள்ளப் பாங்கின் அடிப்படையைக் காட்டுகின்றன. எனினும், அவர் பத்தாம் பசலி அல்ல; நவீன மனப்பான்மை படைத்த ஓர் இந்தியரே.

இந்தியாவை ஒரு நவீன நாடாக அவர் காண்கிறார். இன்றைய உலகில் இந்தியாவுக்கு ஸ்தானம் தேடித் தரவே அவர் இடையறாது முயன்று வருகிறார். இந்தத் திட்டத்தின் வெளி உருவமாகவே 1962ம் ஆண்டில் அவர் மேல்நாடு சென்று இந்தியாவின் இலட்சியமான உலக சமாதானத்தை எடுத்தியம்பினார். இந்தச் சமாதானப் புனித யாத்திரையில் அவர் முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி கென்னடி அவர்களுடனும், இருபத்து மூன்றாவது போப் ஜான் அவர்களுடனும் கைகோத்துச் செயலாற்ற முடிந்தது. நவ உலகில் இந்தியாவுக்குரிய இடம் பற்றி ராஜாஜி தீர்க்கதரிசனத்துடன் எழுதியுள்ளது போல் வேறு எந்த இந்தியரும் எழுதியதில்லை.

உரை நடை — செய்யுள் இரண்டிலுமே ஆங்கிலத்தைக் கையாள்வதில் ராஜாஜி நிபுணர். அவரைப் போல இவ்வளவு அழகாக, இவ்வளவு விரிவாக எழுதிய இந்தியர்கள் வெகு சிலரே. அவர் அதிகம் எழுதுவது மட்டுமல்ல; அவர் கையாளும் விஷயங்களின் வீச்சும் விஸ்தாரமானது.

ராஜாஜியைச் சந்திப்பவர்கள் ஏராளமாக இருக்கலாம். எனினும் அவரை அறிந்து விட்டதாக உரிமை கொண்டாடும் தைரியம் வெகு சிலருக்கே உள்ளது. இந்திய அரசியல் தலைவர்களிடையே எண்பத்தேழாண்டுகளாக வாழ்பவர் எனினும் இவரைக் குறித்து உரிய முறையில் வாழ்க்கை நூல் உருவாகாதது வருந்தத் தக்கது. இதில் அவர் தனித்து நிற்கிறார். சுயசரிதம் எழுத மறுப்பதில் இவர் அன்றிலிருந்து இன்றுவரை முரண்பாடு காட்டாதவர். மற்றவர் தம்மைப் பூரணமாகத் தீட்டுவதை ஊக்குவதற்கும் அவர் பிடிவாதமாக மறுத்து வருகிறார். தமது வாழ்க்கையின் பழைய சம்பவங்களை நினைக்குமளவிலேயே தமக்கு அலுப்புத் தட்டி விடுகிறது என்று அவர் என்னிடம் ஒரு முறை கூறியிருக்கிறார். அவர் சென்று போனதைப் பற்றி நினைப்பதில்லை. நிகழ் காலத்தைக் குறித்ததே அவரது கவனம்.

நாம் அவரிடம் காண்பதெல்லாம் ஒரு சிறிய உருவமும், அவ்வுருவத்தின் மீதோங்கி நிற்கும் உன்னதமான அறிவுத் திறனுமேயாகும். அவரது பொறுமை நிறைந்த குரலைக் கேட்கிறோம். நட்பின் ஆறுதல் மொழிகளைக் கூறும் குரல் அது. கலகலவெனச் சிரிக்கும் குரல். எனினும் அவரை நாம் முற்றிலும் காண்பதில்லை. பூரணமான உத்தம வாழ்வின் உட்சுடர்களைத் தெறிக்கக் கூடிய அவரது கண்களையும், அக்கண்களின் கோடியிலுள்ள அநுபவச் சுருக்கங்களையும் அவரது கருப்புக் கண்ணாடி மறைத்துவிடுகிறது. நாம் அறியவொண்ணாத ராஜாஜிக்கு ஓர் உருவகமே அந்தக் கருப்புக் கண்ணாடி. கருப்புக் கண்ணாடி அணியாத ராஜாஜியை நம்மால் பார்க்க இயலாததாலேயே அவரது இந்திய தேச பக்தியின் முழுமையை நாம் உணர முடியவில்லை. அவரது இலக்கு என்ன என்பதையும் காணப் பிசகுவதால் தவறான வழி சென்று விடுவோம். ஆனால் அவர் பிறர் தம்மைப் பற்றி என்ன நினைத்தாலும் அதற்காகத் தமது வழியைத் தவறவிடமாட்டார். அவரது வாழ்வின் மையப் பொருள் இந்தியா. இந்தியா என்பது என்ன, அது எதை நோக்கிச் செல்கிறது, அது எதிர்காலத்தில் என்னவாகக் கூடும் என்பன குறித்து அவர் தமது சகாக்களிடமிருந்து மாறுபடலாம். எனினும், காலதேச வர்த்தமானங்களில் உலகம் எப்படிச் சுழன்ற போதிலும் இந்தியாவே அவரது துருவ நட்சத்திரம்.

இந்தியாவின் தீர சரித்திரத்தின் காட்சிகளை ஓர் இந்தியரோ (அல்லது வெளிநாட்டாரோ) வருணித்து எழுதினால் அதன் முன்னணியில் ராஜாஜி இடம் பெறுவார். இந்திய தேசியத்தின் முடிவான அகராதியில் 'ராஜாஜி' என்ற பதத்துக்கு 'இந்தியாவின் மகோன்னதமான தேச பக்தர்களில் ஒருவராக இருக்கும் தீரத்தைப் பெற்றவர்' என்ற பொருள் பொறிக்கப்படும்.

எனவே, இன்றே நாம் ராஜாஜியைப் போற்றி வாழ்த்துவோம். குன்றாத நெஞ்சுரத்துடன் தொண்ணூறாவது ஆண்டை நோக்கிச் செல்லும் அவரைப் போற்றி வணங்குவோம்.



பம்பாய் மலிக் எலக்டிரிக் ஓர்க்ஸ் ஸ்தாபனத்தின் விற்பனை மானேஜர் ஸ்ரீ K. U. நாயுடு அவர்களுக்கும் சௌபாக்கியவதி பாப்பாவுக்கும் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!



புது தில்லி M. V. சப்தரிஷி அவர்களின் ஜேஷ்டகுமாரத்தி சௌ. தனலக்ஷ்மிக்கும், ஸ்ரீ G. சுப்ரமணிய அய்யர் அவர்களின் குமாரர் சிரஞ்சீவி வெங்கட்ராமன் B. Com. அவர்களுக்கும் சமீபத்தில் புது தில்லியில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

**யோ**க சாதனை தொடங்கினாள் மீரா!

ஆனால் சாதனையின் சாத்தியமாகிய சத்திய வஸ்து அவளை அந்த வழியில் செல்ல விட்டதா, என்ன?

இவள் விவாகரத்துக்கு முனைந்தாலும் அவன் உருவம் தாங்கி நிற்பதை நிறுத்த வில்லை. இவள் அன்புணர்ச்சிகளைப் புறக் கணிக்க நினைத்தாலும் அவன் அவற்றை மீண்டும் மீண்டும் அவளுள் இனித்துக் கொண்டு தான் இருந்தான்.

மீரா பிராணாயாமம் செய்தாள். குண்டலினி சக்தியை மேல் நோக்கி எழுப்பினாள்.

ஆனால் அது அவளை அமைதிக்கா இட்டுச் சென்றது? அல்ல. பல கோசங்களைக் காட்டியது; ஆதார கமலங்களைக் காட்டியது; அவற்றில் ஆரோகணித்துள்ள பல தேவதைகளைக் காட்டியது; அந்தத் தேவதைகளைச் சுற்றியுள்ள பல பரிவாரங்களைக் காட்டியது. அவையெல்லாம் மீராவிடம், 'உனக்கு இந்தச் சக்தியைத் தருகிறேன், அந்தச் சக்தியைத் தருகிறேன்' என்று முன் வந்தன. மீரா நடுநடுங்கினாள். 'ஐயையோ, அமைதியைத் தேடி வந்தேன். இப்போது முன்னிலும் அதிகமாக அல்லவோ அலைப்புண்டு கலங்குகிறேன்? முன்பு இருந்ததிலும் அதிகமாக அல்லவோ இப்போது உணர்ச்சிகள் கொந்தளிக்கின்றன? இந்த ஆரம்ப அநுபவங்களைக் கடந்து, சித்தத்தை மாய்த்து என் ஜீவனைச் சமாதி நிலையில் கரைப்பது நடக்கிற காரியமா? யோகி என்னை ஏமாற்றி விட்டார். இது வெகு எளிதான மார்க்கம் என்று கூறி, கடக்க வொண்ணாத கானகங்களிலும், மலை முகடுகளிலும் என் கண்ணைக் கட்டிவிட்டு விட்டார்.'

இயற்கையை மீறி யாராலேனும் செல்ல முடியுமா? கொடிக்குக் கொழுகொம்பும் பந்தலும் வேண்டும். ஆயின் செடி வளர இவை தேவை அல்லவே! செடிக்கு உதவ நீளத்து அதை முறித்து முறித்துப் பந்தலைச் சுற்றி விட்டால் என்னாகும்? அன்பு வழி, அழகு வழி கண்ட மீராவால் அன்பும் அழகும் அற்ற நிர்குண யோக மார்க்கத்தில் செல்ல முடியவில்லை. ஐம்புலன்களாலும் கண்ணனின் ஸௌந்தர்யத்தைத் தேடிக் கண்டு பிடித்து அநுபவித்த அவளுக்கு யோகியின் வறண்ட புலனடக்கம் பந்தமாக – மூச்சை முட்டச் செய்யும் அடைப்பாக இருந்தது. அவளது இயற்கையான கான வழியில் தன் இன்னலைப் பாடினாள்.

# காற்றினிலே வரும் கீதம்

ரா. கணபதி

நாற்புறமும் வழி அடைத்தாச்சு - இனி
நாரணன் இடம் செல்ல வழி யேது?

பள்ளமும் மேடும் நிறைந்த இப்பாதையில்
என்னளவும் பாதம் பாவவில்லை
வழுக்கலும் சறுக்கலும் மிகுந்த இப்பாட்டையில்
முழுக்கவும் செல்வது முடியவில்லை.

முத்தி நெறிக்(கு)இந்த உத்தியில் முனைந்தால்
சித்தத்தின் ஒருமையும் சிதைகிறது.
சந்தோ குருகள்; எங்கோ இலக்கு
அந்தோ கெட்டேன், அருள் தருவாய்!

கோசம் தோறும்பல் கோடி தேவதையர்
மோசம் செய்தென்னை மயக்கினரே
படிகள் தோறும் பல கொடிய பாவனைகள்
அடியெடுத்திடவும் இடறினவே

கூர்ந்து ஓர்ந்து பெரு முயற்சி செய்தாலும்
ஊர்ந்து சென்றிடவும் இயலவில்லை
விடுவேன் நேயனை வெகு தொலைவில் வைத்து
சதிபுரிந்தென்னை நீ சாடுவதழகோ?

சற்குரு ரூபரின் அற்புதச் செல்வன்
பொற்குலையாய் வந்த ப்ரேம நாயகன்
கிரிதரன் அன்றிச் சிறியவள் மீரா
பிறிதொரு வழியில் பிழைப்பதுண்டோ?

யோகியிடம் தன் கஷ்டங்களைத் தெரிவித்தாள் மீரா.

முதலில் உறுதியாக வாக்குக் கொடுத்த அவரே இப்போது மீராவை இவ்வழியில் உறுதிப்படுத்த இயலாது என்று கண்டார். அவருக்குப் பக்தி நெறி புரியாது. இவளுக்கோ



யோக நெறி வராது. யோகி தவித்தார். மேர்தாவை விட்டே நழுவத் தயாரானார்.

அவரது உத்தேசத்தைப் புரிந்து கொண்ட மீரா அவரிடமே பாடினாள்:

போய்ச் சேருவாய் யோகீ - உன்
வாய்ச்சாலகம் போதும்

அன்பு வழியதனை அடைத்து விட்டாய்
துன்புறும் சாதனை விளக்குகிறாய்
மதுவெனப் பிரேமையை மடுத்துப் பருகுவோர்
கடும் ஒழுக்க நஞ்சைக் குடித்திடுவாரோ?

அந்தமில் ஆனந்தம் அடைய மீராவின்
சொந்த வழியதனைச் சிதைக்க முன்வந்தாய்
எந்தனை வழக்கிது? சுந்தர பக்தியைப்
பந்தம் புரிந்த பின் பரமநிலை வருமோ?

யோகி போய்ச் சேர்ந்தார். மீரா விம்மி விம்மி அழுதாள். 'இயல்பான பிரேமை மார்க்கத்தில் அவள் சென்றால் அது ஸ்திரீ தருமத்துக்கு விரோதம். பிற வழியிலும் போக முடியவில்லை. 'அழைத்துச் செல்கிறேன்' என்று அறுதியிட்டுச் சொன்ன யோகியும் பாதி வழியில் விட்டுப் போய் விட்டார். இனி யாரை அடைவேன்? எப்படி வழி காண்பேன்?'

யோகிகளுக்கெல்லாம் ஈசனான கண்ணனிடமே முறையிடுவதற்காக டாகுர் துவாரத்துக்கு ஓடினாள் மீரா. "இங்குதானே என் இயற்கை வழியைக் குழிபறிக்க ராணாஜியை அனுப்பி வைத்தாய்? எனக்கு நீ கதி காட்டும் வரையில் இங்கேயே கிடந்து பிராண விடுவேன்" என்று சங்கற்பம் செய்து கொண்டாள். டாகுரை நோக்கிக் குருதி பெருகு குரலில் கானம் செய்தாள்.

யோகியே உன் பதம் ஏகியே இன்புற
நோகிறேன்; நோக்கினேன் நோயினைத் தீர்

யோக வழியதனில் போக யத்தனித்தேன்
பலகுடில் புகுந்து 'அலக்'கென்(று)அலறினேன்
ஆசனம் புரிந்தேன் சுவாசம் அடக்கினேன்
ஆசை நிரம்பவில்லை

சதுரத்தனம் காட்டி மதுரமதாய்ப் பேசி
நடுவழியில் என்னைப் பதித்துச் சென்றான் யோ
மித்திரனும் வந்தான் சத்துருவாய் அகன்றான்
சற்குரு வருவாரோ?

யோகம் என்பதுவும்உன் போகமே என்(று)அநு
ராகத்தில் சொல்வர் என் வேகத்தைத் தீர்ப்பரோ?
கிரிதரன் கழலினில் ஒருதரம் சேர்மனம்
பொருந்திடுமோ பிறிது?

பொழுது சென்று கொண்டே இருந்து. டாகுர் சந்நிதியை விட்டு மீரா நகரவில்லை.

ராவ் தூதாவும், மற்ற பரிஜனங்களும் மீராவை நெருங்கவே முடியவில்லை. கண்ணனே வந்து தன் ஐயப்பாடுகளைத் தீர்க்கும் வரை அங்கிருந்து நகருவதில்லை என்று அவள் கொண்டிருந்த சங்கற்பத்தின் உறுதியானது பிறர் அவளை அண்ட வொட்டாமல் அவளைச் சுற்றி அக்கினிப் பிழம்பாகத் தகித்தது.

கடைசியில் கண்ணனும் வந்தான்.

''கான்ஹா! கான்ஹா! என்னை என்ன பாடுபடுத்தி வதைக்கிறாயடா கான்ஹா!'' என்று கதறித் தீர்த்து விட்டாள் மீரா.

''என் பாடுகள் இல்லாமல், ஏன்—நானே இல்லாமல் அமைதி பெறத்தான் யோக மார்க்கம் இருக்கிறதே!'' என்றான் கண்ணன். மீராவின் மகத்தான வேதனையிலும் அவனுக்கு எப்படித்தான் குறும்புப் பேச்சும், குறும்புச் சிரிப்பும் வந்தனவோ?

''ஐயோ கண்ணா என்னைக் கொல்லாதே! ஏதோ அந்தப் பாவி யோகி சொன்னானே என்று....''

''உஷ்..'' என்று மூக்கின் மேல் விரலை வைத்து மீராவை அடக்கினான் மாதவன்.

''அவனை ஏன் பாவி என்கிறாய்? யோகம் அவன் வழி. அவனையோ அவன் வழியையோ வையாதே! அவனும் என்னிடம் வருவான்; அவ்வழியும் என்னிடம் சேர்க்கும். ஆனால் அவன் உன் குரு அல்ல; அது உன் வழியுமல்ல. ஒவ்வொரு பிணிக்கும் ஒவ்வொரு மருந்து போல், ஒவ்வொரு மனப் போக்குக்கும் ஒவ்வொரு வழியை வைத்திருக்கிறேன். மருந்தை மாற்றி உண்டு விட்டு யார்மீது குறை சொல்லி என்ன பயன்?'' என்றான் 'வணங்கும் துறைகள் பலபலவாக்கிவைத்த' வைகுந்தன்.

''அப்படியானால் எனக்குள்ள மருந்தைக் கொடு. இல்லாவிடில் விஷத்தையாவது கொடு!'' என்றாள் மீரா.

கண்ணன் சிரித்தான். ''உனக்கு விஷம் கொடுக்கப் போகிற நாள் வருகிறபோது வரட்டும். ஆனால் நான் கொடுக்க மாட்டேன். மருந்தையும் நான் தர மாட்டேன். அதற்கென்று ஒரு குரு வரவேண்டும்.

''குருவா? உன்னைவிட எனக்குக் குரு யார்?'' என்றாள் மீரா.

''பிரிய மீரா, நான் உனக்குக் குருவாக வேண்டும் என்று சொல்லாதே. யார் உனக்குக் குருவாக வந்தாலும் அவர் நானே என்று தெரிந்து கொள். நான் உனக்கு உபதேசிக்க மாட்டேன். ஏனென்றால் அப்போது என்னைவிட நீ உயர்வாகிவிடுவாய்... என்ன, புரியவில்லையா? ராமனாகவும், கிருஷ்ணனாகவும் வந்தபோது நானே வசிஷ்டர், விசுவாமித்திரர் சாந்தீபனி, உபமன்யு முதலிய மானுடர்களிடமிருந்துதான் உபதேசம் பெற்றேன். அப்படியிருக்க, உனக்கு மட்டும் தெய்வமே நேரில் உபதேசிக்கலாமா? உனக்கான மானுட குரு வந்து சஞ்சலத்தைத் தீர்த்து வைப்பான்'' என்று கூறி மறைந்தான் கிரிதரன்.

சத்குரு வருவாரோ என்று மீராவும் ஆவலாகக் காத்திருந்தாள்.

## அத்தியாயம் 20

# சத்குரு

''தாத்தா, எனக்கு நல்ல வரனைப் பார்த்துக் கலியாணம் செய்து வைக்க ஆசைப் பட்டீர்கள். சாக்ஷாத் மகாராவல்ஜி தேடிக் கொண்டு வந்தார். இப்போது எனக்கு ஒரு நல்ல குருவாகப் பார்த்து உபதேசம் செய்வியுங்களேன்'' என்று ராவ்தூதாவை வேண்டிக் கொண்டாள் மீரா.

அவளது சாம்பிய முகத்தையும், சோகம் போர்த்திய தேகத்தையும் கண்டு பெருமூச் செறிந்தார் தூதாராவ்.

''வாரணாசியில் ஒரு மகான் இருக்கிறாராம். ராமபிரானைக் கண்ணாரக் கண்டவராம். கண்ணாரக் கண்டதை வாயாரப் பாடி மகிழத் தெரிந்தவராம். அவருக்குச் சொல்லியனுப்புகிறேன் குழந்தாய்'' என்றார்.

''தாத்தா, அவருக்கு இந்த மடலைச் சேர்ப்பிப்பீர்களா?'' என்று கேட்டு ஒரு லிகிதத்தைக் கொடுத்தாள் மீரா.

ராவ்தூதா அதைப் பிரித்துப் படித்தார்.

குழந்தை நாள் முதலாய்ப் பழகிப் பந்தமுற்று
கிரிதாரனுக்கு நான் உரியவள் ஆனேன்

ஆதிகாலத்திருந்து நீதிநெறி காட்டுகிற
சத்சங்கமதனிலே பத்திமை புரிந்தேன்

அயல் மனிதர் எந்தன் இயல்பை உணரவில்லை
இல்லத்தினர் தரும் தொல்லைக்கு அளவில்லை

உறுதிப்பட்டுவிட்ட உறவினை முறித்திடச்
சக்தி இல்லா எனக்கு உத்தி சொல்லி அருள்வீர்

மடலில் கண்ணீர் விழுந்தது.

அது ராவ்தூதாவின் துயரத்துக்குச் சின்னம்.

அதே மடலில் கண்ணீர் விழுந்தது.

ஆனால் இது ராவ்தூதாவின் துயரக் கண்ணீர் அல்ல.

வாரணாசியில் வாழும் மகாபுருஷரின் ஆனந்தக் கண்ணீரே அது. கங்கைக் கரையில் வாழ்ந்த அந்தப் புண்ணியாத்மாவிடம் மீராவின் தூதன் மடலைத் தந்தவுடன் அதனைப் பார்த்துவிட்டுக் கண்ணீர் சொரிந்தார் அவர்.

'பாலப் பருவத்திலிருந்து இந்தப் பெண் கிரிதரனுக்கு உரியவளாகி விட்டாளாமே? அந்த உறவை முறிக்கவே முடியவில்லையாமே! சாமானிய மாந்தருக்குக் கிட்டுமா, இந்தப் பாக்கியம்?' என்று வியந்து மகிழ்ந்து கூறினார் அந்தப் பக்தசிகாமணி. கங்கையினும் நிர்மலமான அவரது திருமேனியைக் கண்டு, கங்கையினும் இனிய அவரது வாக்கினைக் கேட்டு மெய்ம்மறந்தான் தூதன்.

அவரிடமிருந்து உபதேசம் பெறவே மீரா விரும்புகிறாள் என்று தெரிவித்தான்.

அவரோ அவளுக்குக் குரு ஸ்தானம் வகிக்கத் தயங்கினார்.

''ஞானபக்தியின் சிகரத்தில் வசிக்கும் ஒரு மகானிடம் உன்னை அனுப்பி வைக்கிறேன் அப்பா. அவரிடம் இந்த லிகிதத்தைக் கொடு. அவரே மீராபாய்க்கு வழி காட்டக் கூடியவர். இதோ, நான் மீராபாய்க்கு ஓர் உத்தரம் தருகிறேன். இதை





---

அவனிடம் 'சேர்த்துவிடு'' என்று கூறி மறுமொழி எழுதித் தந்தார் அந்த மகனீயர்.

தாம் குறிப்பிட்ட அந்த மகானிடம்—ஞான பக்தியின் சிகரத்தில் வசிப்பவரிடம்—செல்ல வழியும் சொன்னார்.

அவர் குறிப்பிட்ட இடத்துக்குச் சென்றான் தூதன்.

அது ஒரு சேரி. அங்கு ஒரு முதியவர், ''ஹரே கிருஷ்ணா, ஹரே கிருஷ்ணா'' என்று கூறியவாறு மாட்டுத் தோலைச் செதுக்கிச் செருப்புத் தைத்துக் கொண்டிருந்தார்.

தூதனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஆள்மாறாட்டம் செய்துவிட்டோமோ என்று தயங்கினான்.

''தாங்கள்....?'' என்று அவன் இழுத்த போதே, பாதரட்சை புதுக்கிக் கொண்டிருந்த பெரியவர், ''நான் ஒரு சமார் சேவகன் '' என்றார்.

சமார் என்றால் சக்கிலி வகுப்பைக் குறிக்கும். இவரா மேவார் மகாராணிக்கு உபதேசம் செய்விப்பது?

தூதன் கலவரத்துடன் தான் இன்னார் என்பதையும், இன்ன விஷயமாக வந்திருப்பதாகவும் கூறி மீராவின் கடிதத்தை அவரிடம் கொடுத்தான்.

தோல் மூட்டையை அப்படியே தோளில் சுமந்தபடி, ''ஹரே கிருஷ்ணா!'' என்ற ஒரே வாக்கோடு தூதனைத் தொடர்ந்து புறப்பட்டு விட்டார் அந்தக் கிழவர்.

தூதன் முதலில் கங்கைக் கரையில் கண்ட மகாபுருஷர்தான் ராமசரித மானஸத்தை அருளிய கோஸ்வாமி துளசிதாசர் என்றும், அவர் மீராவின் குருவாகத் தேர்ந்தெடுத்த சேரி வாழ் சக்கிலியர்தான் ராமானந்தரின் சீடரும் கபீர்தாசரின் நண்பருமான ரவிதாஸர் என்றும் சொல்வதுண்டு. 'துளசிதாசரும், ரவிதாஸரும் சமகாலத்தவர்களா? இவர்கள் கும்பராணாவின் காலத்தில் இருந்திருக்க முடியுமா?' என்ற ஆராய்ச்சியில் நாம் இறங்க வேண்டியதில்லை. என்றைக்கும் இந் நாட்டில் மகான்கள் இருந்திருக்கிறார்கள்; மீராவைப் போல் சங்கையுற்றுப் பொதி கலங்கியவர்களுக்கு வழிகாட்டிப் பரம உபகாரம் புரிந்திருக்கிறார்கள். அவர்களது பெயர் என்ன என்பது பற்றிக் கவலையில்லை. அநாமதேயமாக இருக்க ஆசைப்பட்ட அவர்கள் அனைவரும் ஒரே திருக்கூட்ட மரபைச் சேர்ந்தவர்கள் என்பதொன்றே நமக்குப் போதும்.

ஃ ஃ ஃ

சக்கிலியர் ரவிதாஸரை அரச சந்நிதிக்கு அழைத்துச் செல்லத் தயங்கி வாசலிலேயே நிறுத்தி வைத்தான் தூதன். 'தான் ஏதோ தவறு செய்து விட்டோமோ?' என்ற பயம் அவனை இன்னமும் விடவில்லை.

மீராவிடம் சென்று துளசிதாசர் தந்த உத்தரத்தை மட்டும் அளித்து விட்டுநின்றான்.

புறாச் சிறகுகள்போல் படபடக்கும் இதயத்துடன் மீரா அதனைப் பார்த்தாள்:

வைதேகி ராகவனைக் கைவேந்திக் கும்பிடா
பந்துமித்திரர் உனக்குச் சொந்தமில்லையம்மா
அத்தனை நீத்தான் ப்ரஹலாதன்
அண்ணனை நீத்தான் விபீஷணன்
அன்னையை நீத்தான் பரதாழ்வான்
ஆசானை விட்டான் மகாபலி

# பூரணமான இருமல் கட்டுப்பாட்டுக்கு




# க்ளைகோடின்

## டெர்ப் வசாகா

க்ளைகோடினுடைய மருந்துகள் அங்கீகாரம் பெற்ற பார்முலா, இருமலால் பாதிக்கப்பட்ட பல இடங்களிலிருந்தும் இருமலை விரட்டியடித்துவிடுகிறது. க்ளைகோடினின் செயல் திறன்: ● மூளையில்—க்ளைகோடின், தன்னியல்பாக வரும் இருமலைத் தூண்டும் இருமல் கேந்திரத்தை சரியான சமயத்தில் பத்திரமாகவும், பயனுள்ள முறையிலும் கட்டுப்படுத்துகிறது ● தொண்டையில்—க்ளைகோடின் அடைப்பை அகற்றி எரிச்சலையும் வலியையும் ஆசுவாசப்படுத்தி, தொண்டையின் மென்மையான பகுதிகளை, கிருமிகள் பாதிக்காமல் பத்திரமாகப் பாதுகாக்கிறது ● மார்பில்—க்ளைகோடின், சுவாசக் குழாய்கள் மற்றும் மார்பின் இறுகிய தசைகளைத் தளர்த்தி, கஷ்டமின்றி சுவாசிக்க உதவுகிறது ● நுரையீரல்களில்—மூச்சுத் திணறவைக்கும் சளியைக் கரைத்து, 'ஆழப் படிந்த' சளியை அகற்றி, அடைப்பை நீக்குகிறது.

எப்பொழுதும் க்ளைகோடின் கைவசம் இருக்கட்டும்.



**க்ளைகோடின்—30 வருடங்களுக்கு மேலாக**
**மிகவும் அதிகமாக விற்பனையாகும் கைகண்ட வீட்டுநிவாரணி**

4 அளவுகளில் கிடைக்கிறது• அலெம்பிக் தயாரிப்பு Alembic

everest/363 i/Acw tm

இன்று ராமனை அடைந்திட உதவும்
வையகத்தோரே உறவினராம்
அஞ்சனமே கண்ணைப் புண்செய்யுமாகில்
நஞ்சினை நயனத்தில் தீட்டுவரோ?

ராமனவன் திருப்பாதமதில்
ப்ரேமை புகட்டும் புண்ணியரே
நேசம் மிகுந்த உறவினராம்
தாசன் துளசி மதம் இதுவே

மீராவுக்கு ஓரளவு தெம்பளித்தது அக் கடிதம். ஆனால் பூரணமாகத் தெம்பு பெற வில்லை அவள்.

''இந்த மடலை மட்டும்தான் அவர் தந் தாரா? எனக்கு உபதேசிக்க வரமாட்டாரா?'' என்று ஆதுரமாகத் தூதனை வினவினாள்.

''அவர் வரமாட்டார். ஆனால்....''

''ஆனால் என்ன?''

''வேறொரு......''

''வேறொருவரைக் காட்டிக் கொடுத் தாரா ? அதைச் சொல்லாமல் ஏன் மென்று விழுங்குகிறாய்? அவர் கூறிய அந்தப் பெரிய வரை அழைத்து வராமல் ஏன் நீ மட்டும் வந்தாய்? அப்பனே, நான் அணு அணுவாகச் செத்துக் கொண்டிருக்கிறேன். காலஹரணம் செய்யாதே !''

''இல்லையம்மா, கோஸ்வாமி துளசிதாஸர் குறிப்பிட்ட அந்த இன்னொருவரை நான் கையோடு அழைத்து வந்திருக்கிறேன்....''

மீரா மேலே கேட்காமல் அப்படியே துள்ளிக் குதித்தாள். ''எங்கே அவர்?'' என்று கேட்டுக் கொண்டு நடக்கலானாள். ....

தூதன் நடுங்கிக் கொண்டே மகளின் வாயிலை அடைந்தான்.

அங்கே தோல் மூட்டையைப் பிரித்துக் காலணி செய்யத் தொடங்கி விட்டார் ரயிதாஸர்.

''ஹரே கிருஷ்ணு'' என்று கூறியபடி மீராவை நிமிர்ந்து பார்த்தவரின் கைக் குத்தூசி தோலில் துளையிட்ட நிலையில் அப்படியே நின்றது.

மீராவும் அப்படியே நின்றாள்.

அந்த நிமிடமே தாயைக் கண்ட சேயானாள் அவள். நாவறண்ட போது ஞானப் பாலைத் தர அன்னை வந்து விட்டாள்! ஞான நாயக னுக்கு குரு அன்னை மட்டும்தானா? நாயகன் கண்ணனும் அவரே தான்.

அவர் தோலில் இட்டிருந்த ஒவ்வொரு துளையும் முரளீதரனின் வேணுவிலுள்ள துளை யாகவே அவளுக்குத் தோன்றியது. 'ஹரே கிருஷ்ணு' என்று கூறும் அவரே கிருஷ்ண பரமாத்மாவாகத்தான் அவளது கண்களில் தோன்றினார்.

சத்குருவின் தரிசனம் ஒன்றே அளிக்கக்கூடிய பரமானந்தத்தில் மூழ்கிப் பாடினாள் மீரா.

குருபெருமானே விரைவொடு வந்து
பருகுவிப்பாய் பரமானந்தம் பாலினை

நீரினை இழந்த மீனத்தைப் போல
சூரியன் காணு சக்ரவாகம் போல
உனது சங்கமின்றி இன்பமில்லாமல்
மனது வாடி எந்தன் நினைவு கெட்டேன்

உபதேசம் பெற்று உள்ளம் உவந்து
கூபமங்கள நிதம் இசைத்திடுவேன்
குரல் கனியக் குயிலாய்க் கூவிடும்போதிலும்
இரகசிய இன்பத்தை இயம்பி விடேன்

வண்டி இழுத்துப் பழகின மாடுகள், பாரமான வண்டியை இழுப்பதற்கும் தாமாகவே கழுத்தை வலியக் கொடுப்பதைக் காண்கி றோம். அது போலத்தான் தேச சேவையில் பழகியவர்களும் கஷ்ட மான காரியங்களை வலிய மேற் கொள்ளுகிறார்கள்.

— ராஜாஜி



நன்னாள் இதுவே பொன்னாள் திருவடி
இல்லத்தில் பதித்து அல்லலைத் தீர்த்தனை
பாதகம் தீர்க்கும் உன் பாததூளியைப் பெற
மெய் உருகி இரண்டு கை ஏந்தித் தொழுதேன்

கடல் தகித்து உண்டாகும் ஆவி மேலே மேலே அலமந்து திரியும் போது வான மண்டலத் துகள் கிடைத்துவிட்டால் போதும்! ஆவி அதனைச் சுற்றிக் குளிர்ந்து அப்படியே பற்றிக் கொண்டு, கனத்து, பிந்துவாகிப் பொழியும். மீராவின் ஆவி தாபமுண்டு வழி தெரியாமல் தவிக்கும் போது, அது குளிர்ந்து கனத்துப் பொழிய ஒரு பற்றுக் கோலாகக் குருவின் பாத தூளி கிடைத்தது.

இனி மழைதான் !

'ஐயோ, சக்கிலியனிடம் மீரா உபதேசம் வாங்கிக் கொள்ளப் போகிறாளாமே' என்று ஊரார் பேசிக் கொண்டனர்.

மீரா சிரித்துக் கொண்டே விடையிறுத் தாள்: ''பாதரட்சைக்குப் பயனாகும் தன்மை மாட்டுத் தோலுக்கு ஏற்பட்டிருக் கிறது. அந்தப் பயனை மாட்டுக்குத் தந்து — அந்தப் பயனின் விளைவையும் மனிதருக்குத் தரும் சக்கிலியனா தாழ்ந்து விட்டான்? செத்த மாட்டின் தோலைக் கொண்டு மானுட குலத் தின் வெயில் தீர்க்கப் பாதரட்சை தைப் பவர் இவர். உயிருள்ள தோலைப் போர்த்திக் கொண்டே ஆவி செத்துப் போன மக்களையும் பிறரின் தாபம் தீர்க்கும் ரட்சையாக்கிவிடு வார்.''

ரயிதாஸர் மீராவுக்கு என்ன உபதேச மளித்தார் ? அதை யார் கூற முடியும் ? சூரிய வெப்பம் செடிக்கு என்ன சக்தியைத் தருகிறதோ, அப்படி ஒரு சக்தியை மீரா வுக்குத் தந்து விட்டார் ரயிதாஸர். அவள் பகமை குலுங்கப் பூத்துப் பழுக்க ஏதோ அற்புத வழி செய்து விட்டார்!

யோகியைப் போல் சிக்கலான மார்க்கத் தில் அவர் மீராவை நீளநெடுகப் பயிலுவிக்க



வாழ்க்கையில் எந்தச் சமயத்தில் எந்தப் பெரிய அல்லது சிறிய வேலை செய்து கொண்டிருக்கும் போதும், ஆகார விகார வேளைகளிலும், சதா ஈசன் நமக்குத் தகப்பனாகவும், தாயாராகவும், தோழனாகவும் பக்கத்திலேயே இருந்து வருகிறான் என்பதை உணர்ந்து அவனுடன் கூட்டுறவு வாழ்க்கை நடத்தலாம் என்பது லாரென்ஸ் துறவியின் உபதேசம். ஈசனை நமக்கு நெருங்கிய தோழனாக எப்பொழுதும் கூடவே இருக்கும்படி செய்து கொள்ளும் சக்தி நமக்கு உண்டு. தீவிர அன்பைச் செலுத்தி அவனை அழைத்துப் பக்கத்தில் வைத்துக் கொண்டு வாழ்க்கை நடத்தலாம். இந்தக் கூட்டுறவைச் சம்பாதிப்பதே லாரென்ஸ் துறவியார் போதித்த மார்க்கம்.

- ராஜாஜி, 'துறவி லாரென்ஸ்'

---

வில்லை. ஈர விறகைப் பற்ற வைக்க நீண்ட நாழிகை விசிற வேண்டுமேயன்றிக் கர்ப்பூரத்தை ஏற்ற சிரமம் ஏது? குருமுகமாகத் திருநாமம் மீராவின் செவியில் பாய்ந்தவுடன் தீபத்தை வாங்கிக் கொள்ளும் கர்ப்பூரமானாள் மீரா.

குருவின் வாக்கிலிருந்து வந்த அந்தத் திருநாமம் என்ன? ஸ்ரீராமநாமம்தான். அது வேறு எதுவாக இருக்க முடியும்? ரமிக்கச் செய்யும் தெய்வம் ராமன்தானே? மகாதேவனாயினும், மாதவனாயினும் ரம்யமாக வரும் போது ராமன் என்றே போற்ற வேண்டியவர்கள்தாமே? இந்தத் தேசத்தில் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, ஆயிரம் பல்லாயிரம் கோடி மக்கள் துன்பமுற்ற போது தெரிந்தும் தெரியாமலும் கூறுகிற நாமம் ராமநாமம் அல்லவா? நாராயணனின் அஷ்டாட்சர மந்திரத்துக்கு உயிரூட்டும் 'ரா' என்ற அக்ஷரமும் சிவபஞ்சாட்சரிக்கு ஜீவன் தரும் 'ம'காரமும் சேர்ந்த ராமநாமமல்லவோ சம்ஸாரத்திலிருந்து கடத்துவிக்கும் தாரக நாமமாகக் கருதப்படுகிறது? ஸதிதேவிக்குப் பரமேசுவரனே உபதேசித்த நாமமல்லவா அது? தான் பெற்ற இன்பத்தை இவ்வையகமும் பெற வேண்டும் என்று ஸதிதேவி கேட்டுக் கொண்டதன் மீது, வையங்களின் பதியாக — விசுவநாதனாக — வாரணாசியில் வதியும் பரமேசன் அங்கு மரிக்கும் புண்ணியசாலிகளின் வலச் செவியில் தனது மதுர வாக்கால் ஓதும் மணிநாமம் ராமநாமமே அல்லவா? வண்ணமும் ஒளியும் நிறைந்த பிரபஞ்சத்தில் பல பல மூர்த்தியாகப் பரம்பொருளைக் கண்ணால் பார்த்த அதே மகாபுருஷர்கள் ஒலிமயமான சப்தப் பிரபஞ்சத்திலும் புகுந்து பரம்பொருளை பல மந்திரப் பெயர்களாகக் காது மூலம் கேட்டார்கள். கண்ணில் பச்சை வண்ணக் கோதண்டபாணியாகக் கண்டவனையே காதில் 'ராம' என்கிற சப்தத்தால் கேட்டார்கள். அந்த ராமநாமத்தை மீராவின் செவியில் ரயிதாஸர் ஓதியவுடன் அவள் தேநிலவு கண்ட சந்திரகாந்தக் கல்லாக உருகினாள். உருகி ஓடும் போது அவளில் கிருஷ்ணசந்திரன் பிரதிபலித்தான். ஆம், அவன் வெள்ளிய மதியம் அல்ல; கரியமதி. கிருஷ்ண வண்ணத்திலேயே பூரணசந்திரனாக இருக்கும் அதிசயன் அவன்! அவனது பிரதிபிம்பம் தன்னுள் தேங்கியவுடன் உருகிய மீரா இறுகி, அவனை அப்படியே தன்னுள் உறைவித்துக் கொண்டு விட்டாள்! மகாமந்திர உபதேசம் பெற்றவுடனேயே கிரிதர கோபாலன் தன் கண்முன் நின்றதை மீரா பாடுகிறாள். பூவுக்கு மணமும் வண்ணமும் ஒன்றுசேர்ந்தே கூடுவதுபோல், பரம்பொருளின் மணமாகிய நாமத்தை அவள் பெற்றவுடனே அதன் வண்ணமாகிய அவன் உருவையும் கண்டு விட்டாள். இங்கு நாமத்துக்கும் ரூபத்துக்கும் மாறுபாடு ஏது? கண்ணால் கண்டால் ரூபம்; அதையே காதால் கேட்டு விட்டால் நாமம். கண், காது யாவற்றையும் ஆளும் ஆன்மாவின் மூலம் அநுபவிக்கத் தொடங்கிவிட்டாலோ இன்னும் அற்புதங்கள் நிகழும் — நாமத்தைக் காண முடியும்; ரூபத்தைக் கேட்க முடியும். 'இராமன் என்னும் செம்மை சேர் நாமம் தன்னைக் கண்களில் தெரியக் கண்டான்' என்று கம்பநாடர் கூறிய அநுபவம் கிடைத்துவிடும்.

அமரசாம்ராஜ்யத்தில் பிரவேசித்த மீரா இன்னும் எத்தனை எத்தனையோ அநுபவங்களை எய்தினாள். யோக மார்க்கத்தில் பரிசிரமப்பட்டும் பெற இயலாத ஜீவசக்தியின் இயக்கங்கள் இப்போது எளிதாகக் கைகூடின. ராமநாம த்வனியானது — சூரிய ரச்மிபோல் அவளது ஆதார கமலங்களைத் தீண்டி மலரவிட்டு அவற்றின் மூலம் குண்டலினி சக்தியைச் செலுத்தி, அவளது சிரசுக்குள் மணமேடை அமைத்து அங்கு மாதவனையும் அவளையும் ஜோடி சேர்த்தது; பிறகு ஜோடியும் மறைந்து தேனும் சுவையும் போல் ஒன்றாக்கி விட்டது.

பிரயாசையின் மீது நாம் உண்டாக்கும் ஒலிகளுக்கு அப்பாற்பட்டும், அவற்றுக்கு ஆதாரமாகவும் எப்போதும் இடையறாமல் இதயாகாசத்தில் ஒலித்துக் கொண்டும் நாதப் பிரம்ம விளக்கமான அநாஹத த்வனியையும் மீரா மாந்தினாள்.

ஸத்குரு கிடைத்ததையும், மந்திரம் கிடைத்ததையும், அதன் விளைவாகத் தனக்குக் கிடைத்த அநுபவங்களைப் பற்றியும் மீரா பாடல்களாகப் பாடிப் பாடிப் புளகமுற்றாள்.

மார்க்கம் தெரியவில்லை; மர்மம் அறிந்திடத்
தீர்க்கமாய்த் தேடினேன் நெடுங்காலம்

துயரறு மருந்து உயர்குரு தந்தார்
மயிர்க்கால் தோறுமோர் உயிர்ப்பு உண்டாக்க

ஸத்குருவிற்கிணை வைத்திடவுண்டோ?
தத்துவ வேத புராணமும் சாற்றுதே!

கிரிதர நாகரன் மீராப் பிரபுவினை
குருஅருளால் பருகி அமருலகடைந்தேன்

என்று பாடி ஆசானின் அடி மலரை வணங்கினாள்.

(தொடரும்)

# ஃபாஷனில் கண்ணுள்ளவர்கள்



விரும்புவது டாட்டா டெக்ஸ்டைல்ஸ் வாயில் புடவைகள். வழிவழி வந்த எழில் வகைகளோடு, தற்கால தினுசுகளிலும் கிடைக்கும் எண்ணற்ற பிரிண்ட் வகைகளில் ஒன்றுதான், வெள்ளைப் பின்னணி கொண்ட இந்த ஃபாஷன் டிசைன். கண்ணைக் கவரும் வண்ண வண்ண ரகங்களில் வருகின்றன டாட்டா டெக்ஸ்டைல்ஸ் வாயில் புடவைகள்—அவற்றின் புதுமைப் பொலிவு நாள் முழுவதும் நீங்காது நிலைத்து நிற்கு

எல்லாப் பெரிய கடைகளிலும் கிடைக்கும்

**TATA** Textiles

ULKA-TT- TAM




வெள்ளை டெட் சலவையின்

மேன்மை, வெண்மையுடன் தூய்மை

வெள்ளை டெட். பவுடரினால் மட்டும் தான் உங்கள் வெள்ளைத் துணிகளை பளிச்சிடும் வெண்மையுடனும் வண்ண நிறத் துணிகளை துப்புரவாகவும் வெளுக்க முடியும்.

Shilpi : Som : 11a

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்

# தந்தையும் தனயனும்

சுதந்திரக் கட்சியின் பொதுச் செயலாளர் எம். ஆர். மஸானியின் தந்தை ருஸ்தும் மஸானி பம்பாய் சர்வகலா சாலேக்குத் துணைவேந்தராக இருந்து பணியாற்றியவர்.

அப்போதுதான் அவருடைய மகன் திரு எம். ஆர். மஸானி லண்டனில் பாரிஸ்டருக்குப் படித்துவிட்டு பம்பாயில் வக்கீல் தொழில் தொடங்கியிருந்தார். இரண்டு ஆண்டுகளுக்குள்ளே பம்பாயில் சட்ட நிபுணர்களிடையே எம். ஆர். மஸானி சட்ட நுணுக்கம் தெரிந்தவர் என்று பெயர் எடுத்திருந்தார். விசேஷமாகத் தொழில் நடக்காவிட்டாலும், சட்டம் தெரிந்தவர் என்று புகழ்பெற்றிருந்தார். அதனுல், பம்பாய் சட்டப் பரீட்சைத் தாள்களேப் பரிசீலிக்கும் 'எக்ஸாமினர்'ராக எம். ஆர். மஸானியின் பெயரைக் குறித்து சர்வகலாசாலேயின் சட்டப் படிப்பு "டீன்" துணைவேந்தரது சம்மதம் பெற அனுப்பியிருந்தார்.

பல துறைப் பரீட்சைகளின் பரிசோதகர்கள் பெயர்களிடையில் தமது தனயனின் பெயர் இருப்பதைப் பார்த்தார் துணைவேந்தர் மஸானி.

உடனே பேனுவை எடுத்து அந்தப் பெயரை அடித்து விட்டார்.

இந்தச் செய்தியைக் கேள்விப்பட்ட சட்டத் துறை டீன், ருஸ்தும் அவர்களிடம் சென்று, 'மினு மஸானி நல்ல தகுதி பெற்றிருக்கிருர். அதனுல் தான் அவர் பெயரைச் சேர்த்தேன்' என்று சொன்னுர். 'தகுதியிருந்தாலும் இப்போது கூடாது' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார், ருஸ்தும். சட்டத் துறை டீனுக்குச் சலிப்பும் கோபமுமே ஏற்பட்டன.

சில நாள் கழித்து, எதேச்சையாக டீன், மஸானியைச் சந்தித்த போது, "உன் தந்தையால் உனக்கு இரண்டாயிரம் ருபாய் நஷ்டம்!" என்ருர். மினு மஸானிக்கு ஒன்றும் புரியவில்லே. டீன் அவர்கள் சர்வகலாசாலேக் கட்டடத்தில் நிகழ்ந்தவற்றையெல்லாம் சொன்னுர். இதைக் கேட்ட மினு மஸானிக்குத் தம் தந்தையின் மீது அளவுகடந்த கோபம். தாம் கேட்காமலே, தமது தந்தையின் செல்வாக்கை உபயோகப்படுத்தாமலே தம் தகுதியையும் அறிவையும் பார்த்து ஒரு வேலே கொடுக்கப்பட்டது. அப்படியிருக்கத் தமது தந்தை அதைத் தடுத்து நிறுத்தியது மிக அநீதி என்று கோபம் கொண்டார். அன்றிரவே, சாப்பாட்டு வேளேயின் போது மினு மஸானி, தமது தந்தையிடம் இதைப் பற்றி விசாரித்தார்.

"ஆம், நான் துணைவேந்தராக இருக்கும் வரை, நீ எவ்வளவு தகுதி பெற்றிருந்தாலும் அந்தச் சர்வகலா சாலேயிலிருந்து எவ்வித வேலேயும் உனக்குக் கிடைக்க நான் அநுமதிக்க மாட்டேன்!" என்ருர் ருஸ்தும்.

"அதற்காக நான் இரண்டாயிரம் ருபாய் நஷ்டப்பட வேண்டுமாக்கும்?" என்ருர் மினு மஸானி.

"என்னுல்தான் நஷ்டமாகிறது என்ருல், அந்த நஷ்டத்தை நானே ஈடு செய்கிறேன்" என்று இரண்டாயிர ருபாய்க்கு உடனே ஒரு "செக்" எழுதிக் கொடுத்தார் தந்தை.

செக்கைப் பெற்றுக் கொண்ட மகனுக்கு எத்தகைய உயர்ந்த ஒழுக்கக் கோட்பாட்டைப் பொது ஸ்தாபனத்துக்குத் தலேமை வகிக்கும் தமது தந்தை கடைப்பிடிக்கிருர் என்பது பளிச்சென்று புலனுகியது. தமது கையிலிருந்த "செக்"கைத் தாமே கிழித்தெறிந்து விட்டார்!

இந்தச் சம்பவத்தை நினேக்கும் போதெல்லாம் நற்குணத்தில் தந்தை உயர்ந்தவரா, தனயன் உயர்ந்தவரா என்ற வியப்பு யாருக்குமே ஏற்படும்.

சமீபத்தில் தமது தொண்ணூருவது வயதில் காலமான ஸ்ரீ ருஸ்தும் மஸானி பெரு மதிப்புக்கு உரியவர். பல நூல்கள் எழுதியிருக்கிருர். விபசாரத் தடைச் சட்டம் கொண்டு வந்து நிறைவேற்றிய சமூக சீர்திருத்தவாதி அவர்.





திருமுருக கிருபானந்தவாரியார்

திலகவதியாருக்குப் பன்னிரண்டு வயதாயிற்று. அன்பும் அறனும் அமைந்து, சிவபெருமானுடைய அடிமைத் திறத்தில் சிறந்த வேளாண் குலத் தலைவராகிய கலிப்பகையார் திலகவதியாரை மணக்க விரும்பினார். அவர் படைத் தலைவர்; அரசனிடத்தில் பேரன்புள்ளவர்; போர் புரிவதில் சிங்க ஏறு போன்றவர்; சிறந்த எழில் நலம் படைத்தவர்; கல்வி கேள்விகளில் உயர்ந்தவர். அவர் திலகவதியாரைத் தமக்கு மணம் பேசி வருமாறு புகழனாரிடத்து அறிவிற் சிறந்த ஆன்றோர்களை அனுப்பி வைத்தார். கலிப்பகையாரின் குலம், குணம், கல்வி எல்லாம் ஒத்திருந்தபடியால் புகழனார் உடன்பட்டார். அதனைக் கேட்டுக் கலிப்பகையார் மிகவும் மனம் மகிழ்ந்தார்.

கலிப்பகையார் தமது திருமணத்தை முடிக்கக் கருதியபோது விதி வேறு ஒன்றை எண்ணியது. வடநாட்டு மன்னர்கள் அரசருடன் பகைத்துப் போர் புரிய வந்தார்கள். வடநாட்டு அரசர்களை வெல்வதற்காக மன்னர் கலிப்பகையாரை அழைத்துப் பெருஞ்சேனையுடன் சென்று போர் புரியுமாறு ஏவினார். கலிப்பகையார் நால்வகைச் சேனைகளுடன் போர்க்களம் அடைந்தார். சில நாட்கள் போர் தொடர்ந்து நடந்தது.

கலிப்பகையார் வடநாட்டில் பகைவருடன் போர் புரிந்து கொண்டிருந்தபோது, புகழனார் நோயுடன் போரிட நேர்ந்தது. வந்த நோய் அவரை விண்ணுலகம் அனுப்பியது. மனத்தாலும் நினைக்க முடியாத கற்புடைய மாதினியார் மக்களையும் சுற்றத்தையும் துகளாகக் கருதிக் கணவனாருடன் தொடர்ந்து விண்ணுலகஞ் சென்றார்.

பெற்ற தாயும் அன்புள்ள தந்தையும் இறந்தது கண்டு திலகவதியாரும் மருள்நீக்கியாரும் பெருந்துயரடைந்தனர். அவர்களைச் சுற்றத்தார் தேற்ற ஒருவாறு மனந்தேறினர்.

பகைவர்மீது போருக்குப் போயிருந்த கலிப்பகையார், போர்க்களத்தில் உயிரைக் கொடுத்துப் புகழினைக் கொண்டார். கலிப்பகையார் வீரசுவர்க்கம் சேர்ந்த செய்தி எங்கும் பரவியது. அதனைக் கேள்விப்பட்ட திலகவதியார் திடுக்கிட்டார். வெந்த புண்ணில் வேல் நுழைந்தது போல் வேதனைப்பட்டார். ''எமது தாயும் தந்தையும் அவருக்கு என்னைத் தருவதாக மணம் பேசினர். மணம் பேசிய காரணத்தினாலே நான் அவருக்கு மனைவியாயினேன். வாக்கினால் கூறியவுடனே அவர் எனக்குக் கணவராயினார். அதனால் நான் அவருக்கே உரியவள். அவர் உயிர் துறந்த பின் இவ்வுலகில் எனக்கு என்ன வாழ்வு இருக்கிறது? ஆதலினால் நான் கணவனார் சென்ற உலகம் செல்வேன்'' என்று உயிர் விடத் துணிந்தார்.

அதனைக் கண்ட மருள்நீக்கியார் அளவற்ற அல்லலுற்றார். தமக்கையார் தாள் மீது வீழ்ந்து அழுதார். ''அன்பு வடிவாய சகோதரி! அன்னையும் அத்தனும் என்னை விட்டுப் பிரிந்தனர். எனக்குத் தங்கள் திருவடி ஒன்று தான் உற்ற துணை. இப்பொழுது எனக்குக் கொழுகொம்பாக உள்ள தாங்களும் என்னைத் தனியே விட்டு மாள்வீராயின் தங்களுக்கு முன்னே நான் உயிர் துறப்பேன்'' என்று கூறித் துன்பவெள்ளத்தில் அழுந்தினார்.

தம்பியார் மீதுள்ள கருணையினால் திலகவதியார் உயிர்விடத் துணிந்ததைக் கைவிட்டார். ஆனால் கைம்பெண் விரதம் பூண்டு, எல்லா உயிர்களுக்கும் கருணை புரிந்து வீட்டினுள் இருந்து தவம் புரிந்து வந்தார்.

மாசின்மனத் துயரொழிய
　　மருணீக்கி யார்நிரம்பித்
தேசநெறி நிலையாமை
　　கண்டறங்கள் செய்வாராய்க்
காசிமேற் புகழ்விளங்க
　　நிதியளித்துக் கருணையினால்
ஆசில்அறச் சாலைகளும்
　　தண்ணீர்ப்பந் தரும்அமைப்பார்.

மருள் நீக்கியார் நிலையாமையை உணர்ந்து விட்டார். யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வ நிலையாமை இவைகளைச் சிந்தித்து உணர்ந்தார். ஆகவே, நல்லறங்கள் புரிய வேண்டும் என்று துணிந்தார். நிறையப் பொன்னைத் தந்து அறச்சாலைகளும், தண்ணீர்ப்பந்தரும் அமைத்தார். இனிய நீர்க் குளங்கள் பல வெட்டினார். கடமையில் வழுவாது நின்றவர்க்கு வேண்டுவன மகிழ்ச்சியுடன் தந்தார். புலவர்கள் வறுமையின்றி வாழப் பரிசில்கள் அளித்தார். இவ்வாறுகப் பலப் பல தருமங்களைப் புரிந்து வாழ்ந்து வந்தார்.

நிலையில்லாத இவ்வுலக இயல்பைக் கண்டு அறவே துறந்த மருள்நீக்கியாருக்குச் சிவபெருமான் அருள் செய்யாமையினால் கொல்லாமைக்குள் மறைந்துறையும் சமண சமயங் குறுகினார். தென்னாட்டுப் பாடலிபுத்திரமாகிய திருப்பாதிரிப்புலியூர் சென்று சமணப் பள்ளியில் சேர்ந்தார். அங்கு சமண சமயக் கலைகளை யெல்லாம் கற்றுணர்ந்து வல்லுநரானார். தங்களின் மேலான புலமை பெற்ற மருள் நீக்கியாருக்குச் சமண குருமார்கள் தருமசேனர் என்னும் பேர் சூட்டினார்கள். தருமசேனர் தமது சிறந்த மதி நுட்பத்தினால் பௌத்தர்களை வாதில் வென்றார்; சமண சமயத்தின் தலைமையைப் பெற்றார்.

தவ ஒழுக்கத்தில் நின்ற திலகவதியார், தம்பியார் சமண சமயம் புகுந்ததால் மனம் உளைந்தார். சுற்றத் தொடர்பை யொழித்துச் சிவநெறி சார்ந்து திருத் தொண்டு புரிய விரும்பினார். ஆதலால் திருவாமூரிலிருந்து கெடில நதிக் கரையில் திகழும் திருவதிகை வீரட்டானம் என்னும் திருத்



தலத்தை யடைந்தார். ஆங்கு ஒரு திருமடத்தைப் புதுக்கி, சிவச் சின்னங்களைப் புனைந்து, அன்புடன் திருக்கோயில் திருத் தொண்டுகள் புரியத் தொடங்கினார். அவர் பொழுது புலர்வதற்கு முன் எழுந்து கெடிலத்தில் நீராடுவார். திருக்கோயிலின் முன் அலகிட்டு, பசுவின் சாணத்தால் மெழுகுவார். திருநந்தவனம் சென்று மலர்களைக் கொய்து திருமாலைகளைத் தொடுத்துத் தருவார். தவ விளக்காம் திலகவதியார் சுடரொளியாம் சிவபெருமானைத் தொழுது, ''என்னை ஆண்டருளும் ஐயனே! என் தம்பியைப் பரசமயப் படுகுழியினின்றும் எடுத்து அருள் புரிய வேண்டும்'' என்று பன்முறையும் விண்ணப்பம் புரிந்தார். வேண்டுவார் வேண்டியதை வேண்டியவாறு அளிக்கும் விடையவர் அம்மையாரது கனவில் தோன்றி, ''உன் மனக் கவலையை விடு. உன்னுடைய உடன் பிறந்தான் முன்னமே முனியாகி என்னை அடையத் தவம் புரிந்தவன். அவனை இனி நாம் சூலை நோய் தந்து ஆட்கொள்வோம்'' என்று அருள் புரிந்தார். அதனைக் கேட்டு அம்மையார் மகிழ்ந்தார்.

முற்பிறப்பில் செய்த நல்ல தவத்தில் சிறிது வழுவிய தொண்டரை ஆளும் பொருட்டு வைத்தியநாதப் பெருமான் சூலை நோயை மருணீக்கியாருக்கு அருளி

ணர். அவருடைய வயிற்றில் சூலை வலி புகுந்தது. வடவைத் தீயும், கொடிய நஞ்சும், வச்சிரமும் போல் புகுந்த அச் சூலை நோய் குடலைக் குடைந்தது. அதனால் மருள் நீக்கியார் சமணப் பள்ளியின் அறையில் சோர்ந்து விழுந்தார். தாம் கற்ற மணி மந்திர மருந்துகளால் அதனைத் தீர்க்க முயன்றும், சூலை தணியாமல், மிகவும் ஓங்கியது. நச்சுப் பாம்பின் விடம் தலைக்கு ஏறியது போல் மயங்கினர். சமண குருமார் பலர் கூடி, ''இதுவரை கண்டிராத சூலை நோய் இவருக்கு வந்து விட்டதே; இனி என் செய்வது?'' என்று கவலை கொண்டனர். தவம் என்று அவம் பெருக்கும் சமணர்கள் கமண்டலத்து நீரை மந்திரித்துத் தருமசேனரைக் குடிக்கச் செய்தனர். நோய் சிறிதும் தணியவில்லை. மிகவும் வருந்திய சமணர் மயிற் பீலியால் தருமசேனரது உடல் முழுதும் தடவினர். அந்நோய் முன்னையிலும் பன்மடங்கு மிகுந்தது. அதனால் மருணீக்கியார் அல்லலுற்று அலமந்தார். ''ஆ! இந்நோயைத் தீர்க்க நம்மால் முடியாது'' என்று சமணர்கள் கைவிட்டனர். மருணீக்கியார் மனம் தளர்ந்தார். தமக்கையார் நினைவு வந்து தமக்கு வந்த இடரை அவருக்கு அறிவிக்குமாறு சமையற்காரனை அனுப்பினர்.

திருவதிகை வந்த சமையற்காரன், விடியற்காலை திலகவதியார் நந்தவனத்தின் புறத்தே வரும்போது கண்டு பணிந்து, ''உங்கள் திருத் தம்பியாரின் ஏவலினால் வந்தவன் நான்'' என்றான். ''ஏதாகிலும் தீங்கு உண்டாயிற்றோ?'' என்று வினவினர் அம்மையார். ''சூலை நோய் அவரது குடலை முடக்கிக் குடைகின்றது. எல்லோரும் கைவிட்டு விட்டார்கள். தங்கள் தம்பியார் தாம் உய்யும்படி கேட்டு இரவுபட்டதும் வருமாறு என்னை அனுப்பினர்.'' என்றான். ''அப்பா! நன்று அறியா அமண்பள்ளிக்கு நான் வரமாட்டேன் என்று அறிவிப்பாய்'' என்று கூறினர் திலகவதி. சமையற்காரன் மீண்டு சென்று திலகவதியார் கூறியதைத் தருமசேனர்க்குக் கூறினன்.

மருணீக்கியார் வேறு செயலின்றி, ஒழியாத துன்பம் ஒழிய, புன் சமயத் தொடர்பை விடுத்து, தமக்கையார் திருவடிகளை அடையத் துணிந்தார். அந்த எண்ணம் வந்ததும் சிறிது அயர்வு அகன்றது. அவர் உடுத்தியிருந்த பாய் உடையைக் களைந்தார். கமண்டலத்தையும், மயிற் பீலியையும் ஒழித்து வெண்மையான ஆடையை உடுத்திக் கொண்டு தமது அந்தரங்கமான ஏவலன் தோள் மீது கையை ஊன்றிக் கொண்டு, சமணர்கள் யாரும் அறியாவண்ணம் இரவில் புறப்பட்டுத் திருவதிகையை யடைந்தார். திருக்கோயிலின் பெரும் கோபுரம் அவரை முதலில் வரவேற்றது. பின்னர் திலகவதியாரின் திருமடம் சேர்ந்தார். தமக்கையாரை வணங்கி, ''கொடுஞ் சூலை நோய்த் துன்பத்தினின்றும் அடியேன் கடைத்தேற வழி கூறவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்.

கருணை மிகுந்த திலகவதியார், இறைவருடைய திருவருளை நினைந்து கைகூப்பித் தொழுதார். ''நற்கொள்கை யில்லாத பரசமயக் குழியில் வீழ்ந்து நொந்தாய். இனி எழுந்திரு'' என்று மொழிந்தார். மருணீக்கியார் பிணியின் துயரால் உடல் நடுங்க எழுந்து தொழுது நின்றார். ''இது சிவபெருமானது திருவருளே. பற்றறுக்கும் பரமனது பணி செய்வாய்'' என்று திலகவதியார் பணித்தருளி, அஞ்செழுத்தோதி, திருநீறு அணிவித்தார். அதனைத் தாழ்ந்து பெற்றுக் கொண்ட தருமசேனர் உடல் நிறைய அணிந்து கொண்டார். திலகவதியார் திருவலகும் திருமெழுக்குத் தோண்டியும் கொண்டு தம்பியாரை அழைத்துக்கொண்டு கோயிலுக்குள் சென்றார்.

புரமெரித்த புண்ணியரது திருக்கோயிலை மருணீக்கியார் வலம் வந்து வணங்கினர். தம்பிரான் திருவருளால் தமிழ்ப் பாக்கள் சாற்றும் உணர்வு அவருக்கு உதித்தது. உணர்ச்சி ஊற்றுப் போல் சுரந்தது.

> கூற்றுயினவாறு விலக்ககிலீர் கொடுமைபல
> செய்தனநான் அறியேன்
> ஏற்றுயடிக்கே யிரவும்பகலும் பிரியாது
> வணங்குவன் எப்பொழுதும்
> தோற்றுதென் வயிற்றி னகம்படியே
> குடரோடு தொடக்கி முடக்கியிட
> ஆற்றேன் அடியேன் அதிகைக் கெடில
> வீரட்டானத் துறையம் மானே!

என்று கண்ணீர் விட்டுக் கதறித் திருவருளில் மூழ்கினர்.

''இனி நீ திருநாவுக்கரசு என்ற நாமத்தால் ஏழுலகும் ஏத்தப் பெறுவாய்'' என்று வானிடை ஓர் அமிர்த ஒலி திருவருளால் எழுந்தது. திலகவதியாரின் செம்மையான தவமே மருணீக்கியாரைத் திருநாவுக்கரசராக மாற்றித் தமிழ் உலகை உய்வித்தது.

''சமண இருளில் மூழ்கிய சிறியேன் பெறும் திரு இதுவே'' என்று திருநாவுக்கரசர் இறைவரைத் தொழுதார். அவரது சூலை நோய் நீங்கியது. திருநாவுக்கரசரைச் சிவபெருமான் திருவருளால் ஆட்கொண்ட செய்தியை அடியார்கள் முரசு கொட்டி எங்கும் முழக்கினர்கள். திருநாவுக்கரசர் திருநீறும் கண்டிகையும் புனைந்தார். அவரது நெஞ்சம் அஞ்செழுத்தை நினைந்தது. வாக்கு தமிழ்ப் பதிகம் பாடியது. காயம் உழவாரப் படை கொண்டு திருத்தொண்டு புரிந்தது. இவ்வாறாக, மனம் வாக்கு, காயம் என்னும் முக்கரணங்களாலும் சைவத் தொண்டு புரிந்து வந்தார். (தொடரும்)

# படித்துப் பாருங்கள்!

## ''ஸ்போர்ட் அண்டு பாஸ்டைம்'' மலர்

விளையாட்டு, பொழுதுபோக்கு இவைகளுக்காகவே நடத்தப்படும் ஸ்போர்ட் அண்டு பாஸ்டைம் பத்திரிகையின் ஆண்டு மலர் சிறப்பாக அமைந்திருக்கிறது.

முதன் முதலாக ஒரு டெஸ்ட் பந்தயம் ஆட இங்கிலாந்துக்கு இந்தியக் கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் சென்றது 1932ல். அப்போது நெவில் கார்டஸ்—இந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர்களைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்: 'ஓல்ட் டிராப்போர்டில் நேற்று நடந்த கிரிக்கெட் போட்டியில் லங்காஷயர் கோஷ்டியே வென்றது. எனினும் இவர்கள் வெற்றி பெற்றனர் என்பதை நாம் மறந்து நீண்ட நெடுங்காலத்துக்குப் பிறகும் இந்தியர்களது 'பாட்டிங்' திறமை நம் மனங்களில் பசுமையாக நினைவில் இருக்கும்! நாம் கண்களைக் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கும்படி அவர்கள் செய்தார்கள். எங்கே கண்ணிமைக்கும் நேரத்தில் கலையழகுடன் கூடிய ஒரு நல்ல மட்டையடியைப் பார்க்கத் தவறி விடுவோமோ என்ற பயம் நமக்குச் சதா இருந்து வந்தது!'' பி. என். சுந்தரேசன் கட்டுரையில் காணப்படும் ஒரு விவரம் இது.

கால்பந்தாட்ட மைதானத்தில் தங்கள் பிரதேச ஆட்டக்காரர்களைப் பாராட்டும் விதத்திலே ஏற்படும் ரகளைகள் கணக்கிலடங்கா. ஆஸ்திரேலியாவில் இப்படி ஏற்பட்ட ரகளையில் ரெபரியை மக்கள் மத்தியிலிருந்து விடுவிக்க ஹெலிகாப்டர் தேவையாயிருந்ததாம்! ஜே. சுப்புஸ்வாமி இது போன்ற பல சுவையான தகவல்களைத் தருகிறார்.

டெஸ்ட் பந்தயங்கள் நடத்துவதிலுள்ள சிரமங்களை விளக்குகிறார் கிரிக்கெட் காரியதரிசி ஸ்ரீராம் இம்மலரிலே. டெஸ்ட் பந்தயங்களுக்கு 'பிட்ச்' தயார் பண்ண வருஷம் முழுதும் பாடுபட வேண்டும். டெஸ்ட் பந்தயங்களுக்குச் சில நாட்களுக்கு முன்பு ஆரம்பித்து அதைத் தயாரித்துவிட முடியாது. 'சேப்பாக்கம் மைதானத்தில் அமையவிருக்கும் கிரிக்கெட் ஸ்டேடியத்தில் நல்ல 'பிட்ச்' தயாரிக்க முடியும் என்று நம்புகிறோம்' என்கிறார். மாலைகள் போட்டு கிரிக்கெட் ஆட்டக்காரர்களைக் கௌரவிக்கும் ஆர்வத்தில் ரஸிகர்கள் ஆட்டத்தைத் தடைப்படுத்துவதை நிறுத்த வேண்டும் என்று வேண்டுகோள் விடுகிறார் அவர்.

விளையாட்டுக் கலை மட்டுமல்ல, வெள்ளித் திரை பற்றியும் ரசமான கட்டுரைகள் உள்ளன. 'சினிமா பொழுதுபோக்குக்காக மட்டுமே என்று எண்ணுவது தற்கொலைக்கு ஒப்பாகும்; சாதாரண சினிமா ரஸிகன் வாழ்க்கையையும் கலையையும் உண்மையோடு சித்திரிக்கும் படத்தை ஆவலோடு விரும்ப மாட்டான் என்று எண்ணுவது தவறு; இது வரை மக்களுக்கு ஒரேவிதமான உணவை — பொழுது போக்கு—வெள்ளித் திரை வழங்கிவருகிறது. ஏன், படமுதலாளிகள் இந்த ஒரே மாதிரியான உணவை ஒதுக்கிவிட்டு ஒரு மாறுதல் செய்து பார்க்கக் கூடாது?' இப்படி ஒரு கட்டுரை சொல்கிறது.

இவை போன்ற சுவாரசியமான பல கட்டுரைகள் இம்மலரில் இடம் பெற்றுள்ளன.

'ஸ்போர்ட் அண்டு பாஸ்டைம்' ஆண்டு மலர் 1966, கஸ்தூரி பில்டிங்ஸ், மவுண்ட் ரோடு, சென்னை—2; விலை: ரூ. 2.50.

## ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ம ஸ்தோத்திரமும் ஷட் பதீ ஸ்தோத்திரமும்

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்கள் மதுரமான சொற்களால், உணர்ச்சிப் பெருக்குடன் ஆழ்ந்த கருத்துக்களை வெளியிட்டுள்ள பல ஸ்தோத்திரங்களில் இவை இரண்டும் குறிப்பிடத் தக்கவை. தேவநாகரி — தமிழ் ஆகிய லிபிகளில் இவற்றின் மூலத்தையும் தமிழில் பொழிப்புரை, கருத்துரை, விளக்கங்களையும் நமக்கு இந்நூல் அளிக்கிறது. தமிழாக்கம் மிகவும் நன்றாக இருக்கிறது. ஷட்பதீ ஸ்தோத்திரத்தின் உட்கருத்துக்கள் விரித்து உரைக்கப் பட்டிருக்கின்றன. ஆங்கரை பிரம்மஸ்ரீ ரங்கஸ்வாமி சாஸ்திரிகள் தமிழ்ப் படுத்தியிருப்பதாக அறிகிறோம். மத்திய சர்க்காரின் கல்வி மந்திராலயத்தின் நிதி உதவி கொண்டு நூல் பிரசுரமாகியிருக்கிறது.

வெளியீட்டாளர்: ஆர். முத்துகிருஷ்ண சாஸ்திரி, 1835-3, மேல வீதி, தஞ்சாவூர்; விலை 50 பைசா.

## பாபநாசம் சிவன் கீர்த்தனமாலை

(இரண்டாம் பாகம்)

ஸ்வரப்படுத்தப்பட்ட 101கீர்த்தனங்கள்; கிடைக்குமிடம்: ஸ்ரீ பாபநாசம் சிவன், 9, சீனிவாசன் தெரு, மந்தைவெளி, சென்னை-28 விலை ரூ. 8—00 (தபால் செலவு தனி)

# மறைந்த உண்மை!

"நான் ஒருத்தி இருக்கிறது உங்க கண்ணைக் கரிக்கிறது. என்னை ஒழிச்சுக் கட்டிப்புடுங்கோ. ஆனால்தான் உங்களுக்கு நிம்மதி" என்று வியாதிக்காரியான நிர்மலா தன் டாக்டர் கணவன் நிரஞ்சனிடம் பொரிந்து கொட்டினாள். ஆனால் நிஜமாகவே நிர்மலா ஒழிந்து விட்ட போது கணவன் டாக்டர் நிரஞ்சன், போட்டிக் காதலி வனஜா, 'எக்ஸெண்டிரிக்' தம்பி நாணு, வேலைக்காரன் ஆதிமூலம் அனைவருமே அவளது கொலைக்குக் காரணமானவர்களோ என்ற ஐயம் எழுகிறது. ஆனால் அது கொலையல்ல, வேலைக்காரன் ஆதிமூலம் அஜாக்கிரதையினால் கைதவறி விட்ட பாம்பு விஷத்தின் பலன் தான் என்பது 'மறைந்த உண்மை' என்ற இந்நாடகத்தில் இறுதி வரையில் மறைந்து நிற்கும் உண்மை.

அமெச்சூர் நாடகமாயிற்றே, நிறையத் தவறுகள் நிகழ்ந்து ஹாஸ்யத்தைத் தரும் என்று எதிர்பார்த்துப் போனவர்களுக்கு ஏமாற்றம்தான்! தொழில் நடிகர்களுக்குத் தாங்கள் சளைத்தவர்கள் இல்லை என்பதை நிரூபித்து விட்டனர் ஸாதனா ஸ்டேஜ் குழுவினர்.

நிர்மலாவாக வந்த ஸ்ரீமதி சுசிலா பத்மநாபன் வியாதிக்காரியாக நடித்து நல்ல பெயரைத் தட்டிக் கொண்டார். கோபம், தாபம், பரிவு, சிணுங்கல், போட்டி மனப்பான்மை ஆகிய பாவங்களை இயற்கையாக அவர் வெளியிட்டதைக் கண்டு அனைவரும் அதிசயித்தனர். பட்டாசு வெடிக்கிற மாதிரி தன் கணவனின் பராமுகத்தை இடித்துரைக்கும் போது பலரது பாராட்டையும் அவர் பெற்று விட்டார்.

''எக்ஸெண்டிரிக்'' நாணுவாக நடித்தவர் 'அத்திம்பேரே! அத்திம்பேரே!' என்று டாக்டர் நிரஞ்சனைப் பாடாய்ப் படுத்தி நம்மையும் சிரிக்க வைத்தார். இந்த அசட்டுப் பாத்திரத்தை ஏற்ற ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி சந்தானம் நாடகத்தில் அடுத்த பரிசைத் தட்டிக் கொண்டு போனார். வேலைக்காரன் ஆதிமூலமாக வந்த ஸ்ரீமதி சுதா சீனிவாசன், கான்ஸ்டபிளாகத் தோன்றிய பாலம்மாள், இன்ஸ்பெக்டர் வேஷம் போட்டவர் ஆகியோர் தங்கள் பாகத்தைச் செவ்வனே செய்தார்கள்.

டாக்டர் நிரஞ்சனாக நடித்த ஸ்ரீமதி தங்கம் கோபாலிடம் அவ்வளவாக டாக்டருக்குள்ள கம்பீரம் இல்லை. அவரது பெண்மைக் குணமே முன்னால் வெளிப்பட்டது. அதற்கென்ன செய்ய; ஸாதனா ஸ்டேஜ் குழுவில் நடித்தவர்கள் அனைவருமே பெண்மணிகள் என்பது இந்நாடகத்தில் 'மறைந்த (மறுக்க முடியாத) உண்மை' யாயிற்றே!

1. வனஜா. 2. இன்ஸ்பெக்டர். 3. சுவாரஸ்யமான முறையில் 'போர'டிக்கவே பிறந்த பாட்டி; 4. நிர்மலாவாக வந்த ஸ்ரீமதி சுசிலா பத்மநாபன். 5. கான்ஸ்டபிள் பாலம்மாள். 6. வேலைக்காரன் ஆதிமூலமாக வந்த ஸ்ரீமதி சுதா சீனிவாசன். 7. எக்ஸென்டிரிக் நாணு!







# ராஜாஜியின் பயம்



காந்திஜி சென்னைக்கு வந்திருந்த சமயம். மாலைப் பிரார்த்தனையின் போது மக்கள் அவரைத் தரிசிக்க ஏராளமாகக் கூடியிருந்தனர். மகாத்மா வருவதற்குச் சற்றுத் தாமதமாயிற்று. கூட்டத்தில் சலசலப்பு எழுந்தது. அப்பொழுது ராஜாஜி எழுந்து எல்லோரையும் அமைதியாக இருக்கும்படி கேட்டுக் கொண்டார். அமைதி நிலவியது. என்றாலும், தொண்டர்கள் ஹரிஜன நிதிக்காக உண்டியல்களை பலமாகக் குலுக்கிக் கொண்டு அங்குமிங்கும் போய்க் கொண்டிருந்தது அமைதியைக் குலைத்தது. ராஜாஜி சொன்னார்: "தயவு செய்து தொண்டர்கள் உண்டியல்களைப் பலமாகக் குலுக்க வேண்டாம், அதன் அடிப்பாகம் உடைத்துக் கொள்ளுமோ என்று பயமாக இருக்கிறது."

— புலி. வேந்தன்



# "அகரம் இகரம்"

ஒரு சமயம் பாரதியார் நண்பர்கள் சிலருடன் பேசிக் கொண்டிருந்தார். இடையே, அவரது மனைவியார் செல்லம்மாள் அங்கே வந்து, "அரிசி இல்லையே" என்று கூறினாள். அவ்வளவுதான்; பாரதியார் செல்லம்மாளை ஒரு மாதிரியாகப் பார்த்தாராம். கொடூரமாக இல்லை. புன்னகையுடனே, மனைவி புரிந்து கொள்ளும் வகையில் தான் பார்த்தார். செல்லம்மாளும் உள்ளே சென்று விட்டார். பின்னர் நண்பர்கள் எல்லோரும் சென்று விட்டனர். செல்லம்மாளை அழைத்து, "என்ன செல்லம்மா இது! உனக்குக் கொஞ்சம்கூட லௌகிகமே தெரியவில்லையே. நண்பர்கள் எதிரே இனி அப்படிச் சொல்லாதே. 'அகரம் இகரம்' என்று சொல்லிவிட்டு போதும். நான் புரிந்து கொண்டுவிடுவேன்" என்று செல்லமாகக் கடிந்து கொண்டார்.

**ஆதாரம்: திரு தனபாண்டியன் வரலாற்றில் கூறியது.**
**தகவல்: தேரா.**

# ஆர்ய்' என்றால் என்ன?

"ஆர்ய" என்ற சொல்லின் பொருள் விவசாயி. லத்தீன் மொழியிலும் சமஸ்கிருதத்திலும் இச்சொல் மூலச் சொல்லிலிருந்து சிறு மாற்றம் செய்யப்பட்ட உருவத்தில்தான் வழங்கப்படுகிறது. ஆனால் மூலச் சொல் பிராமண வேத காலத்துக்கும் ஈரானியரின் அவஸ்தா காலத்துக்கும் முற்பட்ட காலத்திலிருந்தே பேச்சில் இருந்து வருகிறது. லத்தீன் மொழியிலுள்ள "அர்ரே" கிரேக்க மொழியில் உள்ள "அரோவன்" ஸ்லாவானிக் மொழியிலிருக்கும் "அராட்டி" கோதிக் மொழியில் வழங்கும் "அர்ஜன்" வெல்ஷ் மொழியில் காணும் "அராட்" பழங்கால ஆங்கில மொழியில் இருக்கும் "இரியன்" ஆகிய எல்லா மொழி வார்த்தைகளுக்கும் பொருள் ஒன்றுதான்; அதாவது "உழுதல்" அல்லது "நிலத்தைக் கொத்துதல்"- சமஸ்கிருதத்திலிருக்கும் "அர்" என்ற வேர்ச் சொல் அல்லது மூலச் சொல்லின் பொருளும் "உழுதல்"தான். ஆங்கிலத்தில், "ஆரபின்" என்றால் உழுவதற்குத் தகுதியானது என்பதுதான் பொருள். கிரேக்க மொழியில் உள்ள "அரோட்ரான்" என்ற சொல்லுக்கும் லத்தீன் மொழியில் இருக்கும் "அருவம்" என்ற சொல்லுக்கும் பொருள் உழுத நிலம் என்பதாகும்.

—"ஆர்ய ஸ்வபத்ர"





## அடம் பிடித்தது!

ஒருவர் தான் வாங்கிய நாய்க்குப் புதிதாக ஒரு பயிற்சி அளித்தார். அதன் ஆகாரத்தைத் தூரத்தில் ஒரு பிளேட்டில் வைத்து விட்டு அவர் நாய்போல் குரைப்பார். குரைத்தால் தான் ஆகாரம் கிடைக்கும் என்று தெரிந்து அது குரைக்க வேண்டும் என்பது அவர் நோக்கம். ஒரு வாரம் தினசரி அதுமாதிரி பயிற்சி அளித்து விட்டு அடுத்த நாள் அதன் ஆகாரத்தைத் தூரத்தில் வைத்து விட்டு ஆவலுடன் அதன் முகத்தைப் பார்த்தார். அது குரைக்கவே யில்லை. அரை மணி நேரம் காத்திருந்து பார்த்துவிட்டு, பாவம் நாய்க்குப் பசிக்கப் போகிறதே என்று அதன் அருகில் ஆகாரத்தை வைத்தார். அது சாப்பிடவில்லை. வழக்கம்போல் அவர் குரைத்தால்தான் சாப்பிடுவேன் என்று அந்த நாய் அடம் பிடித்தது!

ஆதாரம்: 'டிட்பிட்ஸ்'
தகவல்: ஆர். கிதா.



"ஆண்களைவிடப் பெண்கள் அழகாக இருக்கிறார்கள்."

"இயற்கை விநோதம் சார்!"

"இல்லை! செயற்கை விநோதம்!"

★ ○ ★



அன்னி பெஸண்டை பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் சிறைப்படுத்திய போது, அதுகுறித்து எட்வின் சாமுவேல் மாண்டேகு தமது டயரியில் பின்வருமாறு எழுதுகிறார்:

இங்கு ஒரு புராணக் கதை வழங்கி வருகிறது. சிவபெருமான் தமது மனைவியை ஐம்பத்திரண்டு துண்டங்களாக வெட்டி விட்டார் என்றும், உடனே ஐம்பத்திரண்டு மனைவிமார்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள் என்றும் இக்கதை கூறுகிறது. அதுபோலத்தான் அன்னி பெஸண்டைச் சிறைப்படுத்திய போது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நிலை இருந்தது. ஒருவரைச் சிறையில் போட்டால் அவரிடத்தில் அப்பணியைத் தொடர வேறு நூறு பேர்கள் தோன்றுகிறார்கள்.

# பேராசிரியருக்கு மாணவக்கன் துணை

பேராசிரியர் எதனாலோ மிகுந்த கோபத்துடன் வகுப்பறைக்குள் நுழைந்தார். வேகமாக வந்து மேடை ஏறி நின்றவர், "இந்த வகுப்பில் என்னை யாராவது முட்டாள் என்று கருதினால் அவன் எழுந்து நிற்கட்டும்" என்று சீறினார். வகுப்பில் மரண அமைதி நிலவியது. சற்று நேரம் சென்ற பின் ஒரே ஒரு மாணவன் தயக்கத்துடன் மெல்ல எழுந்து நின்றான். வகுப்பு முழுவதும் அவனையே நோக்க, பேராசிரியர் 'நீ என்னை முட்டாள் என்று கருதுகிறாயா' என்று கோபமாக வினவினார். மாணவக்கன், "ஸார்! நீங்கள் மட்டும் தனியே நிற்பதை என்னால் பொறுக்க முடியவில்லை. உங்களுக்குத் துணை நிற்கவே நான் எழுந்திருந்தேன்!" என்றான்.

—ஆர். எஸ்.



"ரேஸ் கோர்ஸில் நான் உன்னைச் சந்தித்தது, மையல் கொண்டது, மணம் புரிந்தது யாவும் சரி. ஆனால், இப்ப உனக்காகவும் சேர்த்து நான் பணம் தொலைக்க வேண்டியிருக்கிறதே! இந்தக் கஷ்டத்தை யாரிடம் சொல்லி அழுவேன் கடவுளே!"

அலையூருக்கு நான் ஒரு முறை போயிருந்த போது எழுத்தாள நண்பன் சுகந்தன் எனக்கு இந்தக் கதையைச் சொன்னான்.

ஏறத்தாழ 130 அல்லது 140 வருடங்களுக்கு முன்னே இங்கே இந்தக் கோயில்* கிடையாது. இந்த இடம் ஒரு பெரிய பொட்டலாக இருந்தது. ஆனால், அலையூரோ இப்போது இருப்பதைவிட மிகவும் பெரிய நகரமாக இருந்தது. கடல் வாணிபத்தில் செழித்து, செல்வத்திலும் நாகரிகத்திலும் முன் நின்றது. அலையூர் மக்கள் சந்தோஷமாக வாழ்ந்து வந்தனர். திடீரென்று ஒரு நாள், அதுவரை அவர்களுக்கே தெரியாமல் அலையூருக்கு இருந்த பெருங்குறை ஒன்று அவர்களுக்குத் தெரிய வந்தது: இவ்வளவு பெரிய ஊருக்கு ஒரே ஒரு கோயிலாவது வேண்டாமா? கோயிலில்லா ஊரில் குடியிருக்கலாமா? துறைமுகத்தின் படகுத் துறைக்கு அருகே மானசீகமாகக் காக்கும் தெய்வமாக நின்று அலையூரைக் கடலின் இன்னல்களிலிருந்து காத்து வரும் கடலழகருக்கு ஒரு கோயில் வேண்டாமா?

நாட்டாண்மை ராஜவர்மரின் தலைமையில் ஊர் பெரிய தனக்காரர்களும், அறிஞர்களும், கலைஞர்களும், பக்தகோடிகளும், வணிகர்களும் கலந்த திருக்கோயில் உருக்குழு அமைக்கப்பட்டது.

அலையூர் மக்கள் கோயில் திருப்பணிக்குத் தங்கங்களாகக் கொட்டிக் கொடுத்தனர். அந்தச் சுற்று வட்டம் மட்டுமல்லாது, தமிழகம் முழுவதிலிருந்தும் ஆலயப் பணிக்குப் பொருட்கள் வந்து குவிந்தன. மாவட்டக் கலெக்டர் அம்புரூஸ் துரைகூட, பெருந்தொகை ஒன்றைக் கடவுள் கைங்கரியத்துக்கு அளித்ததோடு நில்லாமல், தெய்வச் சிலையைப் பிரதிஷ்டை செய்யும்போது தாமும் மற்ற பக்தர்களைப் போல் சகலவிதமான அநுஷ்டானங்க





# தெய்வச் சிலை

அழகிரி விசுவநாதன்

ளுடனும் மூலஸ்தானத்துக்கு அருகில் இருக்கப் பிரியப்படுவதாகவும் தெரிவித்திருந்தார்.

ராஜவர்மர்என்றால் அலையூரைப் பொறுத்த வரையில் ராஜாதான்! அவர் பேச்சுக்கு மறு பேச்சு அங்கே கிடையாது.

அப்படிப்பட்ட ராஜவர்மரே கோயில் எழுப்பும் முழுப் பொறுப்பையும் முதுபெரும் சிற்பி அலையூர் சிங்கத்திடமே ஒப்படைக்க வேண்டும் என்று எண்ணிய பிறகு, வேறு அட்டி ஏது?

கடலூருக்கருகிலே பாறைப் பகுதியில் ஒரு சிறிய குடிலில் வசித்து வந்த கைதேர்ந்த சிற்பக் கிழவர் சிங்கசித்தரைக் காண ராஜ வர்மரும், மற்றும் சம்பந்தப்பட்டவர்களும் மலர் மாலையுடன் அன்று மாலையே கிளம்பினர்.

சிங்கசித்தரின் சிற்பக் கூடத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் போதே, சிற்பங்கள் வடிக்கும் சிற்றுளியின் ஓசை 'கல் கல்' என்று இசை எழுப்பிக் கொண்டிருந்தது தெளிவாகக் கேட்டது.

சிங்கசித்தர் அழகானதொரு மோனநிலை புத்தர் சிலையை வடிக்கும் பணியில் தம்மை மறந்து ஈடுபட்டிருந்தார். சிற்றுளி பாறையின் மேல் வேலை செய்தவிதம் ஒரு நல்ல இசைக் கலைஞன் இலக்கணரீதியாக வீணை வாசிப்பதைப் போலிருந்தது.

''மன்னிக்க வேண்டும், சிங்கசித்தரே, தங்களுடைய ஏகாந்தக் கலைப் பணியைக் கலைக்க வந்திருக்கிறோம்!'' என்றவாறு கைகூப்பி வணங்கினார் ராஜவர்மர்.

கடமை கலைந்து திரும்பிய சிங்கசித்தர், ''வரவேண்டும், வரவேண்டும், ராஜாவைப் போன்றவர்களும், மந்திரியைப் போன்றவர்களும், இந்த ஏழை கல்லுடைப்பவனின் குடிசைக்கு வந்திருக்கிறீர்களே, என் பாக்கியந் தான்!'' என்று பதிலுக்கு வணங்கினார்.

சிங்கசித்தரின் சிறிய குடிலுக்குள் அத்தனை பேருக்கும் இடமில்லாததால், வெளியே அமைந்திருந்த பாறை இருக்கைகளையே பளிங்காசனமாக நினைத்துக் கொண்டு எல்லாரும் அமர்ந்தவுடன் ராஜவர்மர் சொன்னார்: ''நமது ஊரிலே எழுப்ப இருக்கிற கடலழகர் ஆலயத்தின் முழுப் பொறுப்பையும் தங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்று வந்திருக்கிறோம். மறுக்காமல் ஏற்றுக் கோயிலைக் கருவூலமாக உருவாக்கி, பகவான் கைங்கரியத்தைச் சிறந்த முறையில் முடித்துத் தர வேண்டும்!''

சிங்கசித்தருக்கு மெய் சிலிர்த்தது. எவ்வளவு பெரிய தெய்வப் பொறுப்பு அவர் தலையில் விழ வந்திருக்கிறது?

''மிகவும் பெரிய தேவபாரத்தை என் மீது சுமத்துகிறீர்கள். நான் மிகவும் எளியவன். கிழவன். சாதாரண சிற்பம் வடிப்பவன். தெய்வ காரியம் என்றால் பக்தி சிரத்தை

யுடன் விக்னமில்லாமல் பயந்து செய்ய வேண்டும். ஆனாலும், கடவுள் காரியமாக இருப்பதாலே தடை சொல்லக் கூடாதே என்று ஏற்றுக் கொள்கிறேன். கோயிலை நல்ல முறையில் உருவாக்கித் தரும் பொறுப்பு கடலழகருடையது. அலையூர் மக்களை இது வரை தோன்றாத் துணையாய், தெய்வமாய் நின்று காத்து வருவதைப் போல, இந்த மகத்தான காரியத்தையும் அவரே முன்னின்று முடித்துத் தர வேண்டும்.''

ராஜவர்மரும், மற்றவர்களும் தெய்வ பக்தியில் சிறந்த சிற்பி சிங்கசித்தர் கோயில் பொறுப்பு முழுவதையும் ஏற்றுக் கொண்டதை நினைத்து மகிழ்ந்து போனார்கள்.

அந்த நேரத்தில்தான் பாறைப் பகுதியின் மற்றொரு புறத்தில் சிலை வடித்துக் கொண்டிருந்த அயனன் — சிங்கசித்தரின் ஒரே மகன்— அங்கே வந்தான். இளமை ததும்பும் அழகு முகம். பரந்த நெற்றி. ஒளிவிடும் கண்கள். கூர்மையான நாசி. எப்பொழுதும் கற்பனையில் மிதக்கும் முகபாவம். பார்த்தவர்கள் மறுபடியும் பார்க்க வேண்டும் என்று விரும்புகிறவாறு ஓர் இனந்தெரியாத கம்பீரம்...

மகனை — இளங்கலைஞனை — அருகில் அழைத்து அன்புடன் தலையை வருடியவாறு சிங்கசித்தர் சொன்னார்: ''என்னுடைய ஒரே மகன் அயனன் இவன். இளஞ் சிற்பியாக உங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்கின்றேன். அன்னையை ஐந்து வயதிலேயே இழந்தவன். அதற்குப் பிறகு நானே இவனுக்கு அன்னையாய், அப்பனாய் இருந்து வளர்த்தேன்..... ஆனால், இப்போது நானும் இவனும் தந்தையும் மகனுமல்ல; குருவும் சிஷ்யனும் போல. எதற்காக இவ்வளவு பீடிகை போடுகிறேன் என்றால், அயனன் சம்பந்தமாக ஒரு வேண்டுகோளை உங்களிடம் கேட்கப் போகிறேன்.....''

''என்ன, அப்படியா ? சித்தமாகக் காத்திருக்கிறோம் கலைஞரே. பீடிகை எதற்கு? பேச்சுக்கு வாரும்!'' என்றார் ராஜவர்மர்.

''திருக்கோயில் முழுவதும் எழுப்புகின்ற திருப்பணியை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால்.......''

''ஆனால் ?'' — எல்லாரும் ஏககாலத்தில் வாயசைத்தனர்.

''கடலழகர் தெய்வச் சிலை வடிக்கும் பொறுப்பை மட்டும் என் மகன் — சிஷ்யன்— வளரும் கலைஞன் அயனனுக்குக் கொடுத்து என்னைப் பெருமைப்படுத்த வேண்டும்!''

அயனனுக்குச் 'சுரீர்' என்றது: ''என்னப்பா இது சாதாரணமாகச் சொல்லிவிட்டீர்கள்? தெய்வச் சிலை வடிப்பதா? நானா? இந்த அயனனா? இந்த இளங்கைகளாலா?'' தலையைக் குறுக்கே அசைத்தான் அயனன்.

''சிஷ்யா, சும்மா இரு. உன் திறமை உனக்கே தெரியாது!'' என்று கையமர்த்தினார் சிங்கசித்தர். 'மகனே' என்று அயனனை அழைக்காமல் 'சிஷ்யா' என்றதன் உள் அர்த்தத்தை ராஜவர்மரும் மற்றவர்களும் உணரத் தவறவில்லை. சிஷ்யனுள் உறைந்திருக்கும் திறமை குருவுக்குத்தானே தெரியும்? இருந்தாலும் கேட்டு வைத்தார் ராஜவர்மர். ''தாங்களே சொல்லும் போது எங்களுக்கு அட்டி ஒன்றும் இல்லை. ஆனால், அலைபாயும் மனமுடைய இளைஞனாக இருக்கிறானே அயனன். தெய்வச் சிலையை வடிக்க மனப் பக்குவம் வேண்டுமல்லவா?''

''அச்சம் ஒன்றும் தேவையில்லை. நானும் தான் பக்கத்தில் இருக்கிறேனே. கடலழகர் தெய்வச் சிலை தெய்வீக பாவத்தோடு, — அழகோடு, அமைந்த வீரத்தோடு உருவாகிவிடும்!'' என்று சிங்கசித்தர் உறுதி கொடுத்தார்.

கோயில் கட்டுவதற்காகக் கருங்கற்கள் மலையென வந்து குவிந்தன. சிங்கசித்தருக்குக் கீழே நூற்றியொரு சிற்பிகள் திருப்பணி செய்தனர். ஆண்டுகள் ஐந்துக்குள்ளே ஆலயத்தின் பெரும் பகுதி கலைக் கருவூலமாய்க் கண்கவர் சிற்ப வேலைப்பாடுகளுடன் உருவாக்கப்பட்டது. நான்குபுறமும் வாயில் வைத்துப் பன்னிரண்டு கோபுரங்கள் எழுப்பப் பட்டிருந்தன. ந டு வே நடுநாயகமாக மூலஸ்தானத்துக்கு மேலே பெரிய கோபுரம் கம்பீரமாக உயர்ந்து நின்றது. மூன்று பிராகாரங்களின் அடித்தளமும் கருங்கற்களால் வேயப்பட்டன. ஆயிரக்கால் மண்டபமும், ஊஞ்சல் மண்டபமும் கன ஜோராக அமைந்து விட்டன. கோபுரங்களில் சிற்ப வேலைப்பாடுகள் அனைத்தும் முடிந்துவிட்டன. அவற்றில், வர்ண வேலைகள் மட்டும் கொஞ்சம் பாக்கி இருந்தன. அரைத் தென்னை மர உயரத்துக்கு இரண்டு துவார பாலகர்களைச் சிங்கசித்தரே தம் நேரிடைப் பொறுப்பில் வடித்திருந்தார். தெப்பக் குளத்தில் தண்ணீர் விட வேண்டியது மட்டும்தான் மீதி.

கோயில் முழுதும் உருவாக இன்னும் ஓரிரண்டு ஆண்டுகள் ஆகலாம் எனத் திருக்கோயில் உருக்குழு நினைத்தது. தெய்வச் சிலை அயனனின் இளங்கைகளால் எப்படி உருவாகிறது என்று பார்க்க அனைவரும் ஆவலோடு காத்திருந்தனர்.

**அயனன் கடலுக்கருகிலுள்ள பாறைப் பகுதியின் ஓர் ஓரத்தில் ஊண் உறக்கமின்றிச் சிற்றுளி, சுத்தியலோடு உட்கார்ந்திருந்தான் தெய்வச் சிலை வடித்தவாறு.**

ஆண்டுக் கணக்கான உழைப்புக்குப்பின் ஒரு நாள் தெய்வச் சிலை அற்புதமாக உருவாகி நின்றது. அயனன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேது? குதித்தான், கும்மாளமிட்டான். தந்தையிடம் ஓடிச் சென்று உவகையுடன் சொன்னான். ''அப்பா, முடியுமா என்று நினைத்திருந்தேன். கடலழகர் அருளினாலே சிலை வடித்து முடித்துவிட்டேன் அப்பா ! தாங்கள் தயை செய்து வந்து பார்த்து அங்கீகரிக்க வேண்டும்!''

மகனைக் கட்டித் தழுவிக் கொண்டார் சிங்கசித்தர்: ''உலகம் உள்ளளவும் தெய்வச் சிலை வடித்த உன் புகழ் நிலைக்கும்!''

தெய்வச்சிலையைக் கண்ணுற்ற சிங்கசித்தருக்கு முதல் பார்வையிலேயே ஒரு தெய்வீகம், பக்தி தோன்றவில்லை. சாதாரண மனிதச் சிலை ஒன்றைப் பார்ப்பதைப் போலவே உணர்ந்தார். தெய்வச் சிலை

ஏன்றால், பார்த்தவுடன் கைகள் தாமாக வணங்க மேலே எழ வேண்டாமா?

தெய்வச் சிலையின் முகப் பரப்பில் வீரத்துக்குப் பதிலாக ஒரு பெண்மை இலைமறை காய் மறையாய் ஒளிந்து ஒளி வீசுகிறதே, அதற்குப் பொருள்? அப்படியொரு மனிதச் சாயல் தெய்வச் சிலையில் விழலாமா? மனிதத்துவம் வணங்குவதற்குத்தானே தவிர, வணங்கப்படுவதற்கு அல்லவே.....

''அயனு! மனத்தைத் தேற்றிக் கொள். சோர்வடைந்து போய் விடாதே. இன்னொரு சிலை வடி.''

''அப்பா !''

''நான் சொல்வதைக் கேள். அடுத்த சிலை அருமையாக அமையும். முகத்தில் மட்டும் கொஞ்சம் தெய்வ கம்பீரம் தேவை. அவ்வளவுதான்!''

சிராண்டு இடைவெளியில் ஒன்று, இரண்டா, மூன்று சிலைகள் வடித்துவிட்டான் அயனன். சிங்கசித்தர் ஒரு சிலையைக் கூட ஏற்றுக் கொள்ள வில்லை. முதற்சிலையில் கண்ட அதே பெண்மையின் சாயல். அவர் எங்கோ மனித உருவில் பார்த்திருக்கின்ற ஒரு மனிதனின் அல்லது ஒரு பெண்ணின் முகத் தோற்றம். கண்காட்சியில் பரிசு பெறுவதற்காக வைக்கத்தக்க அற்புதமான சிலைதான் அது. ஆனால், கோயிலிலே வைத்து வணங்கத்தக்க சிலை இல்லையே ?

அயனனின் நான்காவது தெய்வச்சிலையைக் கண்ணுற்ற அன்றைக்கு, சிங்கசித்தருக்கு ஓர் உண்மை புரிந்தது போலவும், புரியாதது போலவும் இருந்தது. வலுவானதொரு சந்தேகம் அவரை அலைக்கழித்தது. அயனன் சிற்பம் வடிக்கும் பாறைப்பகுதிக்கு ஒரு நாள் மாலை நேரம் அவனையறியாமல் சென்றார் சிங்கசித்தர். அவருடைய ஐயம் வீண் போகவில்லை. அங்கே அவர் கண்ட காதல் காட்சி....

சிற்பி அயனனின் மார்பிலே அவனுடைய காதல் வனிதை அங்கை பூமாலையைப் போல் சுருண்டு கிடந்தாள்.

சிங்க சித்தரால், அதற்கு மேலும் பொறுக்க முடியுமா, என்ன? அவர் கர்ஜித்தார்: ''அயனு, இதுதான் நீ தெய்வச் சிலை வடிக்கும் அழகா? வெட்கமாக இல்லை உனக்கு? இந்தச் சாகசக்காரியின் முகச் சாயல்தான் உன் சிற்பங்கள் அனைத்திலும் விழுந்திருக்கின்றன! நான் சந்தேகப்பட்டது சரியாகப் போய் விட்டது. ஆனால், மகனே, தெய்வ நிந்தனை உன்னை—உங்களைச் சும்மா விடாதேடா !''

''அப்பா, நான் அங்கையை என் உயிரை விட அதிகமாக நேசிக்கிறேன். அவள் இல்லை என்றால் எனக்கு வாழ்வே இல்லை.... சுற்றி வளைப்பானேன்? உங்களுடைய பரம வைரியின் செல்வ மகள் என்று தெரிந்தும் அங்கையை நான் மனதார விரும்புகிறேன்!''

''இது என்ன புதுக் குழப்பம்? மேகடணர் சிற்பி சேதுராயனின் மகளா இவள்?''

''ஆமாம், அப்பா !''

''ஆஹா, இப்பொழுது அல்லவா சேதுராயனின் சூழ்ச்சி எனக்குப் புரிகிறது! என்னை அவனே கெடுத்தான். என் மகனைக் கெடுக்க



என்ணெய்க்கும், காஸ்டிக் சோடா உப்புக்கும் இடையே எவ்வளவோ வேற்றுமை இருக்கிறது. என்ணெய் வழவழப்பாக இருக்கிறது. காஸ்டிக் சோடா உப்பு உடம்பில் பட்டால் எரியும். உடம்பு புண்ணாகிவிடும். ஆனால் இந்த இரு பொருள்களையும் நாம் ஒன்றாகச் சேர்க்கும்பொழுது நமக்கு நல்ல சோப்புக் கிடைக்கிறது. ருஷ்யக் காஸ்டிக் சோடா உப்பும் அமெரிக்க என்ணெயும் என்றாவது ஒரு நாள் ஒன்றாகக் கலந்து உலகத்துக்கு ஒரு சோப்பை வழங்குமென்று நாம் நம்புவோமாக.

— ராஜாஜி

மகளையே அனுப்பி யிருக்கிறான், மடையன், துரோகி, மானங்கெட்டவன்!''

''அப்பா !''

''சும்மா இரு, அயனு! குறுக்கே ஒன்றும் பேசாதே. உனக்குத் தெரியாத விஷயமா?.... மீண்டும்தான் சொல்கிறேனே, அந்த அற்பனின் மகள்—பொறுமைக்காரனின் புதல்வியும் — காதாரக் கேட்கட்டும்.... நானும் இவளைப் பெற்ற பெரியவனும் ஒரே குருநாதரிடம் சிற்பம் பயின்றோம். அவர் இறுதியில் எங்கள் இருவருக்கும் சிற்பப் போட்டி ஒன்று வைத்தார். நான் வடித்துப் போட்டிக்காக வைத்திருந்த சிற்பம் சேதுராயனுடைய படைப்பைவிடச் சிறந்ததாக இருக்கவே, இரவோடு இரவாகத் திருடனைப் போல் என் குடிலுக்குள் வந்து சிற்பத்தைக் கொஞ்சம்கூடக் கலைமணம் இல்லாமல் உடைத்துவிட்டுச் சென்றான். அந்தக் கலைக் கொலைஞனின் மகள் அல்லவா இவள்? முன்பு போல, நான் படைக்கும் சிலை ஒரே ஒரு சிற்பமாக இருந்தால், சேதுராயனே சுத்தியலுடன் வந்து இரவோடு இரவாக உடைத்துப் போட்டுவிட்டுப் போவான்! ஆனால், இப்போது நான் ஆயிரமாயிரம் சிற்பிகளைக் கொண்டு உருவாக்கும் கோயிலைத் தனியொருவனான அவனால் என்னசெய்ய இயலும்? ஆகையினால்தான் தெய்வச் சிலைப் படைப்பை கெடுக்கவே அவனால் அனுப்பப் பட்டு இவள் வந்திருக்கிறாள்! தெய்வப் பணியைக் கெடுத்தும் விட்டாள்! சேதுராயா, பாவி, படுபாவி, என் வாழ்க்கையில்தான் புகுந்து விளையாடினாய்! என் மகனின் தெய்வப் பணியிலுமா குறுக்கிட வேண்டும்? சேதுராயா! மறந்து விடாதே, தெய்வம் நின்று கேட்கும்!''

0 0 0 0 0 0 0 0 0 0 0 0



பாலர்களுக்கோ, முதியவர்களுக்கோ எழுதப் படிக்கத் தெரிந்து விடுவது அறிவு ஆகிவிடாது. பள்ளிக் கூடத்தில் வாசிப்பதன் மூலம் எழுத்தறிவைப் பெற்று விடலாம்; ஆனால் எழுத்தறிவு உள்ள மனிதனுக்குக் கூட உண்மையான அறிவு தேவையாயிருப்பது உண்டு. அநேகமாக அப்படித் தான் இருக்கிறது. விஷய ஞானம் என்பதும் அறிவு ஆகாது. நேர்மையாகச் சிந்தனை செல்வதும், உண்மையைப் பேணிப் போற்றுவதும் தாம் அறிவு. இந்த விதமான அறிவையும் அளிக்கக் கல்லூரிகளும் பள்ளிக்கூடங்களும் முயலுகின்றன. ஆனால் நம் நாட்டின் முப்பது கோடி ஆண் பெண் மக்களுக்கு இந்த அறிவை வழங்கு வதில் அதிக சிரத்தை காட்டுவது மதம்தான். சர்வகலாசாலைகளும், கல்லூரிகளும் நமக்குப் பல நன்மைகள் புரிந்திருக்கின்றன. ஆயினும் நம் மனம் பண்பட்டுச் சீரிய முறையில் அமைவதற்குக் கல்லூரிப் புத்தகங்களையும் ஆசிரியர்களையும் விட நம்முடைய மதமே பெரிதும் துணை புரிகிறது.

- ராஜாஜி, 'மெய்ப் பொருள்'

0 0 0 0 0 0 0 0 0 0 0 0

"அப்பா, அப்படியெல்லாம் வன்மமாகப் பேசாதீர்கள், அப்பா. சேதுராயருடைய குணம் முற்றிலும் இப்போது மாறியிருக்கிறது. அதோடு சேற்றிலே செந்தாமரையும், நத்தையிலே முத்தும், குப்பையிலே குன்றிமணியும் தோன்றுவதில்லையா? அங்கையின் அப்பா எவ்வளவோ தவறுகள் செய்தவராக, உங்கள் பரம வைரியாக இருக்கலாம். ஆனால், அங்கை நல்லவள். அவள்தான் எனக்கு உயிர், உடம்பு, மூச்சு எல்லாம்!"

அங்கையும் தன் பங்குக்குப் புலம்பினாள்: "மாமா, என்னை என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள். சித்திரவதை செய்யுங்கள். என் நோக்கத்தை மட்டும் சந்தேகிக்காதீர்கள், மாமா! தெய்வச் சிலை உருவாகி உங்கள் மகன் புகழ் எய்தக் கூடாது என்ற வஞ்சநெஞ்சத்துடன் நான் அவருடன் பழக வரவில்லை, மாமா! எங்கள் காதல் தெய்வீகமானது, புனிதமானது, பவித்திரமானது!" கத்திக் கதறிக் கண்ணீர் விட்டாள் அங்கை.

சிங்கசித்தர் சொன்னார்: "அயனா, இறுதியாகக் கூறுகிறேன். கவனமாகக் கேட்டுக் கொள். கோயில் வேலைகள் எல்லாம் மங்களமாக முடிந்து விட்டன. தெய்வச் சிலை வடித்தவுடன் பிரதிஷ்டை செய்ய வேண்டியதுதான். ஒரு கலைஞனுக்கு உயிருக்கும் மேலானது, அவனுக்கு நிரந்தரமாகக் கிடைக்கும் அழியாப் புகழ்தான். அந்தப் புகழ் உனக்கு வேண்டுமென்றால், அங்கையை மறந்துவிடு. அவளுடைய நினைவை உன் உள்ளத்திலிருந்து தூக்கித் தூர எறி. அவளுடைய உருவம் இதயச் சிலையாக உன் உள்ளத்தில் இருக்கும் போது, தெய்வச் சிலை உன் சிற்றுளியில் எப்படி உருவாகும்? சிலை என்பது என்ன? கலைஞனுடைய உணர்ச்சிகளின் கல் வடிவம்தானே? தெய்வச்சிலையை நல்ல முறையில் உருவாக்கிக் கொடுத்தால், தெய்வப் பிரீதி ஏற்படுவதுடன், கடல் உள்ளளவும் உன் புகழ் நிலைக்கும். இல்லையென்றால், கேவலம் மனித மாமிசப் பெண்ணுக்காக, காதல் எனும் கண நேரப் பிரேமைக்காக, இந்தப் பெண் பேயுடன் கூடி வாழ்ந்து, குழந்தைகளைப் பெற்றுச் சாதாரண மனிதனாக மடிந்து போ, போ, போ!" சிங்கசித்தர் போய் விட்டார்.

அயனன் செய்வதறியாது திகைத்து நின்றான். ஆனால், அங்கை ரோஷமுள்ள பெண் அல்லவா? மறு நாள் என்ன செய்ய வேண்டும் என்ற முடிவுடன், அயனனைக் கட்டித் தழுவி முத்தமிட்டுவிட்டுக் கண்ணீரோடு பிரிந்தாள். அதுதான் அவர்களுள் கடைசிச் சந்திப்பா?

**ம**று நாள் காலை பொழுது புலரும் நேரம். மீனவர்கள் சிலர் அயனனைத் தட்டி எழுப்பினர். "அங்கை கடலில் குதித்து விட்டாள். குற்றுயிரும் கொலை உயிருமாகக் கரையில் தூக்கிப் போட்டிருக்கிறோம்."

"அங்கை!" — பயங்கரமாகச் சத்தமிட்டான், அயனன். அவன் ஓடி வந்த கோரத்தைப் பார்த்துப் பயந்து நடுங்கி அடங்கின கடலலைகள்.

அங்கையின் உயிர் மெல்ல மெல்லப் பிரிந்து கொண்டிருந்தது. தட்டுத் தடுமாறி அவள் பேசினாள்: "அத்தான், எதற்காக வருத்தப்படுகிறீர்கள்? எதற்காக அழுகிறீர்கள்? இனி நான் பிழைக்க மாட்டேன். கடைசியாக, நான் சாகும் தறுவாயில் ஒரு வேண்டுகோள். எங்கே சத்தியம் செய்து கொடுங்கள்!"

கண்ணீருடன் கையடித்துக் கொடுத்தான் அயனன்.

அங்கை சொன்னாள்: "இனிமேலாவது என்னை நீங்கள் மனதார மறந்துவிட்டு, தெய்வச் சிலை வடித்துப் புகழ் ஈட்ட வேண்டும். ஏனென்றால், தங்களுடைய தந்தையாரின் சொற்படி, காதல் என்பது கணநேரப் பிரமைதானே! ஆனால் புகழோ நிலையானது. அந்த அழியாப் புகழை என் காதல்—தெய்வம் அடைய வேண்டும்... அம்மா..."

அங்கையின் தலை சாய்ந்தது. அயனனைத் தேற்றுவார் யார்?

பைத்தியம் பிடித்தவனைப் போல அங்கையை நினைத்துப் பல நாட்கள் புலம்பிக் கொண்டிருந்தான், அயனன். கடற்கரையையும், கோயிலையும், பாறைப் பகுதியையும் சுற்றிச் சுற்றி வந்தான். ஒரு வகையாக அயனன் தெளிவு பெறுவதற்கு சில மாதங்கள் பிடித்தன.

சுதை வேலைகளும், வர்ண வேலைகளும் அற்புதமாக முடிந்து, கோயில் கலைக் கோயிலாகக் காட்சி தந்தது. கடலழகர் சிலையையும் பிரதிஷ்டை செய்து விட்டால்? சிங்க சித்தர் மகிழ்ந்து போனார். தெய்வச் சிலைக்காக மகனிடம் இதமாகச் சொன்னார். "இறந்தவள் இறந்து விட்டாள். இனி என்ன செய்வது அயனா? அதோ பார், தெய்வச் சிலை... புகழ்... புகழ்! வாழ்வில் சந்தர்ப்பம் ஒரு முறைதான் வரும். நழுவ விட்டுவிடாதே. இறுதியாக அங்கையை மறந்துவிட்டு, மனத்தை ஒருமைப்படுத்தி, ஒரு சிலை வடி. அதில் நிச்சயம் தெய்வீகம் ததும்பும். வெற்றி கிட்டும். உன் புகழ் நிலைக்கும்.... சிற்பி சிங்கசித்தரின் மகனால் ஒரு தெய்வச் சிலை வடிக்க முடியவில்லை என்றால், அது எனக்கு — ஏன், உனக்கும்—இழுக்கு இல்லையா? ராஜவர்மனும் கோயில் முழுமை பெற்றுவிட்டதால் தெய்வப் பிரதிஷ்டை செய்யத் தெய்வச் சிலைக்கு அவசரப்படுத்துகிறார். இன்னும் இரண்டு திங்கள் அவகாசம் தருகிறேன். சிலை உருவாகட்டும்."

அயனன் மனத்துக்குள் சிரித்துக் கொண்டான்: "உங்களுக்காகவும், ராஜவர்மருக்காகவும், அலையூர் மக்களுக்காகவும் இல்லாவிட்டாலும், என் அங்கையின் கடைசி வேண்டுகோளுக்கிணங்கத் தெய்வச் சிலையை வடிக்கத்தான் போகிறேன். அங்கைக்குச் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறேன் அல்லவா?... ஆனால், ஒரு நிபந்தனை!"

"எதுவாக இருந்தாலும் பதறாமல் சொல், மகனே!"

குடிலுக்குள் சென்ற அயனன் சற்று நேரம் கழித்துத் திரும்பி வந்தான், துறவிக்கான காவி உடை அணிந்து கொண்டு.

சிங்கசித்தர் வாய் விட்டுக் கத்திவிட்டார். "அயனா, என் மகனே! இது என்ன பயங்கர முடிவு? கோரமான கோலம்?"

"இந்தக் கோலத்தோடுதான் அப்பா நான் தெய்வச் சிலையை வடிக்கப் போகிறேன்!"

கடைசியாக, ஐந்தாவது சிலையாக, துறவி அயனன் ஒரு தெய்வச் சிலையை வடித்தான்.

சிலை முடிந்த சமயத்தில் சிங்க சித்தருக்குக் கண் நோய் வந்துவிட்டது. காரணம், திருக்கோயிலை உருவாக்கும் விஷயத்தில் சக்திக்கு மீறி உழைத்ததுதான் என்று கண் வைத்தியர் சொன்னார். இரண்டு கண்களும் பழுதுபட்டிருந்தன. பார்க்க முடியாதவாறு கண்களில் கட்டுப் போட்டிருந்தார் வைத்தியர். கண் பூரணமாகத் தெரியவும், கட்டு அவிழ்க்கவும் ஒரு மண்டலமாகும் என்றார்கள் மருத்துவர்கள்.

சிங்க சித்தரோ தெய்வச் சிலையைக் கைகளாலேயே தொட்டுத் தொட்டுப் பார்த்தார். கைவந்த கலைஞரல்லவா? சிலை பிரமாதமாக அமைந்து விட்டதை நினைத்து மகிழ்ந்தார். திரும்பத் திரும்ப ஒரே சிலையை வடித்ததால் அயனனும் நன்றாகவே செய்திருந்தான். நிலைத்த புகழ் மகனுக்கு வர விருப்பதை நினைத்து நினைத்து மகிழ்ந்தார் சிங்கசித்தர்.

அன்னை கற்பகாம்பிகையும், கபாலீசுவரரும் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள திவ்விய ஸ்தலமான திருமயிலையின் பெருமை அளவிடற்கரியது. மேற்படி ஆலயத்தின் நான்கு மாட வீதிகளிலும் தநுர் (மார்கழி) மாதம் முழுவதும் தினசரி அதிகாலையில் ஐந்தரை மணிக்கு பிரம்மஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்கள் பக்தர்களுடன் பஜனை செய்து வலம் வருவார்.

தெய்வச் சிலை கடைசியாக அங்கீகரிக்கப்பட்டதைக் குறித்து அயனனுக்கும் ராஜவர்மருக்கும் ஓர் ஆறுதல்.

சிலையைப் பிரதிஷ்டை செய்வதற்காக நல்ல நாள் குறித்தார்கள் நிமித்திகர்கள்.

திருக்கோயிலை உருவாக்கிய சிற்பி சிங்க சித்தர் கண் நோய் வாய்ப்பட்டிருப்பதால் எங்கே தெய்வச் சிலை பிரதிஷ்டையை அவர் தரிசிக்க முடியாமல் போய்விடுமோ என்று சம்பந்தப்பட்டவர்கள் அஞ்சினர். அப்படி ஒன்றும் நேராது என்றும், பிரதிஷ்டை செய்யும் நாழிகைக்குள் கண் கட்டை அவிழ்த்து விடுவதாகவும் கண் வைத்தியர் தைரியம் சொன்னார்.

அந்தத் திருநாளும் வந்தது. அலையூர் இரண்டுபட்டது. சத்தம், மகிழ்ச்சி, பக்தி, ஆரவாரம்...வேதங்கள் முழங்க, மேளங்கள் ஒலிக்க, கடலழகரைத் தெய்வ பீடத்தில் பிரதிஷ்டை செய்ய இன்னும் ஓரிரு விநாடிகள் இருந்தன.

அயனன் மட்டும் அங்கு நிகழ்கின்ற நிகழ்ச்சிகளுக்கும் தனக்கும் சம்பந்தமே இல்லாதது போல கர்ப்பக்கிருகத்துக்கு முன் உள்ள அர்த்த மண்டபத்தின் ஒரு மூலையில் சிலையாய் நின்று கொண்டிருந்தான்.

திடீரென்று பக்தர்களிடையே ஒரு பரபரப்பு.

கண் கட்டு இல்லாத சிங்கசித்தர் கூட்டத்தை விலக்கிக் கொண்டு வந்து கொண்டிருந்தார். கண் வைத்தியர் தம் வாக்குறுதியின்படி கண் கட்டைச் சில விநாடிகளுக்கு முன்தான் அவிழ்த்து விட்டார். கோயிலையே உருவாக்கிய சிற்பி தெய்வச் சிலை பிரதிஷ்டையைப் பார்க்க வேண்டாமா?

தெய்வச் சிலையைப் பார்த்த முதல் பார்வையில் சிங்கசித்தரின் கைகள் தாமாக வணங்க எழுந்து, குவியாமல் ஏனோ தளர்ந்தன. தெய்வச் சிலையின் முகத்தை ஊன்றிக் கவனித்தார். ஒரு விநாடி. அடுத்த விநாடி...

அவருடைய முகம் ஏன் அப்படிக் கோணலாய்ப் போகிறது? பல்லை ஏன் இப்படி நறநறவென்று கடிக்கிறார்? 'ஊஹூம்' என்று கத்துகிறாரே. ஏன்? என்ன விபரீதம் நிகழப் போகிறது அங்கே? சிங்கசித்தரின் வாய் அலறியது: "அபசாரம், அபசாரம்! தெய்வ நிந்தனை! இந்தச் சிலையை தெய்வச் சிலையாக ஏற்றுக் கொள்ளக் கூடாது. அயனன் முன்னம் வடித்த நான்கு சிலைகளைப் போன்றதுதான் இதுவும். கொஞ்சம்கூட மாறுதல் இல்லை. தெய்வ கம்பீரம் இல்லை. அதே பெண்மையின் சாயல்... இந்தச் சிலையைப் பிரதிஷ்டை செய்யக் கூடாது!"

பக்தர் கூட்டம் பதறியது. திகைத்தது.

இவ்வளவுக்கும் அயனன் அசையவில்லை. அயரவில்லை. பேசாமல் அர்த்த மண்டபத்துள் நின்றிருந்தான். அவன்தான் பற்று, பாசம், பந்தம் அனைத்தையும் துறந்துவிட்டானே!

தெய்வச் சிலை பிரதிஷ்டைக்காகக் காத்திருந்தது.

''நான் அமைத்த ஆலயத்தில் ஒரு நாச்சிலை தெய்வமாவதா? என் உடலில் உயிர் உள்ளவரை இதை நான் அனுமதியேன்!'' என்று சிங்கசித்தர் வெறி கொண்டவரைப் போல் ஓடினார். பக்கத்துத் தூணில் சிற்பி ஒருவன் தவறுதலாக விட்டுச் சென்றிருந்த சிற்றுளி ஒன்றைக் கையில் எடுத்தார்.

''ஆ!'' என்றனர் அனைவரும்.

கல்லின் இலக்கணம் அறிந்த சிங்கசித்தருக்குச் சிற்றுளியைத் தெய்வச் சிலையின் எந்த இடத்தில் அடித்தால் பிளக்கும் என்று தெரியாதா என்ன?

சிலை இரண்டாக வெடித்தது. அதனினும் பெயர்ந்த ஒரு கற் சில்லு, தற்செயலாகத் தவறி அர்த்த மண்டபத்தின் ஒரு மூலையில் நின்றிருந்த அயனனின் முன் நெற்றியைத் தாக்கியது. அவனுடைய மண்டை பிளந்து ஒரே ரத்த வெள்ளம். மகனின் சவத்தைப் பிடித்துக் கொண்டே சிங்கசித்தர் கதறினார். ''மகனே! அயனா, உன் காதல் மங்கை அங்கை இறந்து நீ துறவி ஆன பிறகு நீ வடித்த சிலைகூட, உன் அங்கையின் சாயலைக் கொண்டே உருவாகியிருக்கிறது. உன்னையும் மீறி உன்னுள் அடங்கிவிட்ட உருவம் அங்கை. அவளை உன் உள்ளத்திலிருந்து உன் துறவுக் கோலத்தால் கூட அழிக்க முடியவில்லை. உங்கள் உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுக்காமல் நான் எப்படி எப்படி வெல்லாமோ நடந்து கொண்டுவிட்டேன். அதன் விளைவு? இருவரின் இழப்பு. ஆலயத்தின் அழிவு. ஐயகோ, இறைவா! இது என்ன, அலையூருக்கு இப்படி ஒரு சாபம்? காதலும் தெய்வ பக்தியைப் போல ஓர் ஆழமான உணர்ச்சி. அந்த உணர்ச்சியைச் சாதாரண புற விவகாரங்களால் கட்டுப்படுத்திவிட முடியாது. சம்பந்தப்பட்ட இருவரில் ஒருவர், ஏதோ ஒரு சரியான பலமான காரணத்தால் அந்த உணர்வை மறக்க முயன்றால் கூட, அது அவர்கள் அறியாமலேயே அவர்களுள் வாழ்ந்து வரும். சமயம் வாய்க்கும்போது அவர்கள் செயல் ஒவ்வொன்றிலும் கலந்து வெளிப்படும். கடவுளே! காதலுக்கு இப்படி ஓர் அழியாச் சக்தியா?''

அலையூரே அன்று அமைதி இழந்து தவித்தது. கடலழகர் தெய்வச் சிலைக்கு நேர்ந்த நிலையே அலையூருக்கும் ஏற்பட்டு, ஊருக்குள் கடல் புகுந்து, ஊர் அழிந்து விடுமோ என்று ஊர்ப் பெரியவர்கள் அஞ்சினர்.

மகனை இழந்த புத்திர சோகத்தினால் சிங்கசித்தர் நிலை தடுமாறினார். புத்தி சுவாதீனம் இழந்தார். கடலுக்கு அருகில் உள்ள பாறைப் பகுதியிலும், இந்தக் கோயிலிலும் அயனனுடைய சிற்பத்தை எங்கு பார்த்தாலும் செதுக்கி வைத்தார். சில வருடங்களுக்குப் பிறகு சிங்கசித்தர் மனோவியாகூலமுற்ற நிலையில் கடலில் மூழ்கி இறந்தார்.

ஊர்ப் பெரியவர்களால் மறுபடியும் அந்தக் கோயிலில் வேறு ஒரு தெய்வச் சிலையைப் பிரதிஷ்டை செய்ய முடியவில்லை. ஆனால், கோயிலுக்கு முன்னே ஒரே ஒரு சிறிய விக்கினேசுவரர் ஆலயத்தை மட்டும் மறக்காமல் எழுப்பினர். அதன் காரணமாகத்தானோ என்னவோ விக்கினம் ஒன்றும் இல்லாமல் அலையூர் இன்றுவரை இருந்து வருகிறது. இதுதான் இந்தக் 'கோ' இல்லாத கோயிலின் வரலாறு.

# அம்புலிப் பருவம்

ஆழியிடை நீ முன்னாளில்
அமுதத்துடன் வந்துங்கலை தான்
அழிந்து தேய்வாய் ஒரு பக்கம்
அழியா தோங்கும் இவன் கலையே

போழும்* உடல்சால் வெண்மதி! நீ
புனிதன் இவனோ செம்மதியன்
புவியிற்றளரும் *ஏழையர்பால்
புரிவாய் இன்னல்; மேல் மேல் இவன்

ஏழையோருக் கிரங்கியவர்க்(கு)
ஏமம் அளிக்குந் தண்ணளியான்
என்றும் காந்தி உனக்கிரவல்
இவற்குக் காந்தி மிகும் உறவாம்

வாழி எம் ராஜாஜியுடன்
வருக ஆடற் கம்புலியே!
மகிழ்வா எம் ராஜாஜியுடன்
வருக ஆடற் கம்புலியே!

கோ. முத்துசாமி
மு. கோ. இராமன்

* போழும்-பிளந்த; ஏழையர்: பெண்கள், ஏனைகள்

# மலையாளக் கவிஞருக்குப் பரிசு



க. நா. சுப்பிரமணியம்

பாரதிய ஞான பீடம் என்கிற ஸ்தாபனத்தார் ஓர் அகில இந்திய இலக்கியப் பரிசு ஏற்படுத்தி, இந்திய மொழிகளில் குறிப்பிட்ட கால கட்டங்களில் வெளியாகிற சிறந்த நூல்களைத் தேர்ந்தெடுத்து ஒரு லட்ச ரூபாய் பரிசு அளிப்பது என்று திட்டமிட்டு வேலை செய்து வருகிறார்கள். தமிழ் மொழிக் குழுவில் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், பெரியசாமித் தூரன், சா. கணேசன், மூவரும் இருக்கிறார்கள். அகில இந்தியக் குழுவில் சென்னையிலிருந்து டாக்டர் வே. ராகவன் இருக்கிறார். இந்திய மொழிகள் ஒவ்வொன்றுக்கும் இப்படி ஒரு குழு அமைத்து, அகில இந்தியக் குழுவுக்குத் தலைவராக டாக்டர் சம்பூர்ணானந்த் என்பவரை ஏற்றுக்கொண்டு பரிசு சம்பந்தமான காரியங்கள் நடந்து வருகின்றன. இது—சர்க்கார் சம்பந்தப்படாத ஓர் இலக்கிய முயற்சி என்பதனால் வரவேற்கப்பட வேண்டிய ஒன்று என்று எனக்குத் தோன்றுகிறது.

சென்ற ஆண்டு இறுதியிலேயே சங்கர குரூப் என்கிற மலையாளக் கவிஞர் அவருடைய 'ஓடக் குழல்' என்கிற 1950ல் வெளிவந்த கவிதைத் தொகுதிக்கு முதல் ஞான பீடம் பரிசை அளிக்க முடிவெடுத்திருப்பதாக அறிவிக்கப்பட்டது. இந்த முதல் ஆண்டுப் பரிசு 1920 முதல் 1958 வரை வெளிவந்த இந்திய நூல்களில் சிறந்ததற்கு அளிக்கப்பட்டது.

பரிசளிப்பு விழா இந்தியப் பிரதமர் இந்திரா காந்தியின் பிறந்த நாளான நவம்பர் 19ந் தேதியன்று டெல்லி விஞ்ஞான பவனில் நடைபெற்றது. டாக்டர் சம்பூர்ணானந்த் தலைமை வகித்துப் பரிசுத் தொகை ரூபாய் லட்சத்தையும், ஒரு பாராட்டுப் பத்திரத்தையும், வாக் தேவியின் சிலை ஒன்றையும் ஸ்ரீ சங்கர குரூப் அவர்களுக்கு அளித்தார். ஞானபீட அறிக்கையை லக்ஷ்மி சந்திர ஜெயின் (காரியதரிசி) வாசித்தார்; வரவேற்புரையை ஸ்ரீமதி ரமா ஜெயின் (தலைவர்) நிகழ்த்தினார். டாக்டர் நாராயண மேனன் சங்கர குரூப் அவர்களின் கவிதையைப் பற்றிச் சுருக்கமாகப் பேசினார்.

விழா மிகவும் சிறப்பாக, சங்கர குரூப் அவர்களைப் போலவே எளிமையாகவும், அழுத்தமாகவும், அழகாகவும் நடந்ததைக் குறிப்பிட வேண்டும். சாதாரணமாக இந்த மாதிரி அகில இந்திய நிகழ்ச்சிகளில் பங்கெடுத்துக் கொள்ளும் இன்றையப் பெரிய மனிதர்கள் (அரசியல் வாதிகள்) அதிகம் இல்லாததையும் பேச்சுக்கள் தொண தொணப்பில்லாமல் அமைந்திருந்ததையும் சொல்ல வேண்டும். பேச்சுக்களுக்குப் பிறகு சங்கர குரூப் உணர்ச்சி ததும்பப் பேசினார். கவிதை பற்றித் தமது அபிப்பிராயங்கள், இந்திய இலக்கியம் – அதன் போக்கு பற்றிச் சில கருத்துக்களையும் எடுத்துச் சொன்னார். அவருடைய கவிதைகளின் ஹிந்தி மொழிபெயர்ப்புக்களை ஸ்ரீராம்தாரி ஸின்ஹா தின்கர் அவர்களும், எச். ஆர். பச்சன் அவர்களும் ஆங்கில மொழிபெயர்ப்பு ஒன்றை இ. அல்காஸி அவர்களும் படித்தனர். அவருடைய கவிதை ஒன்றுக்குக் குமாரி யாமினி கிருஷ்ணமூர்த்தி அபிநயம் பிடித்துக் காட்ட விழா முடிந்தது.

இரண்டாவது நாள் இந்தப் பரிசளிப்பு விழாவைப் பற்றி ஒரு கருத்தரங்கு கூட்டிய ஞான பீடத்தார் அதற்கு விஷயமாக ''இன்று தேசிய இந்தியப் புத்திலக்கியம் தோன்றியிருப்பதாகச் சொல்லலாமா? அப்படித் தோன்றி விட்டால், அதிகமாகத் தோன்றி விட்டால் அதை வளர்க்க என்ன செய்ய வேண்டும்?'' என்று இரண்டு கேள்விகளைக் கேட்டிருந்தது சற்று விரசமாகவே இருந்தது. இந்தக் கேள்விகளால் பாரதிய ஞான பீடத்தார் தங்கள் இலக்கிய வளர்ப்பு முயற்சிகளைப் பாராட்டித் தங்களுக்கே ஷொட்டுக் கொடுத்துக் கொள்வது போல் இருந்தது.

கருத்தரங்குக்கு நல்ல கூட்டம் இருந்தது. அக்ஞேய், பச்சன், தின்கர், வி. சீதாராமய்யா, ஆர். ஆர். திவாகர், ஹேம் பருவா, நான், கிருஷ்ண சைதன்ய, கோபால் ஸிங், நிஹார் ரஞ்சன் ராய் முதலிய

வாக் தேவி



வர்கள் கருத்தரங்கில் பங்கு பெற்றனர். இருந்தும் கருத்தரங்கு களை கட்டவில்லை. கருத்தரங்குக்கான தலைப்பிலே உள்ள தேசியம் என்கிற வார்த்தைக்கு நிஹார் ரஞ்சன்ராய் ஆட்சேபம் தெரிவித்தார். ஹேரம் பருவா இன்னும் இந்தியசமுதாயமே புதுமை பெறவில்லையே, எப்படி இந்திய இலக்கியம் புதுமை பெற்றிருக்க முடியும் என்றார். ஹிந்திக்காரர்களில் எல்லோரும் ஹிந்தியிலேயேபேசினார்கள். எந்த மொழியில் வேண்டுமானாலும் பேசலாம் என்று முதலில் அறிவிக்கப்பட்டிருந்தும் மற்ற எல்லோரும் ஆங்கிலத்திலேயே பேசினார்கள். வாத்ஸ்யாயன் (அக்ஞேய்) மட்டும் ஆங்கிலத்தில் இந்திய இலக்கியத்தில் புதுமை இலக்கியம் இருக்கிறது. அது போதுமானது. ஆனால் தரமான்தாக இல்லை என்று குறிப்பிட்டார். நான் இதை ஆமோதித்துப் புதுமை என்பதன் அம்சமாக ஓர் அறிவு இயக்கமும், ஒரு விமரிசன நோக்கும் நமது இலக்கியங்களில் காணப்படுகின்றன என்று சொன்னேன். கிருஷ்ண சைதன்ய நமது அரசியல், பொருளாதாரத் திட்டங்கள் நமது இன்றைய இலக்கியத்தில் பிரதிபலிக்கப்படவில்லை என்று சொன்னார். தலைமை தாங்கிய சங்கர குருப் முடிவில் சுருக்கமாக நாலே வாக்கியங்கள் பேசினார். ''நான் இந்தியன்; மலையாளத்தில் எழுதுபவன்; இன்று உயிர் வாழ்பவன்; புதுமையிலும் அதே அளவு பழமையிலும் நம்பிக்கை உள்ளவன்'' என்றார்.



மலையாளக் கவி சங்கர குருப்

பாரதீய ஞான பீடத்தின் முதல் அகில இந்திய இலக்கியப் பரிசு ஸ்ரீ ஜி. சங்கர குருப் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டதன் மூலம் மலையாளக் கவிக்கு ஒரு லட்ச ரூபாய் பணம் கிடைத்தது—லட்ச ரூபாய் என்பது ஒரு இலக்கியாசிரியன் அளவில் பெரும் நிதியாகும். அதில் சந்தேகமில்லை. மலையாள மொழிக்கு ஓரளவுக்கு, மற்ற இந்திய மொழிகளுடன் சரிசமமாக உறவாடும் வாய்ப்பு ஏற்பட்டது. இந்த வாய்ப்பு சாதாரணமாக இருக்க வேண்டிய ஒன்று. ஆனால் இன்றுள்ள நிலையில் இருப்பதில்லை என்பது தெரிந்த விஷயம். வங்க மொழிக்கு, ஒரு உலக மொழி அந்தஸ்து தாகூருக்கு நோபல் பரிசு கிடைத்தபின் ஏற்பட்ட மாதிரி. இன்றுவரை தமிழுக்கு இந்தமாதிரி ஓர் அந்தஸ்து ஏற்படாதது பற்றி நாமெல்லோரும் வருத்தப்படத்தான் வேண்டும். அது நிவர்த்தியாகும் நாள் மிக சமீபத்திலேயே இருக்கும் என்று நம்புவோமாக.

பாரதீய ஞான பீடத்துக்கு இப்பரிசினால் நல்ல பெயர் ஏற்பட்டிருக்கிறது, விழாவில் மட்டுமில்லாமல் மற்றப்படியும். அரசியல், பட்டம், பதவி, நோக்கம் கலந்திருந்தால் சங்கர குருப் அவர்களுக்கு இப்பரிசு கிடைத்திருக்குமா என்பது சந்தேகமே. தொடர்ந்து இதே அளவில் இலக்கியத் தரமான அம்சங்களை மட்டும் மனத்தில் கொண்டு பாரதீய ஞான பீடத்தார் செயலாற்றினார்களானால் மிகவும் நன்றாக இருக்கும்.

கேரள மகாகவி திரு ஜி. சங்கர குருப்புக்கு லட்ச ரூபாய் நிதியையும், வாக் தேவி சிலையையும் பாராட்டுப் பத்திரத்தையும் ராஜஸ்தான் கவர்னர் ஸ்ரீ சம்பூர்ணானந்த் வழங்குகிறார்.



# ராஜாஜி:

## மறக்கமுடியாத நினைவுகள்

ரா. நா.

1930ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 13ந் தேதி தமிழ்ப் புத்தாண்டு தினத்தன்று திருச்சி நகரில் வரலாற்று முக்கியத்துவம் பெற்ற ஒரு சம்பவம் நடந்தது. அன்றுதான் டாக்டர் ராஜன் அவர்கள் இல்லத்திலிருந்து நூறு தொண்டர்கள் ராஜாஜி அவர்கள் தலைமையில் வேதாரண்யத்தை நோக்கி உப்புச் சட்டத்தை மீறப் புறப்பட்டனர். மோட்டார்களில் அல்ல, ரயில் மூலமும் அல்ல. கால்நடையாகத்தான் சென்றார்கள். நூறு தொண்டர்களும் இளம் வயதினர்தான். ஆனாலும் நூறு மைல்கள் நடக்க முடியுமா என்று அவர்களில் சிலர் சிந்தித்ததுண்டு. ஆனால் முதுமை நிலையை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த ராஜாஜி தடியை ஊன்றிக் கொண்டு துரிதமாக நடந்து சென்றதைப் பார்த்த இளைஞர்களின் தயக்கம் பறந்தோடிவிட்டது. ராஜாஜியின் தலைமையில் தொண்டர்கள் சென்றது கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. வழி நெடுகிலும் எண்ணற்ற மக்கள் இந்த மறக்க முடியாத காட்சியைப் பார்த்து மன எழுச்சி அடைந்தனர். நாமக்கல் கவிஞரின் 'கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது' என்னும் பாட்டுக்கு ஏற்பத் தாளம் போடுவது போலிருந்தது தொண்டர்களின் நடை. இதன் முன்னணியில் சிந்தனையில் ஆழ்ந்த முகத்துடன் ராஜாஜி சென்றது தினசரி நடக்கக் கூடிய நிகழ்ச்சி அல்ல.

தொண்டர் படை திருச்சி மாவட்ட எல்லையைத் தாண்டித் தஞ்சை எல்லைக்குள் பிரவேசிக்கு முன் அந்த மாவட்டக் கலெக்டர் தார்ன் என்னும் ஆங்கிலேயர் தொண்டர்களுக்குப் புகலிடமளிப்பவர்கள் தண்டனைக்குள்ளாவார்கள் என்று தடையுத்தரவு பிறப்பித்தார். இதையும் மீறிக் கும்பகோணத்தில் காலஞ்சென்ற ஸ்ரீ பந்துலு அய்யர் தமது இல்லத்தில் தொண்டர்களை உபசரித்தார். அங்கு நிகழ்ந்த ஒரு ருசிகரமான சம்பவத்தை இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

சிறையில் அளிக்கப்படும் உணவே தொண்டர்களுக்கு அளிக்கப்பட வேண்டும் என்பது ராஜாஜியின் கட்டளை. ஆனால் தேச பக்தி மேலிட்டால் அய்யரவர்கள் இந்த அன்புக் கட்டளையை மீறி ஒரு விருந்தே அளித்தார். இதில் பாயசமும் இடம் பெற்றிருந்தது. ரசம் பரிமாறின பின் பாயசம் வரச் சற்றுத் தாமதமாயிற்று. இதற்குள் தொண்டர்கள் மனத்தைப் பரம்பொருள்பால் திருப்ப, 'தேனே, கற்கண்டே' என ஆண்டவனை வர்ணிக்கும் ராமலிங்க அடிகளார் பாட்டொன்றை ஒரு தொண்டர் பாடினார். இந்தச் சந்தர்ப்பத்தில் ராஜாஜி, "பாயசம் பரிமாற வேண்டும் என்பதை ஞாபகப்படுத்துவதற்காக 'இந்தப் பாட்டோ?" என்று இளநகையுடன் கூறினார். இதைக் கேட்ட தொண்டர்கள் பாயசத்தையும் பாட்டையும் மறந்து வாய் விட்டுச் சிரித்தார்கள்.

ஃ ஃ ஃ

உப்புச் சத்யாக்கிரகத்தில் நான் சேலம் சிறையில் கடுங்காவல் தண்டனை அனுபவிக்கையில் கேப்பங் கூழும், நாற்றமடிக்கும் புழுங்கலரிசிச் சோறும் எனக்கு அளிக்கப்பட்டன. புழுங்கலரிசிக்குப் பதிலாகப் பச்சரிசி வழங்குமாறு சிறைப் பிரதம டாக்டரை நான் கேட்டதும், "நீங்கள் உல்லாசப் பொழுது போக்குக்காக இங்கு வந்திருக்கிறீர்களா?" என்று என்னைக் கேட்டார். ஆனால் அதே டாக்டர் சில நாட்களுக்குப் பின் எனக்குக் கட்டில், மெத்தை, பால், பழம், ரொட்டி எல்லாம் வழங்க உத்தரவிட்டார். இந்தத் திடீர் மாற்றத்துக்குக் காரணம் என்ன என்று உதவி டாக்டரைக் கேட்டதும் உண்மை விளங்கிற்று. பிரதம டாக்டர் ராஜாஜியின் குடும்ப வைத்தியர் என்றும், என்னைப் பற்றி அக்கறையுடன் ராஜாஜி விசாரித்ததன் விளைவுதான் இந்த மாற்றத்துக்குக் காரணம் என்றும் அறிந்தேன். தொண்டர்களிடம் தலைவருக்கு இருந்த அக்கறையையும் அவருடைய மனிதாபிமானத்தையும் அன்று அறிந்து கொண்டேன்.

ஃ ஃ ஃ

காந்தி—இர்வின் ஒப்பந்தத்தின் விளைவாக நான் விடுதலை அடைந்ததும் சேலத்தில் ஒரு பொதுக்கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தனர். அதற்குச் சேலம் விஜயராகவாச்சாரியார் தலைமை வகித்தார்கள். அந்தக் கூட்டத்தில் ராஜாஜி பேசுகையில், "விஜயராகவாச்சாரியார் போன்று வக்கீல் தொழிலில் புகழ் பெற்றவர்கள் அதைத் துறப்பது

'கல்கி'யும் ராஜாஜியும்



எளிது. ஆனால் விஜயராகவாச்சாரியார் போல் புகழ் பெற வேண்டும் என்கிற ஆசையைத் துறப்பது கடினம்'' என்று கூறுகையில் நான் புளகாங்கிதம் அடைந்தேன்.

ஃ ஃ ஃ

பின்னர் நான் சென்னைக்கு வந்து ஆசிரியர் பொறுப்பேற்ற பத்திரிகையின் உரிமையாளர்என் அனுமதியின்றியும் நான் அறியாமலும் ராஜாஜியைப் பற்றித் தவறான கருத்துக்களை வெளியிட்டதனால் நான் ஆசிரியர் பதவியிலிருந்து விலகினேன். இதையறிந்த என் நண்பர் 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி அவர் இல்லத்தில் விருந்துண்ண என்னை அழைத்திருந்தார். பகிலுல்லா ரோடில் இருந்த அவர் இல்லத்துக்குள் நான் 'கல்கி'யுடன் பிரவேசிக்கையில் அண்டை வீட்டில் துணி தோய்த்துக் கொண்டிருந்த ராஜாஜியைச் சந்திக்க நேரிட்டது. விஷயத்தை அறிந்த ராஜாஜி ''எனக்காக ஏன் பதவியை விட்டு விலகினீர்கள்? வேறு ஏதாவது பத்திரிகையில் இடம் பெற ஏற்பாடு செய்யட்டுமா?'' என்று கேட்டார்கள். 'ஜயபாரதி' தினசரியில் நான் பொறுப்பேற்றுக் கொண்டதாகக் கூறியதும் நிம்மதி அடைந்தார்கள்.

''ஹிந்துஸ்தான்'' வார இதழில் நான் ஆசிரியராயிருக்கையில் ராஜாஜி வங்க கவர்னராக இருந்தார். ராஜாஜி பிறந்த தின மலர் ஒன்று வெளியிட்டோம். என் துணையாசிரியராயிருந்த திரு சடகோபன் சேலம் சென்று ராஜாஜியின் நெருங்கிய தோழர்கள் பலரைச் சந்தித்து பல ரஸமான தகவல்களைச் சேகரித்து அம்மலரில் அளித்திருந்தார். ராஜாஜியைப் பற்றியும், நண்பர்களிடம் அவர் காட்டிய அன்பைப் பற்றியும் அவர் சேலம் முனிசிபல் சபைத் தலைவராக இருக்கையிலேயே தீண்டாமை ஒழிப்புப் பணியில் ஈடுபட்டிருந்தது பற்றியும் எழுதியிருந்தார். மலரைப் பார்வையிட்ட ராஜாஜி ''நான் சுக துக்கங்களுக்கு அப்பாற்பட்ட நிலையை அடைந்து விட்டதாக எண்ணிக் கொண்டிருந்தேன். உங்கள் மலர் நான் கண்ணீர் விடும்படி செய்து விட்டது. என்னை மீளாக் கடலில் ஆழ்த்தி விட்டீர்கள். மீளாக் கடலில் ஆழ்த்திவிடுவதும் ஓர் இன்பம்தானே!'' என்று கடிதம் எழுதியிருந்தார்கள். பல்லாயிரக் கணக்கான மலர்கள் விற்பனையாகிவிட்டன. பின்னர் மலரில் வெளியான கட்டுரைகளைத் தொகுத்துப் புத்தகமாக வெளியிட்டு அவையும் விற்பனையாகிவிட்டன.

ராஜாஜியின் அரசியல் மேதா விலாசத்தை விவரிப்பதைவிட அவரது மனிதாபிமானத்தை நினைவுபடுத்திக் கொள்வதில் தனி இன்பம் இருப்பதால் இச்சிறு சம்பவங்களைக் கல்கி நேயர்களுக்கு அளிக்கிறேன்.

ஹ்வான் ரயோன் ஹெமினத்ஸ் (1881-1955) என்கிற ஸ்பானியக்கவி எழுதியது—மூலத்திலிருந்து மயன் மொழிபெயர்ப்பு:

## விதைப்பு

காஸ்டைல் பிராந்தியத்தின் முடிவற்ற வயல்வெளியிலே
ஓய்ந்து நான் படுத்துக் கிடந்தேன்;
அஸ்தமன சமயத்தின் தெளிவின்பம்
வயல் வெளி எங்கணும் பரவி வந்தது.
ஏர்முனை, மெதுவாக, சேராத வரம்புகளாக
இருண்ட மண்ணைப் புரட்ட, எளியதோர் பரதத்தில்
சிறந்த ஒரு கை விதைகளை அள்ளி
வெட்கமற்று விரிந்து கிடக்கும் மண்ணரிலே விதைக்கிறது.
சிந்தனையும் உணர்வும் ஓங்கி மண்டும்
என் உள்ளத்தைப் பிடுங்கி எடுத்து
அகன்ற வரப்பின்திறந்த மண்வாயிலே
விதைத்தால்
அது மண்ணில் ஊறிப் பெருத்து முளைவிட்டு
வரும் வஸந்தத்தில் உலகுக்கு அன்பெனும்
சுத்த நித்தியச் செடியைக் காட்டாதா?

# பொருள்களை வைக்க கீரா காபினெட்டுகள்!

கீரா ஸ்டீல் காபினெட்டுகள் அழகான மெருகுள்ளவை... துருவினாலும் அரிப்பினாலும் பாதிக்கப்படாம லிருக்கும்படி 'ட்ரீட்' செய்த எஃகினால் தயாரிக்கப்பட்டவை. இவை நீண்டகாலம் நீடிக்கின்றன. பொருள்களை வைக்க இவை வசதியானவை, பத்திரமானவை. எல்லா காபினெட்டுகளுக்கும் பத்திரமாக பூட்டும் ஏற்பாடு உள்ளது. இவற்றின் ஷெல்ஃபுகளை வேண்டும்படி பொருத்திக்கொள்ளலாம். பொருத்தமான 'ஃபிட்டிங்குகள்' கூட கிடைக்கும். வீட்டிலும் சரி, ஆஃபீஸிலும் சரி, உங்கள் பொருள்களை பத்திரமாக வைக்க கீரா காபினெட்டுகளே சிறந்தவை!



'யுடிலிடி': 1971 எம்.எம். x 910 எம்.எம். x 481 எம்.எம். (78"x36"x19")



'பாபுலர்': 1641 எம்.எம். x 831 எம்.எம். x 481 எம்.எம். (65"x33"x19")



'மிஜட்': 1270 எம்.எம். x 760 எம்.எம். x 481 எம்.எம். (50"x30"x19")

JWT-KSW-4483




கீரா ஸ்டீல் ஒர்க்ஸ் பிரைவேட் லிமிடெட்
ஸ்வாமி விவேகானந்தா ரோட், ஸாந்தா க்ருஸ், பம்பாய்-54

# ஐஸ் புரூ!

ர. வெங்கடரத்னம்

சிறப்புச் சிறுகதை

**வா**சலில் கிட்டிப்புள் விளையாடிக் கொண்டிருந்த கண்ணன் பரம சாதுபோல் உள்ளே வந்தான். நேரே சமையலறைக்குச் சென்றான். 'அ...ம்...மா' என்று இராப் பிச்சைபோல் இழுத்துக் கெஞ்சினான்.

''என்னடா, வேணும்?'' — வெடுக்கென்று அம்மா வினவினாள்.

''ஒண்ணுமில்லேம்மா. வாசல்லே வந்திருக்கு. அஞ்சு பைசாக் கொடும்மா. ஒண்ணே ஒண்ணு வாங்கிக்கறேன்.''

''என்னடா வேணும்னு, அதைச் சொல்லாமெ என்னவோ பரமயோக்கியன்போலக் கெஞ்சறான்?''

''சைக்கிள்லே வந்திருக்கும்மா. அண்ணாவைக் கேட்டுக் காசு வாங்கிக் கொடும்மா.''

தெருவில் கத்திக் கொண்டு சென்றவனின் குரல் உள்ளே வந்து, கண்ணன் கேட்பது என்ன என்பதைத் தெளிவாக்கியது. 'பால் ஐஸ்....அஞ்சே பைசா' என்று கூவிக் கொண்டே, வீடு வீடாக நின்று நிறுத்திச் சென்று கொண்டிருந்த அந்த





வியாபாரியைச் சுற்றிச் சரியான கூட்டம். ஐஸ் புருட்டெல்லாம் அடிக்கடி தெருவில் வரக் கூடியதான ஊர் அல்ல அது. ஆதலின், தெருப் பையன்களின் திரள் அப்படியே சாய்ந்திருந்தது.

''நீயே அண்ணாவைக் கேட்டு வாங்கிக்கோ. என்கிட்டே காசு ஒண்ணும் கிடையாது.''

''போம்மா, நீ போய் சொல்றே.''

''நிஜமாய்த்தான்டா காசே இல்லே சம்புடத்திலே. அண்ணாவையே போய்க் கேட்டு வாங்கிக்கோ.''

''அண்ணா எங்கேம்மா தரப் போறு? நீ வாங்கிக் குடும்மா. அவன் போயிடப் போறான்'' என்று கண்ணன் வாசலில் ஒரு கண்ணோடு அழாக் குறையாகக் கெஞ்சினான்.

''உனக்கு மட்டும் வாங்கிக் குடுத்தாப் போறுமா? நேக்கு —

அப்படின்னிண்டு, அந்த லங்கிணி — உன் தங்கை — வந்து தின்னுட மாட்டாளா?''

''அவளுக்கும் வாங்கிக் குடும்மா. நான் வேண்டாம்கலே.''

அதற்குள் 'அண்ணா' எனும் அப்பாவே வந்துவிட்டார்.

''என்னடா, ரகனா, என்ன வேணும்?''

''ஒரே ஒரு ஐஸ்புரூட் அண்ணா! ஜில்லுனு ரொம்ப நன்னாயிருக்கும். ரோஸ் கலரா, ரொம்ப ஜோராயிருக்குண்ணா. சப்பச் சப்பக் கலரும் மாறிண்டே வரது....''

'' ஏண்டா, சாப்பிட்டுப் பார்த்தியா ? எனக்கே நாக்குலே ஜலம் ஊறறாப்பலே வர்ணிக்கறியே ?''

''சாப்பிட்டா, நான் ஏன் கேட்கறேன், அண்ணா? சேது, சீனு, விசாலி, வெங்கிட்டு எல்லாரும் வாங்கிண்டுட்டா. நான்தான் இன்னும்.....'' அவனுக்குத் தொண்டையை அடைத்துக் கொண்டு வந்தது.

''அதெல்லாம ஒண்ணும் வேணண்டா. நான் இப்ப எல்லாரையும் திருவிழாவுக்கு அழைச்சிண்டு போகப் போறேன்.''

''போண்ணா.''

''போண்ணாவாவது? பஸ்ட் க்ளாஸ் பட்டாணிக் கடலை, கடச் கட வறுத்தது வாங்கித் தரேன்.''

''அதொண்ணும் வேண்டாம் எனக்கு.''

''ஐஸ்புரூட் சாப்பிடக் கூடாது. உடம்புக்குச் சூடா அது.''

''போண்ணா. பட்டாணிக் கடலைதான் சூடா இருக்கும். ஐஸ் ஜில்லுன்னுதான் இருக்கும். ஜோரா, தித்திப்பா!''

''போடா, முட்டாள்! வேணும்னா அத்தையைக் கேட்டுப் பார். ஐஸ் ப்ரூட் சூடா, இல்லையான்னு. என்ன சொல்றா பார்.''

''ஆமாம், அத்தை நீ சொன்னதைத்தான் சொல்லுவா. உன்னை எதிர்த்துப் பேசுவாளா, நம் ஆத்திலே சாப்பிட்டிண்டு?''

''அவன் வாயிலே இரண்டு போடுங்கோ. தடிப் படவா, என்னமாப் பேசறான், பார்த்தேளா?'' — இது அம்மாக்காரி, அத்தைக்குப் பரிந்துகொண்டு.

''தோலை உறிச்சுடுவேன் பெரியதனமாப் பேசினா?''

கண்ணன் சிணுசிணுத்தான் — 'என் தோலை உறிச்சு, ஊறுகாய் போட்டு முடியறதுக் குள்ளே, ஐஸ் ப்ருட்காரன் போய்விட்டான்! எனக்கு அவ்வளவுதான் அதிர்ஷ்டம்.'

''கண்ணா, என்கிட்டச் சொல்லு. என்னடா வேணும் உனக்கு?'' என்று கேட்டுக் கொண்டே அவனுடைய அத்தை வந்தாள்.

''அத்தை, ஐஸ் சூடா, குளிர்ச்சியா? நீ சொல்லு.''

அத்தை வாயைத் திறக்கவேயில்லை.



"சொல்லு, அத்தை. ஐஸ் ப்ரூட் சாப்பிட்டா உடம்புக்குச் சூடாம். அண்ணா சொல்றா."

"அண்ணா தப்பாச் சொல்வானா?"

"அப்ப, உன்னை ஒண்ணு கேக்கறேன். நீ எப்பவும் முள்ளை முள்ளாலே எடுக்கணும், திருடனைத் திருடனாலே பிடிக்கணும் என்பியோல்லியோ?"

"ஆமாம், அதுக்கு?"

"சூட்டைச் சூட்டால்தான் எடுக்கணும். உடம்பிலே இருக்கிற சூட்டை ஐஸினுடெ சூட்டினாலே போக்கிடலாமில்லேயா?"

அத்தை வாஞ்சையோடு, "நீ என்ன இருந்தாலும் சமர்த்துடா, என் கண்ணு" என்றாள்.

"ஆமாம், சர்ட்டிபிகேட்தான் மிச்சம். எனக்கு ஐஸ் ஒருத்தரும் வாங்கித் தர மாட்டேங்கறா."

அவன் அழுகிற குரலில் பேசிக்கொண்டிருக்கும்போதே அவன் தங்கை வைதேகி, "எனக்கு ஐஸ்" என்று முழங்கிக் கொண்டே நுழைந்தாள்.

"ஐஸ் கிய்ஸெல்லாம் ஒருத்தருக்கும் கிடையாது. எல்லாரும் டிரஸ் பண்ணித் தயாராய்க் கோங்கோ. திருவிழாவுக்குப் போகலாம்."

"நான் ஒண்ணும் வரல்லே." — இது கண்ணன்.

"ரொம்ப நல்லதாப் போச்சு. நீ அத்தைக்குத் துணையா இரு வீட்டிலே."

"ஊஹூம், மாட்டேன். நான் சைக்கிளில் எங்கேயாவது சுத்தப் போறேன்."

"எக்கேடு கெட்டுப் போ." — அண்ணா.

"எதுக்குடா அப்படிச் சொல்றே கண்ணனைப் போய்?" — அத்தை.

இந்தப் பேச்சையெல்லாம் காதில் வாங்கிக்கொள்ளாமல் கண்ணன் சைக்கிளை எடுத்துப் படியிறங்கித் தெருவில் வைத்தான். வலது காலைக் குறுக்கே கொடுத்து 'குரங்குப் பெடலி'ல் சைக்கிளைச் செலுத்திக் கொண்டே சற்று நேரத்தில் தெரு முனை திரும்பிக் கண் பார்வையிலிருந்து மறைந்து விட்டான்.

தெரு நெடுக ஒரே இருள் கப்பியது. அத்தை விளக்கை ஏற்றிக் கொண்டு வந்து வாசலில் பிறையில் வைத்தாள். சைக்கிள் மணி ஓசை விடாது ஒலிப்பது கேட்டுத் தெருவைப் பார்த்தாள். கண்ணன் அல்ல. அப்படி மணியடித்துக் கொண்டு சென்றவன் மத்தியானம் வந்த பால் ஐஸ்காரன்தான்.

"ஒரே ஒரு ஐஸ் ப்ரூட்தான் இருக்கு—அஞ்சே பைசா — பால் ஐஸ் — வித்துப் போனா ப்ளாஸ்க்குக் காலி" என்று அவன் கூவியது அத்தையின் காதில் விழுந்தது. விளக்கைப் பிறையினுள் காற்றில் அணையாத வண்ணம் வைத்துவிட்டு, அவள் திண்ணை முகட்டுக்கு வந்தாள்.

"இந்தாப்பா."

"என்னையாம்மா கூப்பிடுறீங்க?"

"ஆமாம்ப்பா. ஒரு ஐஸ் கொடு."

சைக்கிளைத் தன்மீதே சாய்த்து நிறுத்திக் கொண்டு, பின் பலகையில் கட்டியிருந்த ப்ளாஸ்கைத் திறந்து, ஐஸ் ப்ரூட்டை எடுத்தான். ப்ளாஸ்கின் நீல உட்புறம் அவ்விருட்டிலும் பளபளத்தது.

"இந்தாங்கம்மா."

அவன் கை விரலில் படாதவாறு தன் கையினால் அதைப் பற்றினாள். இரண்டு சொட்டு உருகிக் கீழே விழுந்தது.

"இரப்பா ஒரு டபராக் கொண்டு வரேன்" என்று கூறி உள்ளே சென்று ஒரு டபராவும் ஐந்து பைசாவும் கொணர்ந்தாள். காசை வாங்கிக் கொண்டு சைக்கிள்காரன் நகர்ந்தான். அத்தை டபராவோடு உள்ளே வந்தாள். சுவாமி அலமாரியில் வைத்தாள். அவளது நெஞ்சம் எங்கோ பழைய நிகழ்ச்சியை நாடி ஓடியது.

ஆம், இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது. வயது பதின்மூன்று இருக்கும். கிராமாந்திரம். காலை ஒன்பதரை மணிக்கு முகூர்த்தம். அவள் கழுத்தில் தாலி ஏறிற்று. இரண்டு பந்திகள் சாப்பாடு ஆயிற்று.

பந்தலில் புருஷர்கள் மலைப் பாம்பு மாதிரி பெஞ்சுகளில் படுத்துக் கொண்டும், அரட்டையடித்துக் கொண்டும் இருந்தனர். கல்யாணப் பெண் — அவள்தான் — தலை வாரிப் பின்னிக் கொள்ளச் சம்பந்தி வீட்டுக்குப் போயிருந்தாள். அவள் ஜன்னல் வழியே தன் கணவனைப் பார்த்துக் கொண்டுதான் இருந்தாள்.

தெருவில் ஒரு ஐஸ் ப்ரூட்காரன் வந்தான். அந்தக் காலத்தில் அது ஒரு அதிசயம். அவளுக்குத் தெரிந்தவரை முதன் முதல் இவ்வூருக்கு ஐஸ் வந்ததே அப்போதுதான். சம்பந்தி வீட்டுப் பையன்கள் எல்லோரும் சப்பிச் சுவைத்துச் சாப்பிட்டனர். அவளுக்கு அதிசயமாகக்கூட இருந்தது. ஏனென்றால், அவளுடைய புருஷனும் ஒரு ஐஸ் ப்ரூட்டை வாயில் கவ்விச் சப்பினான். உருகி யுருகி அது சொட்டுவதும், இடது கையினால் நீரை ஏந்துவதும் — பந்தலில் ஒரே கோலாகலம்.

அவளுக்கும் உண்மையில் ஒரு ஐஸ் ப்ரூட் வாங்கிச் சாப்பிட வேண்டும் என்று நாஊறியது. அதற்கு ஏற்றாற்போல் அன்று மாலை ஔபாசனம் ஆகி இலை போடுவதற்காகக் கூடத்துக் கூட்டம் எல்லாம் திண்ணைக்கும், பந்தலுக்கும் போனபோது, அவள் கணவன் வெகு ஆசையோடு காதைக் கடிக்கிறாற்போல் குசுகுசுவென "நீ ஐஸ் ப்ரூட் சாப்பிட்டிருக்கியோ? ரொம்ப ஜோர். இன்னிக்குத்தான் எனக்கே கிடைச்சுது. ஒரு தரம் எப்பிடியாவது சாப்பிட்டுடு. நன்னா இருந்தது" என்றான் அவன்.

அவளும் இரகசியமாக அவனோடு பேசினாள். — "ஆமாம், நீங்க சாப்பிட்டேள், உறிஞ்சி யுறிஞ்சி. ஜன்னல் வழியாப் பார்த்திண்டேதான் இருந்தேன் நான் உங்களை."

"நானும் உன்னைப் பார்த்தேன் அப்ப. அதுனாலேதான் சொன்னேன். நீயும் ஒரு நாள் வாங்கிச் சாப்பிடு. ரொம்ப ஜில்லுனு, தித்திப்பா இருக்கு. நான் போனப்புறம், நான் சொன்னதுக்காகவாவது சாப்பிடு."

அவளுக்கு உவகை தாங்கவில்லை. "நீங்களும் என்னைப் பார்த்தேளா? எனக்குத் தெரியாதே."

"நான் ஜன்னல்லே உன் முகம் தெரிஞ்சதுலேந்து, திருட்டுத்தனமா உன்னையே தானே கவனிச்சிண்டிருந்தேன்?"

# மிக சக்தி வாய்ந்த புதிய G.E.C.
# ட்ரான்ஸிஸ்டர் போர்டபிள் BC 507

**மெயின்ஸ் ரேடியோவைப் போல் சப்தமுள்ளது**



இப்பொழுது ஜி.இ.ஸி. மெயின்ஸ் ரேடியோவைப் போல சப்தமுள்ள 3 பாண்ட் 8-ட்ரான்ஸிஸ்டர் போர்டபிள் ரேடியோவை புதிதாக தயாரித்து இருக்கின்றனர். அடையாளத்திற்கும் ஒலிக்கும் உள்ள விகிதத்தில் மிக்க அபிவிருத்தியடைந்தது. BC 507 தொலைவிலிருக்கும் வானொலி நிலையத்திலிருந்துங்கூட யாதொரு மாறுபாடின்றி உச்ச ஒலியை பிரதிபலிக்கிறது BC 507 ஹை-லோ-டோன் கண்ட்ரோல் பொருத்தப்பட்டு இருப்பதால் உங்கள் விருப்பத்திற்கு ஏற்றவாறு ஒலியை சரிபடுத்த உதவுகிறது. BC 507 மிகக் குறைவான மின்சார செலவில் வேலை செய்யும் 9-வோல்ட் எவரெடி 276 P. பாட்டெரி இதற்கு தகுந்தது. இன்றே உங்கள் டீலரிடம் வைத்துக் காட்டும்படி கேளுங்கள்.

விலை ரூபாய் 415/-
(மஹாராஷ்டிராவைத் தவிர)
பாட்டரியும், உள்ளூர் வரிகளும் தனி.

**G.E.C.**

நல்ல ஒலி
கேட்கும் உலகம்

தி ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி
ஆப் இந்தியா பிரைவேட் லிட்.

GEC.G.145 TA

---

# உங்கள்
# முதலும், வட்டியும்

சென்னை அரசாங்கத்தாரால்
உத்திரவாதமளிக்கப்படுகின்றன

## பிக்ஸட் டெபாசிட்டுகள்

கவர்ச்சிகரமான வட்டியில் ரூ 50,000/- வரை
இப்பொழுது ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

| | |
|---|---|
| ஒரு வருடமும், அதற்கு மேலும் ஆனால் 2 வருடங்களுக்குள்ளாக | — 6¼ % |
| 2 வருடங்களும், அதற்கு மேலும் ஆனால் 3 வருடங்களுக்குள்ளாக | — 6½ % |
| 3 வருடங்களும், அதற்கு மேலும் ஆனால் 5 வருடங்களுக்குள்ளாக | — 6¾ % |
| 5 வருடங்களும், அதற்கு மேலும் ஆனால் 7 வருடங்களுக்குள்ளாக | — 7¼ % |
| 7 வருடங்களும், அதற்கு மேலும் | — 7½ % |

## மதராஸ் இண்டஸ்ட்ரியல்
## இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட்

எல். எல். ஏ. பில்டிங்ஸ், 150--, மவுண்ட் ரோடு, மதறாஸ்-2
போன்: 82026 கிளை : 1231, தெற்கு மெயின் தெரு, தஞ்சாவூர்

டி. வி. நரஸிம்மன், எம். ஏ., ஸி ஏ. ஐ. ஐ. பி.
செக்ரட்டரி

Criterion-MII-927-T

# பத்து நிமிடங்கள்





பரணி

1. பன்மொழி வல்லுநர் ஒருவர் சுதந்திர பாரதத்தில் சில காலம் நிதிமந்திரியாகப் பணியாற்றியிருக்கிறார். தெரிகிறதா இவரை?

2. சீட்டாட்டம் எந்த நாட்டிலிருந்து உலகெங்கும் பரவியது?

எகிப்திலிருந்து, இந்தியாவிலிருந்து, சீனாவிலிருந்து.

3. ஆழ்கடலின் சராசரி ஆழம் என்ன?

இரண்டரை மைல்கள், மூன்று மைல்கள், மூன்றரை மைல்கள்.

4. சர்தார் உஜ்ஜல்சிங் சென்னையின் எத்தனாவது கவர்னர்?

5. அரபிக் கடலில் உள்ள லகதீத் தீவுகள் மினிகாய், அமின்திவி தீவுக் கூட்டங்களின் தலைநகரம் (Head Quarters) இத்தீவுகளுக்கு வெளியே வெகு தூரத்தில் உள்ள ஒரு நகரம்! நகரம் எது?

6. சுவர்க்கடிகாரத்தின் அங்கமான லோலகம் (பெண்டுலம்) முதலில் எதற்குப் பயன்படுத்தப்பட்டது?

7. கவியரசர் ரவீந்திரரின் சிறுகதைகள் சிலவற்றை ஆங்கிலத்திலிருந்து அழகுறத் தமிழ்ப்படுத்தியுள்ள கவிஞர் யார்?

8. ஆதிமனிதன் ஆதாமின் முதல் பிள்ளையின் பெயர் என்ன?

9. சுவாசிப்பதற்காக நீர் மட்டத்துக்கு வரும் திமிங்கிலத்தால், அதிகபட்சம் எத்தனை நிமிடங்கள் நீருக்கடியில் இருக்க முடியும்?

10. காலஞ்சென்ற ஒரு சர்வாதிகாரி. இவரது பொழுது போக்கு வயலின் வாசித்தல்; சாலைகளில் காரைக் கன வேகமாக ஓட்டிச் செல்வதில் விசேஷ வெறி உள்ளவர் இவர். யார் இவர்?

விடை 96-ஆம் பக்கம் பார்க்க.





---

இப்போதும் அத்தைக்கு உடம்பு புல்லரித்தது. அது ஒரு காலம். அவள் வாழ்க்கையின் இன்பம் அனைத்தையும் நுகர்ந்தது, மேற்சொன்ன சின்னஞ் சிறு உரையாடலின் போதுதான். சற்று நேரத்தில் இலை போட்டார்கள். சாப்பாடு ஆயிற்று. கல்யாணமெல்லாம் ஆகி விருந்தினர் புறப்பட்டனர். அடுத்த இரண்டே நாட்களில் அவளது வாழ்வும் இசைகேடாக முடிந்து விட்டது. கல்யாணப் பந்தல்கூடப் பிரிக்கவில்லை. மாப்பிள்ளைப் பையனுக்கு மாரடைப்பு என்றார்கள். எல்லாரும் ஓடினார்கள். அவளுடைய அம்மாவும் அப்பாவும் வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொண்டார்கள்.

'அடி பெண்ணே, இப்படிப் போயிட்டியேடி, அநியாயமாய்' என்று பெற்றவர்கள் ஒப்பாரி வைத்தபோது அவளுக்கு அழக் கூடத் தெரியவில்லை. அம்மா வந்து குங்குமத்தை அழித்து விட்டுச் சென்று, அப்பால் உட்கார்ந்து, கதறிக் கதறி அழுதாள். அவளது வாழ்வே ஒரு மாதிரியாகப் போய் முடிந்து விட்டது. பெற்றவர்கள் போன பின்பு அன்புத் தமையன் வீட்டில் அவன் குழந்தைகளுக்கு — கண்ணனுக்கும் வைதேகிக்கும் அத்தையாக ஒன்றிப் போனாள்.

டபராவைத் தொட்டுப் பார்த்தாள். கை நரம்புகள் சில்லிட்டுப் போனாற் போல் இருந்தது. டபராவுக்கு வெளிப்புறம் வேர்த்திருந்தது. அவள் அதைக் கையில் எடுத்தாள். நெஞ்சில் அலைகள்:

குழந்தைகளுக்குக் கொடுக்கலாம். ஆனால் திருவிழாவெல்லாம் பார்த்துவிட்டு, எப்பொழுது வருவார்களோ? அதற்குள் உருகிப் போய்விடுமோ, என்னவோ? உருகிவிட்டால், அப்புறம் என்ன இருக்கிறது? அவன் — ஐஸ்காரன் கொண்டு வந்த மாதிரி தெர்மாஸ் பிளாஸ்கிலே போட்டு வைக்கலாம். உருகாமல் இருக்குமோ என்னவோ?

உள் அலமாரி மேல் தட்டில் இருந்த ப்ளாஸ்கை எடுத்து வந்தாள். ஐஸ் ப்ரூட்டை எடுத்து மெதுவாக அதில் நுழைத்துக் கார்க்கை அழுத்தி மூடினாள். வெளித் திருகு மூடியையும் எடுத்து மூடினாள். அவள் கண்கள் டபராவைக் கவனித்தன. ரோஸ் நிறமாக உருகிய திரவம் சிறிது இருந்தது. அவள் அடித் தளத்தில் யாரோ பேசுவது போல் குரல் கேட்டது. ஆம், அவர் குரலேதான். அதே வாசகம்தான். ஔபாசன தினத்தன்று சொன்ன சொற்களே:

''ஒரு தரம் எப்படியாவது சாப்பிட்டுடு. நன்னா யிருந்தது.''

மீண்டும் அதே சொற்கள். கடைசி வார்த்தைகள்: ''நான் சொன்னதற்காகவாவது நான் போனப்புறம் ஒரு தரம் சாப்பிட்டுடு.''

அவளுக்கு இதயம் எங்கோ வானில் பறப்பது போல் இருந்தது. எத்தனை ஆசையோடு சொன்ன சொற்கள்! கரத்தை எத்தனை வாஞ்சையோடு பற்றிக் கொண்டு, அன்பொழுகக் கூறிய சொற்கள்! 'எனக்காகவாவது' என்னும்போது எத்தனைய பாசமும் நேசமும் குரல் கொடுத்தன!

அவளது ஆசை நாயகனின் அன்புக் கட்டளையை நிறைவேற்ற முடியாமலேயே போய் விட்டது இன்றுவரை.



"நம்ம ஆபீஸ் நாடகத்திலே நீங்கள் லேடி டைப்பிஸ்டாக நடிக்கணும்."
"அதிலே வேறே நடிக்கச் சொல்றேளா?"

---

டபராவில் இருந்த ஐஸ் ப்ரூட்டைத் தன் வாய்க்கு நேரே பிடித்தாள். கை நடுக்குற்றது. நெஞ்சு கொந்தளித்தது. இதே ரோஸ் நிறத் தண்ணீர்தான் அன்றும் அவர் வாய் உதட்டிலிருந்து சொட்டியது. இடது கையினால் அந்தச் சொட்டுக்களை ஏந்திக் கொண்டே அவர் சாப்பிட்ட அழகு!

ஆஹா, அந்த அமுதம் — அவர் வாயிலிருந்து உருகிச் சொட்டிய அமுதம் தான் இதுவும் — ரோஸ் வண்ணம் கூட ஒன்றுதான்.

வாயில் விட்டுக் கொண்டாள். ஜில்லென்று தொண்டையைக் குளிர வைத்துக் கொண்டே திரவம் உட்சென்றது. ஏதோ கோயில் தீர்த்தம் பருகினவள் போல், கையில் இரு சொட்டு ஏந்திக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். புருஷன் முத்தமிட்டுத் தந்த உதடு பட்டு வந்த அமுதம் போல் அவளை மெய் மறக்கச் செய்தது அது.

"அத்தை!"

திடுதிப்பென்று, தூக்கத்திலின்று விழிப்புற்றவள் போல் அவள் எழுந்தாள்.

வந்து நின்றவன் கண்ணன்தான். அவன் விழிகளில் வியப்பும் திகைப்பும் குடிகொண்டிருந்தன. உண்மையாகவே, நடக்கக்கூடாதது நடந்து விட்டாற் போன்றதோர் உணர்ச்சியுடன், "என்ன இது அத்தை?" என்று கேட்டான்.

மீண்டும் இவ்வுலகுக்குத் திடுக்குற்றுத் திரும்பி வந்த முத்திரையில் அத்தை விழித்தாள்.

"நீயெல்லாம் இப்படிப் பண்ணலாமா?"

"என்னடா, கண்ணு?"

"நான் அப்பவே வந்துட்டேன் அத்தை. நீ பண்ணினது எல்லாத்தையும் பார்த்திண்டு தான் இருந்தேன்."

அத்தையின் கண் இமைகளில் கூட இரு சொட்டு ஐஸ் ப்ரூட் ரசம் பளபளத்தது.

"நீ ஐஸ் ப்ரூட் சாப்பிடலாமா அத்தை?"

"........"

"சொல்லு அத்தை. அதுவும் எனக்கு வாங்கிக் கொடுக்காமெ, நீ சாப்பிடலாமா?"

அத்தையின் குரல் நடுங்கியது. இருந்தாலும் சமாளித்தாள். "இந்தாடா கண்ணு, உனக்கு இல்லாமையா? ப்ளாஸ்கில் வச்சிருக்கேன் உன் பங்கை."

"அதெல்லாம் சரி. நான் கேட்டதுக்குப் பதில் சொல்லு. அத்தை." அவன் கையும் மெய்யுமாகக் குற்றவாளியைக் கண்டு பிடித்த வெற்றிப் பெருமிதத்தில் பேசினான்.

"சமர்த்தோல்லியோ? அவாள்ளாம் வரத்துக்குள்ளே சாப்பிட்டுடு. இல்லாட்டா, வைதேகி வேறே பங்குக்கு வந்துடுவா."

கண்ணன் ப்ளாஸ்கில் இருந்ததைப் பருகினான்.

சற்று நேரம் கழித்து அப்படியே தூங்கிப் போய்விட்டான். அவன் நெற்றியில் விபூதியை எடுத்து இட்டுவிட்டு, அப்படியே தன் நெற்றியிலும் ஒரு கீற்றுத் தீற்றிக் கொண்டாள் அத்தை.

"அண்ணு!" — கூப்பிட்டுக் கொண்டே வந்தவன் கண்ணன்தான்.

"என்னடா சமாசாரம்?"

கண்ணன் சாய்வு நாற்காலியின் காலருகே சென்றமர்ந்தான். ஏதோ புதிர் விரிக்கிறாற் போலத் தொடங்கினான்.

"அண்ணு, நான் ஒண்ணு சொல்றேன், நீ ஒருத்தர்கிட்டேயும் சொல்லப்படாது."

அண்ணு பேசவேயில்லே.

"நம்ம அத்தையைப் பத்தின சமாசாரம். உன் கிட்ட மட்டும் சொல்றேன். நீ யார் கிட்டேயும் சொல்லப்படாது, என்ன?"

"தடியா, சொல்லப் போறியா இல்லியாடா? என்னவோ பெரிய ரகசியம் சொல்லப் போகிறவன் மாதிரி, பெரிய பீடிகை போடறான்!"

"நான் சொன்னு, நீ நம்பலே மாட்டே'ண்ணு."

எரிச்சலாக வந்தது பிள்ளையின் தகப்பனுக்கு. "நீ ஒண்ணும் சொல்ல வேண்டாம், வேண்டாம், போடா."

"இல்லேண்ணு, சொல்லிடறேன்."

அவன் தொடங்கினான் — "அன்னிக்கொரு நாள், திருவிழாக்கு நீ அம்மா, வைதேகி, மூணு பேரும் போயிருந்தேளே, ஞாபகம் இருக்கா?"

"ஆமாம், நீ கூடச் சைக்கிள் எடுத்திண்டு ஊர் சுத்தப் போனியே?"

"அன்னிக்கு அண்ணு, நான் திரும்பி வரப்போ, ஆத்திலே அத்தை மட்டும் தனியா இருந்தாளோல்லியோ?"

'இல்லையோ, இல்லையோ' என்று தொணதொணவென்று உறுதிப் படுத்திக்கொள்ளாமல் சிறுவர்கள் எதுவும் சொல்ல மாட்டார்கள்.

"ஆமாம், தனியா இருந்தா அத்தை. மேலே சொல்லுடா."

இத்தருணம் "கண்ணு! கொஞ்சம் இங்கே வந்துட்டுப் போ. நீதான், அண்ணு, கொஞ்சம் அவனை இங்கே அனுப்பேன்" என்ற குரல் வரவே, கண்ணன் எழுந்து உள்ளே சென்றான். கூப்பிட்டது அத்தைதான்.

"என்னோடெ கொல்லைலே வா. புடலங்காய் பறிக்கண்டு வரணும். பச்சைப் பாம்பு மாதிரி என்னவோ தென்பட்டது" என்று அத்தை அழைக்கவே, உடன் சென்றான்.

இருவரும் தோட்டத்துக்குள் சென்றனர். அத்தை இடுப்பிலிருந்து பத்துக் காசை எடுத்தாள். "கண்ணா, இந்தா வச்சிக்கோ" என்று அவனிடம் காசை நீட்டினாள்.

"எதுக்கு அத்தை?"

"வச்சிக்கோடா, கண்ணா. போய், பால்கோவா வாங்கிச் சாப்பிடு."

"சரி, அத்தை."

"என்னைப் பாரு. நீ சமர்த்தோல்லியோ?" மோவாயைப் பற்றிக் கண்ணனைக் கெஞ்சாக் குறையாகப் பேசினாள் — "நீ அண்ணா கிட்டெல்லாம் என்னைப் பத்திக் குத்தமாச் சொல்லலாமா?"

"சொல்லக் கூடாது."

"பின்னே, இருவீரா அன்னிக்கி அத்தை என்னவோ பண்ணினான்னு என்னைப் பத்தி ஆரம்பிக்கிறயே."

"ஆமா'த்தை. நீ அன்னிக்கு ஐஸ் ப்ரூட் சாப்பிட்டயோல்லியோ, ஒருத்தருக்கும் தெரியாமெ?"

அத்தையின் குரல் இறங்குகிறது. — "ஆமாம், கண்ணா."

"நீயெல்லாம் ஐஸ் ப்ரூட் வாங்கித் திங்கலாமா?"

"திங்கப்படாது."

"தப்புத்தானே?"

"தப்புத்தான்."

"ஏன் பின்னே வாங்கித் தின்னே?"

அத்தை விழிக்கிறாள். அவனும் விழிக்கிறான்.

அத்தை பேச்சை மாற்ற முயற்சி செய்கிறாள். — "நான் உனக்குத்தானே ஐஸ் ப்ரூட் வாங்கிப் பிளாஸ்கிலே போட்டு வச்சேன்?"

"ஆமாம்."

"அதனாலே, இனிமேல் சொல்லப்படாது யார் கிட்டேயும்."

ஒருவாறு தப்பியாயிற்று என அத்தை பெருமூச்சு விட, மருமகன் கதவு வழியே பத்துக் காசோடு பால் கோவா வாங்கித் தின்னப் புறப்பட்டான்.

கண்ணன் பெரிய ஆளாகப் போய்விட்டான். இன்றைக்குச் சொல்லிவிடுவேன், இப்பொழுது சொல்லப் போகிறேன் என்றெல்லாம் பயம் காட்டிக் காட்டி அத்தையிடம் பத்துப் பதினைந்து என்று — பைசா தான் — கறந்தான். அத்தையும் பயந்து, பயந்து அவன் கேட்கக் கேட்கக் கொடுத்தாள். அதுவே ஒரு பெரிய தொகையாகப் போய் விட்டது.

இப்போது அவனுடைய 'ரேட்' உயர்ந்தது.

"அத்தை எனக்கு உன் பத்துப் பைசா வேண்டாம்."

"பின்னெ, என்னடா வேணும் கண்ணா?"

"எனக்குக் கால் ரூபாயாவது வேணும்."

"இருபத்தைஞ்சு பைசாவா?"

"ஆமாம்." கண்டிப்பாகவே பேசினான்.

"நான் அத்தனைக்கு எங்கேடா போவேன்? என் கண்ணனல்லியோ நீ?"

"உன் கண்ணா யிருந்தால் கால் ரூபா தரப்படாதோ?"

"ஏண்டா, அசடு. என்கிட்டே ஏதுடா காசு? உங்கண்ணா காசுதானேடா நான் எடுத்துத் தரலாம்."

"அதுவாவது எடுத்துக் கொடேன்."

"அண்ணாவுக்குத் தெரியாமெ எடுக்கலாமா? சொல்லு?"

"பத்துப் பைசா மட்டும் எடுக்கலாமா அண்ணாக்குத் தெரியாமெ?"

அத்தை கையைப் பிசைந்தாள். அவன் ஓடினான். "நான் இன்னிக்கு நிஜமாவே சொல்லிடப் போறேன்."

முன் போலவே அவன் தொடங்கினான்.

"சொல்லித் தொலை" — எரிச்சலோடு 'அண்ணா.'

"அன்னிக்கு அத்தை நான் திரும்பி வரப்போ ஐஸ் ப்ரூட்காரனைக் கூப்பிட்டு ஒரு ஐஸ் ப்ரூட் வாங்கினாடா..."

"அப்புறம்?" — அண்ணா'வின் குரலில் ஒரு வேகம் தொனித்தது. சமையற்கட்டி

## எங்கள் தலைவர்



அஞ்சாத நெஞ்சம் வேண்டின்
அசையாத ஞானம் வேண்டின்
ஆடாத கொள்கை வேண்டின்
ஓடாத எண்ணம் வேண்டின்
கெஞ்சாத வாழ்க்கை வேண்டின்
கேடிலா நலன்கள் வேண்டின்
கேளாத கலைகள் வேண்டின்
மாளாத உழைப்பு வேண்டின்
நாணாத செயல்கள் வேண்டின்
கோணாத குணங்கள் வேண்டின்
நஞ்சான பேர்கள் யாரும்
நடுங்குமோர் நடத்தை வேண்டின்
செஞ்சாது வார்த்தை வேண்டின்
சோர்விலாத் தன்மை வேண்டின்
மிஞ்சிடும் அன்பு கொண்ட
தலைவர் ராஜாஜி காண்க.

— ர. வரதன்

கிருந்து அம்மாவும் வந்து நின்றாள். வைதேகியும் வந்துவிட்டாள், தன் தமையனின் புதிரைக் கேட்க. உள்ளே அத்தை கையைப் பிசைந்து கொண்டு கதவிடுக்கு வழியே பார்த்துக் கொண்டு நின்றாள்.

கண்ணன் மென்று எச்சிலை விழுங்கினான்.

''சொல்லேண்டா.'' — கத்தினார் அத்தையின் அண்ணா.

''அத்தை வந்து....... அத்தை வந்து...''

'அண்ணா' எழுந்து நின்றார். வெறி பிடித்தவர் போலக் கத்தினார்.— ''சொல்லேண்டா.''

''அத்தை வந்து — என் கண்ணாலேயே பார்த்தேன். — ஐஸ் ப்ரூட்டை உருக வச்ச வாயிலே வைத் திண்டா...''

கூடமே அதிரக் கூவினார் — ''என்ன சொன்னே, ராஸ்கல்!''

கண்ணனும் பயந்து போனான். ''நிஜமாத்தான் அண்ணா. அத்தை ஐஸ் ப்ரூட் சாப்பிட்டுண்டிருந்தா.''

'அண்ணா' அப்படியே பாய்ந்தார். கண்ணனுடைய இரண்டு கைகளையும் தம் இடது கரத்தினால் சேர்த்துப் பிடித்தார். கண்ணன் பதறிப் போனான். அவனுடைய தாயும் என்ன நடக்கப்போகிறதோ என்று துடித்துக்கொண்டு நின்றாள். வைதேகி அழ ஆரம்பித்தாயிற்று. 'அண்ணா'வுக்கு அத்தகைய கோபம் வந்து அவள் பார்த்ததில்லை.

''சொல்லுடா, அத்தை ஐஸ் ப்ரூட்டானே தின்னா? இன்னொரு தரம் சொல்லுடா. நாக்கை நறுக்கிடறேன். தடி ராஸ்கல். பெரியவாளைப் பத்தி இன்னார் இன்னது பேசறதுங்கறது கிடையாதா? உன்னைத் தொலைச்சேன் இன்னிக்கி.'' — இப்படிக் கத்திக் கொண்டே காலால் அவன் முதுகில் நாலு உதை, கையால் நாலு அறை விட்டார்.

கண்ணன் சுருண்டு விழுந்து விட்டான். ''விழுந்துட்டான் கிழே. இனிமேயாவது விட்டுடுங்கோ. அடிக்காதீங்கோ'' எனக் கெஞ்சினாள் கண்ணனின் தாய்.

'அண்ணா' வாசலுக்குச் சென்றார். அவரோடு ''எதுக்காக இப்படி அடிக்கக் கொன்னேள்?'' என்று கேட்டுக் கொண்டே அம்மாவும் சென்றாள்.

## புதிய கதை!




'அண்ணா'வின் உணர்ச்சி சற்றே மட்டுப் பட்டது. ''நான் அடிச்சது தப்புத் தான்.'' — 'அண்ணா'வே பேசினார்.

''தப்பா?''

''ஆமாம், என்னவோ ஒரு வெறியிலே அடிச்சுட் டேன்.'' தாயாருக்கு வியப்பாக இருந்தது இந்தப் பேச்சு.

'' அடிச்சிருக்க வேண்டாம். நம்ப கண்ணன் கண்ணால் பார்க்காததைச் சொல்ல மாட்டான். இன்னித் தேதிக்கு அவன் பொய் சொல்லக் கத்துண்டது இல்லே.''

'' என்ன சொல்றேள் நீங்க?''

'' ஆமாம், கண்ணன் பார்க்காமே சொல்ல மாட்டான். எனக்குத்தான் சகோதரபாசம் கேட்கலே. என் தங்கை என்னத்தை அனுபவிச்சிருக்கா? பதிமூணு வயசுலே கல்யாணப் பந்தல்லேயே அறுத்துப் போயாச்சு. அன்னிலேந்து தினமும் — இந்த இருபது இருபத்திரண்டு வருஷமும் — ராத்திரி அரைப் பட்டினிதான். ஊர்லே இருக்கற ஏகாதசி, சோமவாரம், குருவாரம், கிருத்திகை, சனிக்கிழமை — இப்படி அத்தனை விரதமும். சின்ன வயசிலேந்து முழிச்ச முழிச்ச அவளோட வாழ்க்கையே எப்படிப் போயிடுத்து பார்த்தியா? குழந்தை மாதிரி ரோட்டிலே போற ஐஸ் ப்ரூட்டை வாங்கிச் சாப்பிடற அளவுக்கு அவ்வளவு தூரம் கஷ்டப்பட்டுட்டாள்னு நெனச்சுண்டேன். அந்த வெறியிலே அடிச்சுட்டேன்.''

இருவர் கண்களிலும் நீர் பளபளத்தது.— இது திண்ணையில். உள்ளே—

விசும்பி விசும்பி அழுத கண்ணனின் தலை அத்தையின் மடியில் இருந்தது. மிகுந்த அன்போடு அவன் தலையைக் கோதியவண்ணம் இருந்தாள் அத்தை.

தேம்பித் தேம்பிக் கொண்டே கண்ணன் சொன்னான் — ''அத்தை, நான் இனிமே உன்னைப் பத்தி அப்படியெல்லாம் யார்கிட்டேயும் சொல்ல மாட்டேன்.''

அத்தையும் தேம்பினாள். அன்போடு அவனை அணைத்தவாறு பேசினாள். ''கண்ணா! நானும் இனிமேயெல்லாம் ஐஸ் ப்ரூட் வாங்கிச் சாப்பிட மாட்டேன்!''



## 2% மட்டும்

# அக்கோப்ரூ:ப்

**உபயோகித்தால் கட்டடங்களிலும், நீர் சேமிப்பு தொட்டிகளிலும் கசிவில்லாமல்**

**100% பாதுகாப்பு பெறலாம்!**



அக்கோப்ரூ:ப்
சுவரின் மேல் பூச்சு
மற்றும் காரைப்பூச்சு
வேலைகளுக்கு



அக்கோப்ரூ:ப்
ஈரம் தங்கக்கூடாத
நடைபாதைகளுக்கும்,
டெர்ரஸ் மாடிகளுக்கும்



அக்கோப்ரூ:ப்
அடித்தளத்தரைகளுக்கும்
சுவர்களுக்கும்



அக்கோப்ரூ:ப்
நீர்த்தொட்டிகளுக்கும்,
நீர்வாயர் மற்றும்
குழாய்களுக்கும்

**ஒழுக்கு, கசிவு, ஈரம் இவற்றைத் தடுக்க அக்கோப்ரூ:ப் உபயோகியுங்கள்**

அக்கோப்ரூ:ப்
—சிமெண்டுக்கு நீர்க்கசியாத்
தன்மையை அளிக்கும்
ஏஸிஸி யின் கலவைப்
பொருள்—20 கிலோ டிரம்
களிலும் 1 கிலோ அட்டைப்
பெட்டியிலும் கிடைக்கிறது.
உங்களருகில் உள்ள,
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங்
கம்பெனி ஆ:ப் இந்தியா
லிமிடெட் அவர்களது கிளை
களிலிருந்தோ, அவர்களது
விநியோகஸ்தர்களிட
மிருந்தோ பெறலாம்.







**இலவச தொழில்நுட்ப ஆலோசனை**

கான்க்ரீட் அஸோஸியேஷன் ஆ:ப் இந்தியாவின் பம்பாய், புது டில்லி, கல்கத்தா மற்றும் ஹைதராபாதில் உள்ள இஞ்ஜினியரிங் நிபுணர்களின் தொழில்நுட்ப ஆலோசனையை இலவசமாகக் கேட்டுப் பெறுங்கள்.

தி அஸோஸியேடட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆ:ப் இந்தியா லிமிடெட்



ஏஸிஸி
தலைசிறந்த தயாரிப்புகளின் சின்னம்

JWT.CMI 4357

# வட்ட மேஜை

■ பெர்க்லி தமிழ்ச் சங்கம்
■ பயன் என்ன?
■ ஜனதா ஸெட்
■ தாகூர் ஞாபகார்த்தக் கலை அரங்கு

ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி அவர்கள் பெர்க்லியின் அருகிலுள்ள ஸான் ஃபிரான்ஸிஸ்கோவில் கச்சேரி செய்யப் போகிறார்கள் என்பது எங்களுக்குத் தெரிய வந்தது. உடனே பெர்க்லி தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்த நாங்கள் (கிட்டத்தட்ட அனைவரும் ஆண்கள். இருந்த ஒன்றிரண்டு பெண்மணிகளுக்குச் சமைக்கத் தெரியாது!) நம்மாலானதைச் சமைத்து அவர்களுக்கு விருந்து படைக்க வேண்டும் என்று தீர்மானித்தோம். சங்க அங்கத்தினர்களைப் பல பிரிவுகளாக்கி, ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு பணியைக் கொடுத்தோம்.

ஸான் ஃபிரான்ஸிஸ்கோவில் கச்சேரிக்கு ஏற்பாடு செய்தது 'அமெரிக்கன் சொஸைட்டி ஃபார் ஈஸ்டர்ன் ஆர்ட்ஸி'ன் தலைவரான திரு ஸ்க்ரிப்ஸ். எங்கள் விருந்துக்கு இடம் தந்து உதவியது இங்குள்ள ஒரு தேவாலயம். எனவே, திரு ஸ்கிரிப்ஸ், ஸ்ரீமதி ஸ்க்ரிப்ஸ், 'சர்ச்' பிரதிநிதியாக ஐந்து பேர், ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி குழுவினர் ஒன்பது பேர், இங்குள்ள தமிழர்கள் சுமார் முப்பது பேர். ஆகமொத்தம் எண்ணிக்கை நாற்பதுக்கு மேல் உயர்ந்து விட்டது!

'மெனு' என்ன தெரியுமா? மோர்க் குழம்பு, தக்காளி ரஸம், தேங்காய் சாதம், எலுமிச்சம்பழ சாதம், தயிர் சாதம் உருளைக் கிழங்கு — வெங்காயம் ரோஸ்ட், பாதாம் கீர், பச்சடி! நாவில் நீர் ஊறுகிறதா? உங்களுக்கு ஊறாமல் இருக்கலாம். ஆனால் அமெரிக்காவில் இருந்து பார்த்தால் தெரியும். என்ன சமைப்பது என்று தீர்மானித்த உடனேயே எங்களுக்குப் பசிக்க ஆரம்பித்து விட்டது!

நவம்பர் 1ம் தேதியன்று நானும் எனது நண்பர்கள் இருவரும் ஸான்ஃபிரான்ஸிஸ்கோ விமான நிலையத்துக்குச் சென்று ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி ஸ்ரீ சதாசிவம் மற்றும் இசைக் குழுவினரை நேரில் வரவேற்றோம். பிறகு அவர்கள் அனைவரும் ஸ்டான்ஃபோர்டில் கச்சேரி செய்வதற்காகச் சென்று விட்டார்கள். நான் அவர்களை நவம்பர் 3ம் தேதி விருந்துக்கு அழைத்துவிட்டுப் பெர்க்லி திரும்பினேன். நம்மூர் மனிதர்களைச் சந்திப்பதில் என்ன மகிழ்ச்சி தெரியுமா?

காரியங்கள் 'மளமள'வென்று நடந்தன. இமைப் பொழுதில் நவம்பர் 3ந் தேதி வந்து விட்டது! அன்று மாலை நான், எனது நண்பர்கள் இருவர் ஆக மொத்தம் மூன்று பேர் தனித் தனிக் கார்களில் ஸான் ஃபிரான்ஸிஸ்கோ சென்றோம். அவர்கள் அனைவரும் தயாராக இருந்தனர். அவர்களை அழைத்துக் கொண்டு பெர்க்லி திரும்பினோம். சிறிது நேரம் அனைவரும் பேசிக் கொண்டிருந்துவிட்டு உணவருந்த ஆரம்பித்தோம். உணவு மிகவும் அருமையாக இருந்தது. திரு ரங்கராஜன் என்பவர்தான் இதன் பின்னணியில் இருப்பவர். இவர் செய்த ரஸம் அன்றைக்குச் சிகரமாக விளங்கிற்று!

எல்லோரும் உணவருந்திய பின், திரு ஸ்கிரிப்ஸ், திரு சதாசிவம், திரு ரூபின் ஆகியோர் ரத்தினச் சுருக்கமாக உரையாற்றினார்கள். அதன்பின் நாங்கள் கனவிலும் எதிர்பாராத நிகழ்ச்சி ஒன்று நடந்தது. திரு சதாசிவம் சைகை செய்ய ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி பாட ஆரம்பித்தார். நாங்கள் அனைவரும் மந்திரத்தால் கட்டுண்டதுபோல் இருந்தோம். பக்கவாத்தியங்களின்றி அவர் குரல் இனிமை எங்களை அப்படியே மயக்கியது. பிறகு எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி இன்னுமொரு பாட்டுப் பாடினார்கள். எனது வாழ்விலேயே விலைமதிப்பற்ற சிறிது நேரம் இருக்குமானால் அது இந்த நிமிஷங்களே. அனைவரும் எனது கருத்தில் ஒன்றுபட்டனர்.

பிறகு கலைய மனமில்லாமல் அனைவரும் கலைந்தோம். அவர்களை ஸான் ஃபிரான்ஸிஸ்கோவில் கொண்டுவிட்ட பிறகு நேரம் ஊர்வதாகத் தோன்றியது. அடுத்த நாள் அல்லவா கச்சேரி! எல்லோரும் நவம்பர் 4ந் தேதி மாலையை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம்!

மாலை எட்டு மணிக்குக் கச்சேரி. நாங்கள் அனைவரும் சற்று முன்பே சென்றுவிட்டோம், இடம் பிடிக்க! ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி அவர்கள் வந்ததுமே சபை களை கட்டிவிட்டது. அவர் தம்மை மறந்து பாடத் தொடங்கினார். அங்கிருந்தோர் பலருக்குக் கர்நாடக சங்கீதம் தெரியாது. ஆனால் தேனின் ருசியை அறிவதற்கு அது தேன் என்று தெரிய வேண்டும் என்பதில்லையே! அனைவரும் இசையில் மயங்கி இரண்டு மணி நேரம் போனதே தெரியாமல் அமர்ந்திருந்தனர். அங்கிருந்த ஒவ்வோர் இந்தியனின் நெஞ்சும் அன்று பெருமையால் விரிந்தது!

ஆரம்பம் என்றால் முடிவு இருக்கத்தானே செய்யும்? அடுத்த நாள் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி குழுவினர் காலை ஒன்பதரை மணிக்குக் கான்ஸாஸ் ராஜ்யத்துக்குப் புறப்பட்டுச் சென்றனர். எங்கள் நெஞ்சிலே நீங்காத நினைவுதான் மிஞ்சியது. இவ்விரு நாட்களும் என்றும் மறக்க முடியாத நாட்களாகும்.

பெர்க்லி, அமெரிக்க ஐக்கிய நாடுகள்
19–11–66

ரா.வே.க. மணி,
தலைவர்,
பெர்க்லி தமிழ்ச்சங்கம்

'ஆந்திரப் பத்திரிகா' இதழ் ஒன்றில் தமிழக மாதர்களைப் பாராட்டி வி. எஸ். ஸாக்தாங்கர் என்ற மகாராஷ்டிரிய எழுத்தா

## பத்து நிமிஷங்கள் — விடை :

1. தேஷ்முக் (சிந்தாமண் த்வாரகாநாத் தேஷ்முக்) இந்திய ரிசர்வ் பாங்கியின் முதல் இந்திய கவர்னராகச் சிறப்பாகப் பணியாற்றிய பெருமையும் இவரைச் சேரும்.
2. இந்தியாவிலிருந்து.
3./ இரண்டரை மைல்கள்.
4. 51வது (சென்னையின் முதல் கவர்னர் ஸீட் பிரபு.)
5. கோழிக்கோடு.
6. மனிதனின் நாடித் துடிப்பைக் கணக்கிடு வதற்கு.
7. மகாகவி பாரதியார்.
8. கெய்ன் (Cain)
9. இருபது நிமிடங்கள்.
10. மூலோலினி.

---

னர் ஒரு கட்டுரை எழுதியிருந்தார். இதைப் பிரசுரித்த ஆசிரியர், "எல்லாத் தமிழர்களும் இந்தக் கட்டுரை ஆசிரியரின் கருத்துக்களுடன் ஒத்துப் போக மாட்டார்கள்" என்று அபிப்பிராயக் குறிப்பும் வெளியிட்டிருந்தார். இந்தக் குறிப்பு ஓர் ஆந்திரப் பெண்மணிக்கு ஊக்கமளித்து, தமிழக மாதர்களைப் பற்றித் தாழ்வாக மதிப்பிட்டு எழுதத் தூண்டியிருப்பதாகத் தோன்றுகிறது. அவர் எழுதிய கட்டுரை இதே பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது. இந்தக் கட்டுரையில் கோபத்துடன் அந்த ஆந்திரப் பெண்மணி தமிழக மாதர்களைப் பற்றி மட்டமாக எழுதியிருப்பது ஒருபுறமிருக்க, இத்தகைய வெறுப்புணர்ச்சிகளை வளர்க்கும் கட்டுரைகளைப் பிரசுரிப்பதால் யாருக்கு என்ன பயன்? தேசிய ஒருமைப்பாட்டுக்கு இவை துணை செய்யுமா? என்பதைக் குறித்துச் சிந்திக்க வேண்டும்.

சென்னை—24
25—10—66 ஜி. கிருஷ்ணவேணி

"**வ**ட்டமேஜை" பகுதியில், காதி கிராமோத்யோக் பவனில் தீபாவளி சமயம் ஜனதா செட் வாங்கிய திரு கிருஷ்ணமூர்த்தி என்ற அன்பர் ஒருவர் எழுதியுள்ள கடிதத்தைக் கண்ணுற்றோம். அவர் வாங்கிய செட்டில் வேஷ்டி 4 முழத்திற்குப் பதிலாக 3 முழமே இருந்ததென்று குறிப்பிட்டிருக்கிறார்.

ஏராளமான செட்டுகளைத் தயாரிப்பதில் தவறு நேர்ந்திருக்கக்கூடும். அம்மாதிரி தெரியும்போது வாடிக்கையாளர்கள் நேரே வந்து குறையை எடுத்துக் காட்டிச் சரக்கை மாற்றிப் போவதைத்தான் எதிர்பார்க்கிறோம்.

சென்னை வி. ராகவுலு, நிர்வாகி
24-11-66 காதி கிராமோத்யோக் பவன்

**க**ல்கி 13—11—66 தேதிய இதழில் ஓர் அன்பர் செயற்கை முறையால் பிறக்கும் கன்றுகள் குருடாகவும், பலஹீனமாகவும் பிறப்பதாக எழுதியிருந்தார். ஆனால் இயற்கையில் பிறக்கும் சில கன்றுகளும் குருடாகவும் பலஹீனமாகவும் பிறக்கின்றன. செயற்கை முறையால் இனவிருத்தியான அநேக கன்றுகள் ஆரோக்கியமாகவும், குருடில்லாமலும், பலமாகவும் உள்ளன. இத்திட்டத்தின் நோக்கம் பெண் இனக் கன்றுகளை விருத்தி செய்து பால் உற்பத்தியை அதிகப்படுத்த வேண்டுமென்பதே. இதில் நல்ல பலனும் உள்ளது. எனவேதான், பெண் இனக் கன்றுகளுக்கு உதவித் தொகை அளிக்கப்படுகிறது. மாதம் பதினைந்து ரூபாய் கொடுக்கப்படுகிறது.

சோளிங்கநல்லூர்
சென்னை—20 இரா. ஜவஹர்
21—11—66 கால்நடை உதவியாளர்

**தா**கூர் ஞாபகார்த்தமாக இந்தியா முழுதும் முக்கிய நகரங்களில் ஞாபகார்த்தக் கலை அரங்கு நிறுவ வேண்டும் என்று மத்திய சர்க்கார் தீர்மானித்து, எல்லா ராஜ்யங்களிலும் கட்டிடங்கள் நிர்மாணிக்கப்பட்டு, அவைகளின் மூலம் ஓரளவு வருவாய் வருகிறதாகத் தெரிகிறது. சென்னையிலும் 4—2—1961ல் தாகூர் ஞாபகார்த்தக் கலை அரங்கு நிர்மாணிக்கச் சர்க்காரே ஒன்பது பேர் அடங்கிய ஒரு நிர்வாகக் கமிட்டியை நியமித்தது. அந்தக் கமிட்டியின் நிர்வாகத்தில் சென்னை நுங்கம்பாக்கத்தில் உள்ள கொச்சி ராஜா காலனியில் தாகூர் ஞாபகார்த்தக் கலை அரங்கு நிர்மாணிக்கத் தீர்மானித்து, சர்க்காரால் வழங்கப்பட்ட இடத்தில் பின்புறம் பெயரளவில் நான்கு அறைகள் மட்டும் கட்டப்பட்டு, உயர்ரக மொசாயிக் தளம் போடப்பட்டிருக்கிறது. இதைப் பற்றி விசாரிக்கும் போது மேற்படி அறைகள் கலைஞர்கள் ஒப்பனை செய்துகொள்ளும் அறைகளாகக் கட்டப்பட்டிருக்கின்றன என்றும் வெகு நாட்களாக இவை கவனிப்பாரற்றுக் கிடக்கின்றன என்றும் தெரிய வருகிறது. முக்கியமாகத் தேவைப்படும் கலை அரங்கு கட்டுவதற்கு முன்பே ஒப்பனை அறைகள் கட்ட வேண்டியது அவசியம்தானா?

சென்ற ஆறு வருட காலமாகத் தாகூர் ஞாபகார்த்தக் கலை அரங்கைக் கட்டி முடிப்பதற்கு முயற்சி எடுக்காமல் பெயரளவில் ஒருசில அறைகளை மட்டும் கட்டிவிட்டுக் கொடுக்கப்பட்ட நிதியைத் தகுந்த முறையில் பயன்படுத்தாமல் இருப்பதற்குக் காரணம் என்ன?

தாகூர் ஞாபகார்த்தக கலை அரங்கை நிர்மாணிக்க ஏற்கனவே பொருள் செலவு செய்திருக்கிறபடியாலும், சென்னை சர்க்கார் கலை வளர்ச்சியில் ஆர்வம் கொண்டிருப்பதாலும் உடனடியாக இந்தக் கலை அரங்கைப் பூர்த்தி செய்து நல்ல நாடகக் கலை அரங்கு இல்லாத குறையை விரைவிலேயே நிவர்த்தி செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை—14 டி. என். சிவதாணு

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும் பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!




பிரில்க்ரீம் மட்டுமே

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, சேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.

**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலகமுழுவதிலும் லக்ஷகணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

BP/11/P/1165 TM